"தமிழ் நாடெங்கும்"




# வனசுந்தரி

டைரக்ஷன் : **T.R.ரகுநாத்**

P.U.சின்னப்பா • T.R.ராஜகுமாரி • T.S.பாலையா • S.வரலக்ஷ்மி •
N.S.கிருஷ்ணன் • T.A.மதுரம் • லலிதா • பத்மினி • C.R.ராஜகுமாரி
R.பாலசுப்ரமண்யம் • D.பாலசுப்ரமண்யம் • M.G.சக்ரபாணி
.... புளிமூட்டை ராமசாமி • நடித்தது .....

டிஸ்ட்ரிப்யூடர்கள்

| | | |
|---|---|---|
| மதுரை, ராமனாதபுரம் & திருநெல்வேலி ராமனாதன் பிக்சர்ஸ், காரைக்குடி | திருச்சி & தஞ்சாவூர் ஜம்பு பிக்சர்ஸ் திருச்சினாப்பள்ளி | வட, தென் ஆற்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்கள் ரிபப்ளிக் பிக்சர்ஸ், வேலூர் |
| கோயமுத்தூர் & நீலகிரிகளுக்கு : தி கோயமுத்தூர் தியேட்டர்ஸ் லிமிடெட் கோயமுத்தூர் | சேலம் : தனலக்ஷ்மி பிலிம்ஸ் சேலம் | திருவாங்கூர், கொச்சின் & மலபார் திருவனந்தபுரம் - ஸினி பிலிம் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், திருவனந்தபுரம் |
| ஸிலோன் ஸிலோன் என்டர்டெய்ன்மென்ட்ஸ் லிமிடெட், கொழும்பு | எப். எம். எஸ். ஷா பிரதர்ஸ் லிமிடெட் சிங்கப்பூர் | |



ஸ்டூடியோ நியூடோன்

## நீங்கள் உங்கள் பற்களை

## இன்று மக்ளீன் செய்தீர்களா?



"நான் எப்போதும்
'மக்ளீன்' தான் உப
யோகிக்கிறேன்;
ஏனெனில் வாய்க்கு
ஒரு இனிப்பும் கவர்ச்
சியும் அது தருகிறது.
என் பற்களை அது
நன்கு பாதுகாக்கிறது
என்று பார்த்தாலே
தெரிந்து கொள்
ளலாம்"

மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

வாயைச் சுத்திகரித்து
உங்கள் ஈறுகளைப் பாதுகாக்கிறது

மேலே உள்ள கறைகளை அகற்றி

பற்களுக்கு வெண்மை

தருகிறது

எல்லாம் செய்யக்கூடிய ஒரே பற்பசை மக்ளீன்ஸ். பற்களை பளபளவென்று வெண்மையாயிருக்கச் செய்து, உமிழ் நீர் அதிகரிப்பால் பல் சொத்தை பிடிப்பதைத்தடுத்து, மூச்சை சுகந்த மணம் கமழுவதாய் செய்து, உபயோகிப்பதற்கு ஆனந்தம் அளிக்கிறது இது.

பிரத்யேகமான, பிறர் பின்பற்ற முடியாத தயாரிப்பு மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை. இதன் பரிபூரண சுத்தத்திற்கு உத்தரவாதம்.

இன்றே மக்ளீன்ஸ்

வாங்குங்கள்




MTX 3TM

# பெர்குஸன்

வருஷ முழுவதும் குறைந்த செலவில்
சேவை புரிகின்றது

விலை ரூ. 6500
உங்களூர் டெலிவரிக்கு

விற்பனை வரி உள்ளூர்
வரி பிரத்யேகம்

FERGUSON SYSTEM

"பெர்குஸன்" டிராக்டர் ஏராளமான தினுசு கருவிகளுடன் கூடியிருப்பதால், பண்ணை வேலை எதையும் சிக்கனமாயும் சிறப்பாயும் செய்து முடித்து, மார்க்கட்டில் கிடைக்கும் வேறெந்த டிராக்டரையும்விட உழைப்பிலும், அமைப்பிலும் உன்னதமானதாக விளங்கி வருகிறது. இது சம்பந்தமான கல்வி போதனை மற்றும் பழுதுபார்க்கும் திட்டங்களும், இந்தியா முழுவதிலும் கிடைக்கும் ஏராளமான ஸ்பேர் பாகங்களும், ஸர்விஸும் 'பெர்குஸன்' டிராக்டர் ஸ்தாபனத்திற்கே பிரத்யேகமான அம்சங்களாகும். படத்தில் காணும் 10" இரு மழுக் கலப்பை எந்தவிதமான நிலங்களிலும் அப்பட்டமாக வேலை செய்யக்கூடியது.



**கிரெய்ன் டிரில்**

இந்த பிரசித்திபெற்ற டிரில் மணிக்கு நாலு ஏகர் நிலங்களில் விதைகளைத் தூவும்



**டாண்டம் டிஸ்க ஹாரோ**

உழுதபின் மண்கட்டிகளை உடைத்து விதைப்பதற்கு பண்படுத்துகின்றது

*வினியோகஸ்தர் :—*



## கமானி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்.

கமானி சேம்பர்ஸ், நிகல் ரோட், பாலர்ட் எஸ்டேட், பம்பாய்.

**ஒவ்வொரு ஜில்லாவிலும் ஸ்டாகிஸ்டுகள் தேவை. டிராக்டர்களை ஓட்டிக் காண்பிக்கச் சொல்லுங்கள்**

---

*வியாபாரிகள் :*

**கமானி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்.**

**"ஸாகர் மான்ஷன்" — நெ. 2, ஜோன்ஸ் தெரு, — ஜி. டி. மதராஸ்**

**KB LDT. / F[1].**

## ஒரு வரம் கோருக!

இனி நீங்கள் சிறிதும் ஏமாற்றமடைய வேண்டியதில்லை. பெரு முயற்சியால் தயாரிக்கப்பட்ட "வசீகரன் கைக்குட்டை" மூலம் நீங்கள் விரும்பியவரை அடையக்கூடும். சிரிப்பு தவழும் குழந்தைகள் உங்கள் மடியில் கொஞ்சலாம். கடின சித்தம் படைத்தவர்கள் கூட உங்கள் காலடியில் விழுவர். உங்களுடைய சக்திவாய்ந்த ஆதிக்கத்திற்கு கட்டுபட்டு நிற்பர். வேலை கிடைப்பது இனி கனவாக இருக்காது. மலடியாக இருக்கும் மனைவிக்குக்கூட குழந்தைகள் பிறக்கும். இறந்தவர்களின் ஆத்மாவுடன் தொடர்பு ஏற்படும். உங்களுடைய மூதாதையர்களின் புதையல்கள் எங்கிருக்கின்றனவென்பது உங்களுக்கு கனவில் அறிவிக்கும். கோர்ட் தாவாக்களில் வெற்றி, லாட்டிரியிலும், பேரம், ஹேஷ்யங்களிலும் வெற்றிமேல் வெற்றி. பரீட்சையில் சுலபமாக தேர்ச்சி பெறுவீர்கள். தொழிலில் லாபம் கிட்டும். உங்களுடைய துரதிருஷ்டங்கள் நீங்கிவிடும். அதிர்ஷ்டம் உங்களுக்கு பாத சேவை செய்யும். சுருங்கக் கூறுமிடத்து உங்களுடைய விருப்பங்கள் அனைத்தும் பூர்த்தியாகிவிடும். உத்தரவாதம்: உங்கள் மனம் விரும்பியதை நீங்கள் அடையாவிடில் கைக்குட்டையை 6 மாதங்களுக்குள் திருப்பிக் கொடுத்துவிடலாம். வசீகரன் கைக்குட்டை நெ. 1, ரூ 1—15—0. விசேஷ சக்தி வாய்ந்த கைக்குட்டை ரூ. 3-15-0. 24 மணி நேரத்திற்குள் இதன் மகிமையைக் காணலாம். நமது "வசீகரன்" கைக்குட்டையால் இக்கலியுகத்தில் இந்த ஸ்வாமி உண்மையை ஸ்தாபிக்கிறார். இதன் உதவியால் கணக்கற்றவர்கள் தங்களுடைய ஆசைகளைப் பூர்த்திசெய்து கொண்டுள்ளனர். இந்த அரிய தருணத்தை தயவுசெய்து இழக்காதீர்கள்.



SHREE MAHABIR SWAMY (c. k.) KARTARPUR, E. P.

## பிரிய சகோதரிகளே!

நான் ஓர் நர்ஸ் அல்ல, டாக்டரும் அல்ல. எனக்கு வைத்தியமும் தெரியாது. நானோ உங்களைப்போல் ஓர் குடித்தனப் பெண். எனது கல்யாணமான ஒரு வருடத்திற்குப் பின் துர்ப்பாக்கியத்தினால் லிகோரியாவும் (வெட்டை) சூதக வியாதியும் ஏற்பட்டு விட்டன. மாதவிடாய் நின்று விட்டது. அவ்வாறு ஏற்பட்டாலும் மிகுந்த வேதனையுடன் சொற்பமாகவே வெளி வந்தது. வெள்ளை நீர் (ஸ்வேதப்ரதர்) அதிகம் வெளி வருவதால் தினம் தினம் மிகவும் பலவீனம் அதிகரித்துக் கொண்டு வந்தது. முகம் வெளுத்து விட்டது. வீட்டு வேலை செய்யவும் முடியவில்லை. எப்பொழுதும் தலை கிறுகிறுப்பு இருந்து வந்தது. இடுப்பு வலியும் ஏற்பட என் சரீரமே கெட்டு விட்டது. என் கணவர் நூற்றுக்கணக்கான ரூபாய் செலவு செய்து மருந்து வாங்கிக் கொடுத்தும் பலன் இல்லை. இரண்டு ஆண்டுகள் மிகுந்த துக்கத்துடன் ஓடி மறைந்தன. நல்ல காலமாக ஒரு நாள் ஓர் சந்நியாசி பிச்சைக்காக என் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தார். நான் பிச்சை போட வெளியில் வந்ததும் அவர் என் முகத்தைப் பார்த்து, "அம்மா, உனக்கு என்ன வியாதி? இந்த வயதிலேயே உன் முகம் பஞ்சு போன்று இருக்கிறதே?" என்றார். நான் முழு விருத்தாந்தங்களையும் கூறினேன். அவர் என் கணவரைக் கூப்பிட்டு ஓர் மருந்து சொன்னார். அம்மருந்தை 15 தினங்கள் சாப்பிட்டதும் என் முழு வியாதியும் தீர்ந்து விட்டது. ஆண்டவன் அருளால் இப்பொழுது நான் பல குழந்தைகளுக்குத் தாயாக இருந்து வருகிறேன். இம்மருந்தினால் நூற்றுக்கணக்கான பெண்களுக்கு நன்மை செய்தும் வருகின்றேன். இந்த அற்புத மருந்தை இக்கொடிய ரோகத்தினால் வாடும் என் சகோதரிகளின் நன்மைக்காகவே அசல் விலைக்குக் கொடுத்து வருகிறேன். ஆண்டவன் எனக்குப் போதிய செல்வம் அளித்திருக்கிறார். இதன் மூலம் நான் லாபம் சம்பாதிக்க விரும்பவில்லை. ஒரு பெண்ணிற்கு 15 தின மருந்தின் அசல் விலை ரூ. 2—14—0 [ரூபாய் இரண்டு அணா பதினான்கு] தபால் செலவு தனி.

இத்துஷ்ட ரோகத்தினால் பீடிக்கப்பட்டவர்கள் உடனே எழுதுங்கள். என் கையால் மருந்து தயாரிக்கப்பட்டு வி. பி. பி. மூலம் அனுப்புகிறேன். தர்மத்தின் பொருட்டு அசல் விலைக்கே மருந்து கொடுக்கப்படுகிறது. அவசியம் கவனிக்க: இந்த ரோகத்திற்குத்தான் என்னிடம் மருந்து உண்டு. மற்ற வியாதியைப் பற்றிய மருந்திற்கு எழுதற்க.

Shrimati, BIBI CHARAN PIARI

Sant Nagar (C. K.) Jullundur City




இப்போட்டியின் சீலிட்ட விடை சென்னை ப்ரீமியர் பாங்க் ஆப் இந்தியாவில் டிபாசிட் செய்யப்பட்டுள்ளது.

★ பிரவேசக்கட்டணம் கூப்பன் ஒவ்வொன்றுக்கும் அணு நான்கு மட்டுமே ★

முடிவு தேதி 10—3—51

| | | விடைகள் 1 | 2 |
|---|---|---|---|
| 1 | பிரபல வக்கீல் என்றால் இது இல்லாத கேஸை ஏற்றுக்கொள்வாரா? | ஆதாரம் | ஆதாயம் |
| 2 | வீட்டிலே தயாரிப்பதைபோல் ஓட்டல் பண்டங்கள் அவ்வளவு......ஆக இருப்பதில்லை. | சுசி | ருசி |
| 3 | முக்கியமான காரியமென்றால் இவனை நம்பி அனுப்பலாமா? | வேலைஆள் | வேற்றுஆள் |
| 4 | போலீஸாரைக் கண்டுவிட்டால் திருடர்கள்......சகஜம். | நடுங்குதல் | பதுங்குதல் |
| 5 | நள்ளிரவில் ஒருவர் திடீரெனக் கூச்சலிட்டால் இது காரணமாக இருக்கக்கூடும். | கனவு | களவு |
| 6 | பெண்களின் இதிலே மயங்கி மதியிழக்கும் வாலிபர்களுமுண்டு. | விழி | மொழி |
| 7 | எல்லா பயிரும் எல்லா இதிலும் விளைந்து விடுமா? | காலம் | நிலம் |
| 8 | ஒரு இது ஒருவருக்குப் பிடித்தமாயிருப்பதும் இல்லாததும் அவரவர் சுவையைப் பொறுத்தது. | கனி | கவி |
| 9 | இது இல்லாதவர்கள் கோயிலுக்குள் போவார்களா? | பக்தி | சுத்தி |
| 10 | இது இல்லாதவர்கள் வாழ்க்கையில் வெற்றி காண்பதும் அரிதுதான். | திறமை | பொறுமை |

மேலே உள்ள கட்டத்தில் பத்துக் குறிப்புகளும் அவை ஒவ்வொன்றுக்கும் இரண்டு இரண்டு விடைகளும் தரப்பட்டுள்ளன. அதில் குறிப்புக்கு மிகப் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடைகளை சாதாக் காகிதத்திலும் எழுதலாம். அச்சுக்கூப்பன்களும் தேவையானவர்களுக்கு அனுப்பப்படும். விடைகளை வார்த்தைகளாகவும் எழுதலாம், 1—2 எண்களை உபயோகித்தும் எழுதலாம். பர்முடேஷன் (Permutation) முறையும் அனுமதிக்கப்படும்.

கட்டணத்தை மணியார்டர் மூலமே தான் அனுப்பவேண்டும். ம. ஆ. ரசீதும் கண்டிப்பாய் கூப்பன்களுடன் சேர்த்து அனுப்பவேண்டும். மணியார்டர் பாரத்தின் அடிக்கூபனிலும் அனுப்புபவரின் முழு விலாசம் எழுதவேண்டும். இப்போட்டியின் சரியான விடை பங்குனி இதழ் காவேரியில் வெளிவரும். நேயர்களுக்கும் தபால் மூலம் அனுப்பப்படும் மானேஜரின் தீர்ப்பும் எமது நிபந்தனைகளுமே முடிவானதும் சட்டப்படிக் கட்டுப்படுத்துவதுமாகும். நிபந்தனைகள் வேண்டுவோர் எழுதவும்.

கூப்பனும் கட்டணமும் அனுப்பவேண்டிய விலாசம் :-

## மானேஜர், வரலக்ஷ்மி கம்பெனி

### "ஸ்ரீவாஸ்" பல்மநேர் P. O. (சித்தூர் ஜில்லா)

**"பாயிண்ட்ஸ்" முறை நமக்கில்லை! ஒரு தப்பு இரண்டு தப்பாக கணக்காக்கப்படமாட்டாது!**

போட்டி 11-ன் சரியான விடை:—

(1) சிப்பந்தி. (2) புருவம். (3) சந்தோசம். (4) நடை. (5) பக்தி. (6) கற்பனை. (7) மாது. (8) பணியாள். (9) நாயகன். (10) ஆராய்ச்சி. 1 2 2 2 2 2 1 1 2 1 2

(பரிசு விவரமும் ஜாபிதாவும் அடுத்த இதழில்)

## வரலக்ஷ்மிப் போட்டி - 10 முடிவு.

வரலக்ஷ்மிப் போட்டி நெ. 10
சரியான விடை

1... சிநேகம் ... 2 ...
2... சந்தை ... 2 ...
3... தொழில் ... 2 ...
4... பணி ... 1 ...
5... கவனிப்பு ... 2 ...
6... [illegible] ... 2 ...
7... நியாயம் ... 2 ...
8... [illegible] ... 2 ...
9... உறவு ... 2 ...
10... [illegible] ... 1 ...

We hereby certify that the above is the Solution in original deposited with us, by VARALAKSHMI COMPANY on 18th Dec 1950 in a sealed cover which was opend in our presence to day and that a copy of the above solution has been lodged with the bank.

For PREMIER BANK OF INDIA LTD.
[illegible signature]
Agent, (Madras) ..1.51

**முதற் பரிசு (சரியான விடைக்கு)**
**தலைக்கு ரூ. 61—3—0 வீதமும்**
**2வது பரிசு (ஒரு தப்புள்ள விடைக்கு)**
**தலைக்கு ரூ. 4—1—0 வீதமும்**
**3-வது பரிசு (இரண்டு தப்புள்ள விடைக்கு)**
**தலைக்கு ரூ. 0—8—0 வீதமும்**
பகிர்ந்து வழங்கப்பட்டன.
பரிசுகள் யாவும் 19—1—51 அன்று அனுப்பப்பட்டன.

★

மெரிட் பரிசு—அழகிய வெள்ளி டம்ளர் பெற்ற கலக்டர்—ஜனுப் வி. அப்துல் கபூர்,
(வரலக்ஷ்மி கலக்டர் நெ. 12)
பஜார் வீதி - கீரனூர். மதுரை ஜில்லா

★

### பரிசு பெற்றவர்களின் சுருக்கமான ஜாபிதா.

ஜி. ஷண்முகம் சென்னை, டி. வெங்கடசுப்பிரமணியம் சென்னை, பி. வி. கௌரியம்மாள் சென்னை, எச். ஏ. எஸ். மணி ஐயர் பரங்கிமலை, எம். எஸ். ரத்தினம் சிங்கப்பட்டு, சி. எம். செல்லப்பா சிங்கப்பட்டு, வி. ராமபத்திரன் மதுராந்தகம், ஜி. கன்னையன் கும்பகோணம், வி. என். சிவராமய்யர் மாயவரம், எஸ். ராஜகோபாலய்யர் மாயவரம், எம். எஸ். பி, அப்துல்கரீம்சேட் பட்டுக்கோட்டை, பி. நாகராஜன் தரங்கம்பாடி, எஸ். கணபதி தஞ்சாவூர், ஏ, ராயப்பன் திருச்சி, சி. ராமசாமி கரூர், எம். எஸ். என். ராஜம் மதுரை, வி. மணி ஆச்சாரி மதுரை எஸ். தங்கவேல் ஆசாரி மதுரை, கே. ராஜு மதுரை, பி. ஆர். பெரியூரான் மதுரை டி, ஜே. குப்புஸாமி ஐயர் மதுரை, டி. நடராஜன் மதுரை, என். சுப்புசெட்டியார் மதுரை, ஆர். கருப்பையா மதுரை, கே. என். கிருஷ்ணமூர்த்தி மதுரை, இ. ஷேக்மொஹிதீன் மதுரை, வா, சுப்பிரமணியம் பிள்ளை திருப்பரங்குன்றம், இ. ரத்தினம் சேர்வை குமாரம், எஸ். ஏ, மஜீது கீரனூர், கே. அஸ்ஸன் முகம்மது கீரனூர், எஸ். எஸ். ஸையதுகானி கீரனூர், ஆர். ஜானகி கல்லிடைக்குறிச்சி, எஸ். ராஜரத்தினம் தூத்துர்குடி, எம். பாலசுப்பிரமணியம் சாத்தூர், ஏ. முத்திருளாண்டி சேர்வை சாத்தூர், டி. நடராஜன் அருப்புக்கோட்டை, ஏ. கோபாலன் திருவனந்தபுரம், எஸ். தங்கப்பா திருவனந்தபுரம், டி. தங்கப்பன் பிள்ளை திருவனந்தபுரம், எஸ், சங்கரநாராயண ஐயர் திருவனந்தபுரம், கே. கங்காதரன் திருவனந்தபுரம், பி. தாணுப் பிள்ளை நாகர் கோயில், எம். ஏ. ஹகீம் மேட்டுப்பாளையம், எம். ஆர். நடராஜன மேடூர், எம். கணேசன் சேலம், ஆர். ரங்கமன்னார் சேலம், வி. பத்மாவதி குடியாத்தம், ஜி. மாசிலாமணி குடியாத்தம், பி. எஸ். மணி பங்களூர், என். ரங்கநாயகிஅம்மாள் பங்களூர், ஆர். ராமன் நாகபுரி, வி. பி. எல். வரதராஜன் ஜோத்பூர் ராஜஸ்தான், மிஸ். சந்திராவேலு புதுடில்லி, ஆர். ஐயா புதுடில்லி, [மற்றவர்களுக்கும் தபால் மூலம் அறிவிக்கப்பட்டுவிட்டது.]

### நேயர்களின் நல்லாசிகள்.

---

பி. எஸ். மணி
பங்களூர்
23—1—51

கனம் ஆசிரியர் அவர்களுக்கு,



பி எஸ். மணி

வணக்கம், தங்கள் வரலக்ஷ்மிப் போட்டி மிகவும் சிறந்தது. என் நண்பர்கள்யாவரும் இதை மிகவும் பாராட்டுகிறார்கள். நான் இரண்டு தடவை கலந்து கொண்டு இரண்டு தடவையும் பரிசு பெற்றது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. இப்போட்டியில் ஏமாற்றத்துக்கு இடமேயில்லை. இப்போட்டி நீடூழி வாழுமாறு நானும் என் நண்பர்களும் கடவுளை பிரார்த்திக்கிறோம். ★

### ரங்நாயகிஅம்மாள், பங்களூர்.

ஆசிரியருக்கு வணக்கம். புகழத்தக்கது.

தங்களின் வரலக்ஷ்மிப் போட்டி மிகவும் சிறந்ததாகவும், நம்பிக்கையும் உத்திரவாதமுள்ளதாகவும், இரண்டே மாற்று விடைகளைக்கொண்டு அறிவுக்கு விருந்தளிப்பதாகவும் இருப்பது மிகவும் புகழத் தக்கது. இப்போட்டி மேன்மேலும் சிறந்து விளங்குமாக. ★

[பாராட்டுக் கடிதங்கள் மேலும் வந்து குவிந்து கொண்டேயிருக்கின்றன, இட நெருக்கடியின் காரணமாக கடிதங்களை இங்கு பிரசுரிக்க இயலவில்லை என்பதை வருத்தத்துடன் அறியக் கோருகின்றோம். நேயர்கள் யாவருக்கும் எமது நன்றி. தனித்தனியாக பதில் அளிக்க முடியாமைக்கு அன்பர்கள் மன்னிப்பார்களாக.
—மானேஜர்]

---



கோபால்: (தன்னுடன் பிரயாணம் செய்யும் ஒருவரைப் பார்த்து) ஏன் ஸார், இப்படி ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் 'டீ' சாப்பிடுகிறீர்களே!

அவர்: நீங்கள் எல்லோரும் சோர்வுற்று எவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் அப்படியா இருக்கேன், பாருங்கள். களைப்பையும் சோர்வையும் போக்கி ஊக்கமூட்ட நான் 'டீ' யை நம்பியிருக்கிறேன். எத்தனைபேர் 'டீ' 'டீ' என்று கூவுகின்றனர். 'டீ' யின் குணம் அவர்களுக்குத் தெரியும். நீங்களும்தான் 'டீ' சாப்பிட்டுப் பாருங்கள். பிறகு என்னையே முந்தி விடுவீர்கள்.




'டீ' என்றால் என்ன? அதுதான் சிக்கனமானதும், களைப்படைந்த உடம்புக்கு ஊக்கத்தையும், தளர்ந்த மனதிற்கு உற்சாகத்தையும் மீட்டுக் கொடுக்க ஒப்பற்றதும், சுலபமாக தயாரிக்கக்கூடியதும், எங்கும் கிடைப்பதுமான தேசீயபானம். ஒரு கோப்பை 'டீ' சாப்பிட்டுப்பாருங்கள் அப்பொழுதே அதன் குண விசேஷங்களை உணர்வீர்கள்.

CTB 30 'ஸென்ட்ரல் டீ போர்ட'ரால் வெளியிடப்பட்டது.

# காவேரி

## பொருளடக்கம்

விக்ருதி மலர் 10 | மாசி இதழ் 7



குறிப்பு:

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

Edited & Published by N. R. Ramanujan & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

காவேரி

விக்ருதி மலர் 10

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்—''பாரதியார்

மாசி
இதழ் 7

# நமஸ்காரம்

நாதஸ்வரம் தமிழ் நாட்டிற்கென்றே சிறப்புற்ற வாத்தியம். அதுவும், தமிழ் மக்கள்—பாமரரிலிருந்து பண்டிதர் வரை, நாடோடிப் பிச்சைக்காரனிலிருந்து மாடமாளிகைகளில் வசிக்கும் கன தனவான்கள் வரை ரஸித்தனுபவிக்கும் வாத்தியம். அதற்கு மங்கள வாத்தியம் என்றும் பெயர். சுபகாரியம் எது நடப்பினும் அதற்கு அறிகுறியாக நாதஸ்வரம் அவசியம் என்று தொன்றுதொட்டுப் பழக்கத்திலிருந்து வருகிறது. கோவில் உற்சவங்களிலும் மற்றும் ஸ்வாமி புறப்பாடுகளிலும் நாதஸ்வரகானம் அத்யாவசியம்.

தற்காலத்தில் அவ் வாத்திய கோஷ்டியினருக்கு ஆதரவு குன்றிவருகிறது. இதற்குப் பல காரணங்கள் உண்டு. முன் காலத்தில் இக் கலையில் ஈடுபட்டிருந்த வித்வான்களுக்குக் கோயில்களில் விசேஷ சலுகையும் மான்யமும் அளிக்கப்பட்டு அவர்கள் வாழ்க்கைக்குப் பெருந்துணை அளிக்கப்பட்டது. எனவே, அதில் சாதகமும் பயிற்சியும் பலனளிக்கக் கூடியதாக இருந்துவந்தன.

ஆனால் தற்கால நாகரிகம் பணத்தை அடிப்படையாகக் கொண்டதாக மாறிவிட்டது. பொதுஜன ஆதரவும் தினே தினே மாறிக்கொண்டு வருகிறது. கலைஞர்கள் நிம்மதியாக வாழ வசதியளிக்க அரசாங்கம் முன்வரவில்லை. எனவே வருங்கால நாதஸ்வர சந்ததியினர் இக் கலையைப் பயின்று அதன் தரத்தைத் தளராது பாதுகாத்து வருவது இனி நடவாத காரியம் என்பதோடு மட்டுமல்லாது, பூர்வஜன்ம வாசனையுடைய அவ்வகுப்பினர் வேறு துறைகளில் ஈடுபட்டு இதைப் பகிஷ்கரிக்க ஆரம்பித்துவிட்டனர். மற்றக் கலைகளைப்போல் அல்லாது இக்கலையானது ஓர் சிறிய சமூகத்தாரின் ஏக போக உரிமையாகவே இருந்து வருகிறது. மற்றச் சமூகத்தினர் இக்கலையில் ஆர்வங் கொண்டு இதைப் பயில முன் வருவதில்லை.

எனவேதான் இக்கலையின் எதிர்காலம் கவலைக்கிடமாக இருக்கிறது என்று குறிப்பிடுகிறோம். தமிழ் நாட்டிற்கெனச் சிறப்புற்ற நாதஸ்வரக்கலை வளரச்செய்து பழைய காலம் போல் பிரகாசிக்கச் செய்யவேண்டுமென்றால், கலாபிமானிகளும் தேசிய அரசாங்கத்தாரும் இக்கலைக்கு ஆதரவளிக்க முன்வரவேண்டும். இதை எப்படிச் சாதிப்பது என்பதை ஓர் கமிட்டி பரிசீலனை செய்வது அவசியம். அப்படி ஏதும் முயற்சி எடுக்காமற்போனால் இக் கலை சீக்கிரத்தில் குன்றிப்போவது திண்ணம்.

ஸ்ரீமான் ரங்கராமானுஜ ஐயங்கார் மன்முவந்து பிரபல நாதஸ்வர வித்வான்களைப் பற்றி ஓர் ரஸமான கட்டுரை எழுதியுள்ளார். அதை இங்கு அடுத்தபடியாகப் பிரசுரித்துள்ளோம். ஸ்ரீமான் ரங்கராமானுஜ ஐயங்காரை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைப்பது அனாவசியம். 'ராமையா' தம் கட்டுரையில் அவரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

தமது இரண்டாவது 'மாவலிப்பொறிகள்' என்ற கட்டுரையில் சிந்தனையைக் கிளறும் சில பிரச்னைகளை எழுப்பியுள்ளார் 'ராமையா'. நீங்கள் அதை வரவேற்பீர்கள் என்று நம்புகிறோம்.

'கல்பனா' அடைக் கழுகு என்ற சிருஷ்டியை உங்கள் களிப்பிற்காக வரைந்துள்ளார். தஞ்சை ஜில்லாவிலுள்ள ராஜகிரி பண்டாரவாடை என்கிற கிராமங்களைப் பற்றி அநேகர் கேள்விப்பட்டிருப்பீர்கள். முஸ்லிம்கள் பெருத்த கிராமங்கள் அவை. அவைகளின் சரித்திர வரலாற்றை எடுத்துரைத்துள்ளார், ஸ்ரீமான் எம். எஸ். சுப்பிரமணிய ஐயர். அவர் கூறும் கதைக்கு ஆதாரமாக இன்றும் ராஜகிரியில் பாப்பான் தெரு என்று ஓர் பெரிய வீதி இருக்கிறது. ஆனால் மருந்துக்குக்கூட அங்கு பிராமணர்கள் இல்லை. எல்லாம் முஸ்லிம் வீடுகள்தான்.

பி. எஸ். பாரதியின் 'ஊனம்,' கே. வி. கே. யின் விளைவு என்ற கதைகள் ரஸபாவத்துடன் அமைந்துள்ளன. லண்டன் கடிதம் எழுதிவரும் லீலா கோபாலன் இம்மாதக் கட்டுரையில் சில விசேஷ அம்சங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

காவேரி

# அதிர்ஷ்ட நம்பர் பரிசுகள்

ஆரம்ப தேதியை எதிர்பாருங்கள்.

பரிசுபெற விசேஷ முயற்சியோ பிரவேசக் கட்டணமோ கிடையாது. **காவேரி** வாசகராக மட்டும் இருக்கவேண்டும். நம்பர் இடப்பட்ட அதன் பிரதியைக் கைவசம் வைத்துக் கொள்ள வேண்டும். மாதாமாதம் தனித்தனிப் பரிசுகள்.

விபரங்களுக்கு, **காவேரி பங்குனி** இதழைப் பாருங்கள்.

ஆசிரியர்

# பழைய நாதஸ்வர வித்வான்கள்

### ரங்க ராமானுஜ அய்யங்கார்

பரத ஸங்கீதம் வெகுகாலத்திற்கு முன்பே உன்னதமான பண்பாடடைந்த கலைச் செல்வம். உலகத்தில் காணப்படும் பல் வேறு இசை முறைகளில் நம்நாட்டு ஸங்கீதம் ஒன்றே ராகம் என்று தனிச்சிறப்பு வாய்ந்த அம்சம் உள்ளது. ராகத்துடன் இணைபிரியாது நிற்பது பல்லவி. இவ்விரண்டும் நாத வெள்ளமாக வானளாவிப் பரவ ஏதுவாக நாதஸ்வரம் என்ற ஒரு கருவியையும், அதன் இசைக்குத் தகுந்த கம்பீரமான தவில் என்ற ஒரு துணைக் கருவியையும் உண்டாக்கி, இதற்குப் பெரியமேளம் என்று பெயரிட்டு, இந்த இசை முறையைப் புராதனகாலம் முதல் ஒரு குலதனமாகப் போற்றி, காலப் போக்கின் இயற்கையை எதிர்த்து, இன்றளவும் தமது ஏகபோக உரிமையாக அனுபவித்துக் கலாசேவை புரியும் பெருமை இசை வேளாளர் மரபினதாகும்.

சரித்திரவாயிலாக நோக்குங்கால், இந்தக் கலை அநாதிகாலம் தொட்டுத் திராவிட சமுதாயத்தில் பரம்பரையாகவே வந்திருப்பதை அறியலாம். தற்போதைய நூற்றாண்டின் ஆரம்பத்தில் சோழவளநாட்டில் கியாதி பெற்ற நாதஸ்வர வித்துவான்கள் பலர் இருந்தனர். சராசரங்கள் அனைத்தையும் மதிமயக்கும் இன்பத்தேன்மாரி பொழியும் திருமருகல் நடேசன், இலக்கண இலக்கியங்களில் ஐயம் தீர்ந்து சம்பிரதாய நுட்பங்களில் தோய்ந்து கலாநிதிகளாக விளங்கிய கூறைநாடு நடேசனும், திருப்பாம்புரம் ஸ்வாமிநாதனும், காலம், இடம் இவற்றின் மர்மம் அறிந்து, ஸ்ரீசங்கரமடத்தில் கூடியிருக்கும் பக்தர்களின் உள்ளம் கரையும்படி தேவகானம் வழங்கும் கும்பகோணம் சுப்பிரமணியம், கடல் மடை திரண்டு வருவதுபோன்ற கற்பனைக் களஞ்சியமாக விளங்கிய கோனேரிராஜபுரம் வைத்தியலிங்கம், இவர்களின் புகழ் நாடெங்கும் ஒலித்ததை எனது சிறு பிராயத்திலேயே நான் நன்கு அறிவேன். அதற்கு அடுத்த தலைமுறையில் கீர்த்தி வாய்ந்தவர்கள், திருப்பாம்புரம் நடராஜஸுந்தரம், ஐயன் என்ற சகோதரர்கள், நாகபட்டினம் வேணுகோபாலன், திருச்சேறை வேங்கடராமன், திருவிடைமருதூர் சாரங்கபாணி, நீடாமங்கலம் சிங்காரம், சிக்கல் நடேசன், மதுரை பொன்னுஸ்வாமி, சிதம்பரம் வைத்தியநாதன், செம்பொன்னார்கோயில் ராமஸ்வாமி, கும்பகோணம் சிவக்கொழுந்து, மன்னார்குடி சின்னப்பக்கிரி, உறையூர் கோபாலஸ்வாமி முதலியோர். இவர்களுடைய மேளக்கச்சேரிகளை இடைவிடாது கேட்டு, ஒவ்வொருவரின் சிறப்பான அம்சங்களை நன்றாகக் கவனித்துப் பயன்பெறும் சந்தர்ப்பங்கள் அந்நாட்களில் எனக்கு மிகுதியாக உண்டு.

கலியாண ஊர்வலங்கள், தேவாலய உற்சவ வீதிவலங்கள் இவ்விரண்டே அக்காலத்தில் விஸ்தாரமான வினிகைகளுக்குற்ற வாய்ப்புகள். பண்டித பாமரர்; உயர்ந்த உத்தியோகஸ்தர், வாலிபர், முதியோர் அனைவரும் வீதியில் வரிசையாக அணிவகுத்து நிற்பார்கள். மேளக்கச்சேரி நடத்தும் கூட்டத்தினர் நல்லாடை உடுத்து, திருமண், திருநீறு நெற்றியில் இட்டு, சந்தனம், தாம்பூலம் முதலியவைகளுடனும் வசிகரத் தோற்றத்துடனும் லக்ஷ்மீகரமாக நிற்பது கண்கொள்ளாத காட்சியாகும். ராக ஆலாபனை, பல்லவி, இவ்விரண்டையும் விஸ்தரிக்கும் பொழுது அமைதி நிலவும் இரவில், அகண்ட வெளி முழுவதும் பரவித்திகழும் ஆனந்தப் பேரிசையில், அனைவரும் மெய் மறந்து இருப்பார்கள். நேரம் கழிவதையோ, கால்கள் கடுக்க மணிக் கணக்காக நிற்பதையோ கருதுவோர் அரிது. அக் காலத்தில் வித்துவான்களுடைய உடல் வலிவும் சலியாத உழைப்பும் வாத்தியங்களுடைய நாதக்கணிசமும் அதிசயிக்கத் தக்கவை. சமீப காலத்தில் ஒரு கஜத்திற்கு மேலான நீளமுள்ள நாதஸ்வரங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆனால் நீளம் வளரவளர நாதம் குறைந்து வருவதைக் கண்டு, பழைய வித்வான்களிடம் நாதஸ்வரம் கேட்டு அனுபவித்தவர்கள் வருந்தாதிருக்க முடியாது. மேலும் வாசிப்பவர் இருவர், ஐந்தாறு தவில்கள், தம்புரா, மிருதங்கம், போன்ற ஜமாக்களுடன் மேடைகளில் நாதஸ்வரக் கச்சேரிகள், காதில் கேட்காத சுருதிப் பின்னணி, முதலியவை அக்காலத்தில் கிடை

யாது. கிருதிகள், சில்லறைப் பாட்டுகள் இவையும் மிகச் சொற்பமே.

இரண்டு பர்லாங்கு தூரத்திலும் பளிச் சென்று கேட்கும் கம்பீரமான நாதம், கர்னுடக சுத்தமான ராக ஆலாபனே, அழுத்தமான துரிதகால ஸஞ்சாரிகள், விஸ்தாரமும் விவகாரமும் நிறைந்து த்ரிகாலங்களிலும் மிகவும் நிர்ணயமான பல்லவி—இவை செம்பொன்னுர்கோவில் ராமஸ்வாமி நாதஸ்வரக்காரரிடம் செவ்வனே விளங்கின. நாட்டைக் குறிஞ்சி, கானடா, யதுகுல காம்போஜி, ஜெஞ்சுடி, முதலியவை அவர் அடிக்கடி வாசிக்கும் ராகங்கள். ஆனுல் அவை ஒவ்வொரு தடவையும் புதிய சோபையுடனும் கற்பனேத் திறனுடனும் விளங்கின. அவர் பல பிரபுக்களின் ஆதரவைப் பெற்று ஸுகமாக ஜீவனம் நடத்தி வந்தார். அபார உழைப்பினுல் பிற்காலத்தில் உடல் நலம் குன்றி, இருதய நோயினுல் பீடிக்கப்பட்டும், அவர் எப்படியோ தமது வாசிப்பை மங்காத பொலிவுடன் காத்து வந்தார். அவருக்குப் பக்கபலமாக மிக்க திறமையுடன் தவில் வாசித்த பெரிய வித்வன்மணிகள் சக்திவேல், அம்மாசத்திரம் கண்ணுஸ்வாமி, வழுவூர் முத்து வீராசாமி, அம்மாப்பேட்டை பக்கிரி, முதலியோர். அதிருஷ்ட வசமாக ராமஸ்வாமி நாதஸ்வரக்காரரின் இசை கிராமபோன் தட்டுகள் மூலம் அமரத்துவம் பெற்றிருக்கின்றது.

"குப்பன் நாதஸ்வரம் கேட்டுத் தேவ கணங்கள் நர்த்தனம் ஆடும்" என்று என் பிதா சொல்லுவதுண்டு. அத்தனே கீர்த்தி பெற்றவரின் புதல்வர் மன்னுர்குடி சின்னப் பக்கிரி. அவருக்கு ஆசானுக வாய்த்தவரோ உயர்ந்த கர்னுடக சங்கீத வித்துவானுன நீடாமங்கலம் சிங்காரம். நல்ல கருமை நிறம், கட்டழகான தேகம், சிறிய தலே, எப்பொழுதும் விபூதி தரித்த விசாலமான நெற்றி, பெரிய கண்கள், வாசிக்கும்பொழுது தோள்களேத் தொட்டு விரியும் கழுத்து, இடுப்பில் கரையில்லாத 'மல்' வேஷ்டி, அதன் மேல் சுற்றிக்கட்டிய விலே மதிக்கக் கூடாத சரிகைப் பட்டாடை, தோளின் மீது ஒரு "உள்ளூர் துண்டு" என்ற துவாலே, கழுத்தில் இரண்டு வடம் தங்கச் சங்கிலி, கையில் தங்க நாதஸ்வரம்—இந்த உருவம் பார்ப்போர் மனதைக் காந்தம் போல் இழுக்கும் வனப்பு மிகுந்தது. ஸங்கீதமோ இணையற்றது. கம்பீரமும் இனிமையும், அதி விஸ்தாரமும், அவாங்மனகோசரமான வேலேப்பாடும், கரைகாணுத கற்பனேயும், வாய்ந்தது. கீரவாணி, ஸிம்மேந்திர மத்தியமம், ஷண்முகப்ரியா, ஹம்ஸப்ரமரி, முதலிய ராகங்கள் அவர் மூலமே அதிகமாகப் பழக்கத்திற்கு வந்தன என்று சொல்லுவது பொருந்தும். ஆபோகி, ரீதிகௌளை போன்ற நுட்பமான ராகங்களே அவர் நான்கு மணி நேரத்திற்குமேல் வாசித்ததுண்டு. அலே அலேயாக, ஸஞ்சாரிகள் ஒன்றை ஒன்று தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். நாலுகளேயில் பல்லவியைத் தொடங்கிவிட்டாலோ அம்பலவாணனின் திருநடனமே. அதி துரித காலத்தில் ஒவ்வொரு தாள ஆவர்த்தத்திலும் ஒவ்வொரு ராகமாக ஸ்வரக் கோவைகள் மின்னெளிபோலத் தோன்றி மறையும். அப்பொழுது நாதஸ்வரம் உதட்டின் வலது புறமாக நகர்ந்து தோள்களேப் பார்த்து நிற்கும். இரு கைவிரல்களும் "டைப்ரைட்டர்" மீது துடித்து எழுவன போல் காணும். நீண்ட நேரம்வரை சுவாசத்தைப் பூரகம் செய்து [தம் பிடித்து] வாசிக்கும் பொருட்டு, இடை இடையே உச்சுவாசம் செய்வது நீண்ட பேரொலியாக முழங்கும். இந்தச் சமயங்களில் கருவியைத் தாங்குவது கைகள் அல்ல; உதடுகளே. "அவருடைய உதடுகள் கருங்கல்தான். அவரைப்போல் வேறு ஒருவர் நறுக்கைப் பிடித்தால் உதடு பிய்ந்துபோம்;" என்று பலர் சொல்லுவார்கள். அவருடைய ஸ்வரக் கோவைகளின் சித்திரமும் துரிதகாலமும் நன்கு பிரகாசிக்கும்படி அம்மாப்பேட்டைப் பக்கிரியின் ஸுநாதமான தவில் அழகுக்கழகு செய்யும்.

1913ஆம் வருஷம் ஜனவரி மாதம் மகர சங்கராந்தியன்று மாலேயில் மன்னுர்குடி ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமியின் வீதி வலம் நடந்தது. அன்று முனிஸிபாலிடியின் உபயம். சின்னப்பக்கிரி ஊருக்கு வந்திருந்தபடியால் ஸ்வாமி கைங்கரியத்திற்குத் தாமே வலிய வந்தார். ஏனெனில் அந்த மூர்த்தியிடம் அவருக்கு இருந்த உண்மையான பக்தி ஒரு நிகழ்ச்சியினுல் முன்னேவிடப் பன்மடங்கு ஆற்றல் கொண்டிருந்தது. அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன் அந்தக் கோயில் தர்மகர்த்தாவிடம் அவருக்குக் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. அப்பொழுது தேவாலயத்தில் தமக்குள்ள பரம்பரை உரிமையைத் தாமே ராஜீநாமாச் செய்து, "என் ஜீவனத்தைப்பற்றி எனக்குக் கவலே இல்லே. என் நாதஸ்வரத்தின் நுனியில் கட்டியுள்ள சிறுமணியின் ஓசையில் மஹாராஜாக்கள் பரவசமடைந்து என்னேப் போஷிப்பார்கள். ஆனுல் உங்கள் பதவி சீக்கிரத்தில் நீங்கும். அப்பொழுது

என் ராஜகோபலனுக்கு நானே வந்து தொண்டு புரிவேன்," என்று சபதம் கூறி, வெளியேறி, திருநெல்லிக்காவல் என்ற கிராமத்தில் ஒருவரும் அறியாமல் சில காலம் தங்கி ஹடஸாதகம் செய்து, நாதஸ்வரத்தைத் தமக்கு வசமாக்கி, "நாதஸ்வரக்காரர்" என்ற சிறப்புப் பெயரால்மட்டும் அழைக்கப்பட்டு, நாடெங்கும் திக் விஜயம் செய்து, தமக்கொப்பாரும் மிக்காருமில்லாமல் விளங்கினர். அவருக்கு வழக்கமாகத் தவில் வாசிக்கும் அம்மாப்பேட்டையாருக்குச் செய்தி அனுப்பக்கூட அன்று நேரமில்லை. ஸ்வாமி புறப்பாட்டில் கோயில் முறைகாரரான பெரிய பக்கிரி இவரிடம் பகை கொண்டவர். அன்றையதினம் வேண்டுமென்றே பேகட ராகத்தை வாசித்தார். இரவு எட்டு மணிக்குச் சின்னப் பக்கிரி அந்த ராகத்தையே தொடர்ந்து, பன்னிரண்டு மணிவரை ஆவேசத்துடன் வாசித்தார். அப்பொழுது அவர் கையாண்ட சில ஸஞ்சாரிகள் நான் முன்பின் கேட்டதில்லை. மத்தியம ஸ்தாயி தைவதத்தை அம்சமாகவும், மத்தியம ஷட்ஜ ஸ்வரங்களை நியாஸமாகவும் அமைத்து, மந்தர பஞ்சமத்திலிருந்து ஒரு ஸ்தாயி வரை துரிதகால வரிசைகளைத் தொடுத்தபடியே மணிக்கணக்காக வாசித்து வந்தார். நடு நிசியில் இளைப்பாறும் பொருட்டுச்சற்று நிறுத்தி, கூட்டத்திற்கு வெளியே சென்ருர். தேக அசௌக்கியத்தினல்] இருப்பிடம் சென்றுவிட்டாரென்று பின்னர் செய்தி வந்தது. அவருக்கு விஷபேதி கண்டதாக மறுநாட்காலை செய்தி பரவி, ஊரெங்கும் பரபரப்பை உண்டுபண்ணியது. மஹா ரஸிகரும், கணித சாஸ்திரத்தில் உலகப் பிரஸித்தி பெற்றவருமான வி. ராமஸ்வாமி அய்யர் என்ற கலெக்டர் நேரில் தக்க சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். ஆயினும் அன்று மாலை பக்கிரி பரமனடி சேர்ந்தார். ஊரார் அடைந்த துயருக்கு எல்லை இல்லை. "சங்கீத ஜோதி மறைந்ததே!" என்றனர் சிலர். "இசை வள்ளல் எங்கே?" என்று கதறினர் பலர். "எப்படித் தேறுவோம்?" என்று ஏங்கினர் மற்றும் சிலர். இரு மனைவிமார் இருந்தும் ஸந்ததிகூட இல்லாமல், தம் குலதெய்வமான ஸ்ரீராஜகோபாலஸ்வாமி ஸன்னிதியில் மனமாரத் திருப்பணி செய்து மறைந்தார் சின்னப்பக்கிரி. என்னைப் பொறுத்த மட்டில் எங்கள் வீட்டுச் சுவரில் அவரைப்போல ஒரு உருவம் வரைந்து, வெகுநாட்கள்வரை அதைக் கண்டு அடங்காத் துயருற்றுச் சிந்தனையில் மூழ்கிக் கிடந்தேன்.

குறிப்பு: இந்தக் கட்டுரையில் காணப்படும் வித்துவான்களின் பெயர்களுக்குப் பின் "பிள்ளை" என்ற பதம் உபயோகிக்கப் படவில்லை. அதன் காரணம் அந்தக் கால வழக்கத்தைப் பின்பற்றி எழுதியதேயாகும். இசை வேளாளர் குலத்திலுதித்த மஹா வித்துவான்களிடம் இந்தக் கட்டுரை எழுதியவர் அளவிறந்த மதிப்பும் பக்தி விசுவாஸமும் உடையவர். ●



## 2-2-51 முதல் தமிழ்நாட்டில்

பல ஊர்களிலும் வெற்றிகரமாக நடைபெறுகிறது

# ஜூபிடரின்

# மர்மயோகி

(A)

சதிகாரி ஒருத்தி
சத்தியவதியை ஏவினுள்...
சட்டத்தை எதிர்த்த
கொள்ளைக்காரனைப்பிடிக்க...
? ? ?





சென்னை....
பிரபாத்
சித்ரா
ராஜகுமாரி
மற்றும் ராஜதானி பூராவும்
நடைபெறுகிறது......




திருவையாற்றில் நடந்த தியாகராஜ ஆராதனை வைபவத்தைப் பற்றி, நான் அங்கே போகாததால், ஒன்றும் எழுதவேண்டாமென்று உத்தேசித்திருந்தேன். விழாவைப் பற்றிப் பத்திரிகைகளில் எழுதியிருப்பதைப் படித்தேன். ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு வேடிக்கையாக ஏற்பட்டது. அதாவது தியாகய்யர்வாளுடைய உருப்படிகளை ஸ்வரப்படுத்தி, புதிய நூல் ஒன்று பிரசுரிக்க வேண்டுமென்று ஏற்பட்டதாம். பத்து வருஷங்களாக இந்தக் கருத்து ஒரு தீர்மானமாகவே இருந்து வருகிறது. 1941-ஆம் வருஷத்தில் நான்கு பிரமுகர்கள் சேர்ந்த ஒரு கமிட்டி ஏற்பாடாயிற்று. அந்தக் கமிட்டியார் ஒன்றும் செய்யவில்லை. இதன் பிறகு 1947-ல் க்ருதி மணிமாலை என்கிற நூல் ஸ்ரீ தியாகராஜ நூற்றாண்டு நூலாக நான்கு பாகங்களில் பிரசுரிக்கப்பட்டது. இந்த நூலை அனைவரும் புகழ்துள்ளார். சங்கீத வித்வான்கள், பத்திரிகை ஆசிரியர்கள், மற்றும் அநேக பிரமுகர்கள் எல்லோரும் வெகு சிலாக்கியமாகப் போஷித்திருக்கிறார்கள். இந்த நூல்களில் 400 தியாகராஜ கீர்த்தனைகள், 50 தீக்ஷிதர் க்ருதிகள், 34 சியாமா சாஸ்திரி க்ருதிகள், 12 சுப்பராய சாஸ்த்ரி க்ருதிகள், 45 க்ஷேத்ரக்ஞ பதங்கள் இவைகள் அடங்கியிருக்கின்றன. இந்த நூல்கள் இன்னம் பூர்த்தியாக விற்றபாடில்லை, இவைகளை வெளியிட்டுச் சேவை செய்த ஆசிரியரான ஸ்ரீ ரங்கராமானுஜ ஐயங்காருக்குத் தக்கபடி உற்சாகத்தை விளைவிக்க இன்னும் ஒருவரும் வரக்காணோம்.

இது இப்படியிருக்க, புதிய நூல் ஒன்று வெளிக்கிளம்ப வேண்டுமென்று தீர்மானமாயிருக்கிறது என்பதைப்பற்றிச் சிறிது வியப்புடனும் வேதனையுடனும் நான் வருந்துகிறேன். ஏனென்றால், இத்தகைய காரியங்களைப் பத்துப்பேர் சேர்ந்து அங்கத்தினர்களாகச் செய்யவேண்டியிருக்க ஒருவரே நின்று சொந்தப்பணத்தைச் செலவழித்து, நாளுக்கு நாள் நான்கு வருஷங்கள்தோறும், தினத்துக்கு 18மணி நேரம் உழைத்து, சேவை செய்த ஒரு அன்பருக்குக் கூலி கொடுக்கத் தகுந்த அந்தஸ்து நமது ஸமூகத்துக்குக் கிடைக்கவில்லையே என்கிற பெரிய விசாரந்தான். சங்கீத உருப்படிகளைச் சம்பிரதாய பாணியாகச் சீர்படுத்தி, ஸ்வரப்படுத்தி எழுதி, அச்சிட்டு, பிழை திருத்தி, புஸ்தகரூபமாக அச்சாபீஸிலிருந்து எடுத்துவந்து, சேமித்துவைத்து, அவைகளை விற்று முன்போட்ட பணத்தைப் பின்னாலெடுப்பது எவ்வளவு அசாத்தியமான காரியமென்பது வெகு சிலருக்கே தெரியும்! இந்தத் தொண்டில் ஈடுபட்டுப் பணக்கடனைத் தலைமேல் சுமந்திருக்கும் ஆசிரியரைச் சங்கீதாபிமானிகளில் ஒவ்வொருவரும் ஆச்ரயிப்பது கலைக்குச் செய்யவேண்டிய தொண்டில் முக்கியமானது. அப்படிச் செய்யாமல் புதிய இயக்கத்தை அங்கீகரிப்பது அர்த்தமற்றது என்றே சொல்லலாம்.

2

திருவையாற்றில் சில பிரமுகர்கள் ஐயர்வாளுடைய மறைந்துபோன கீர்த்தனைகளைப்பற்றிப் பேசினார்களாம். ஒருவர்

செஞ்சு காம்போதியில் "வரராகலயக்ஞுலு" என்கிற உருப்படி மறந்தே போய்விட்டதாகச் சொன்னாராம். அதைச் சொன்ன பிரமுகர் "க்ருதி மணிமாலை" என்கிற புஸ்தகத்தைப் பார்த்திருக்க மாட்டார் என்று நான் சொல்லு வேன். ஏனென்றால் அந்த நூலில் அந்தக் கீர்த்தனை அடங்கியிருக்கிறது. அந்தக் நூலின் விமரிசையை அறியாதவர் மேற் கூறிய பிரமுகரைப்போல் அனேகர் இருப் பார்கள் என்பதற்கு இதுவே ஒரு அத் தாட்சியாகும்.

### 3

கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைந்ததுபோல், நமது ஸங்கீதாபிமானிகள் அலைந்து திரிகிறார் கள். இதற்குக் காரணமொன்றுதான். நமது நாட்டில் ஆதரவு என்கிற மார்க்கத்தை வினி யோகப் படுத்துவதில் ரீதி கிடையாது, ஒழுக்கமும் கிடையாது. இச்சகம்பாடி, கொச்சை வாக்குகளை வைத்துக்கொண்டு கொஞ்சிக் குலாவி மண்டி போடுகிறவர் களுக்கே ஆதரவு அதிகமாகக் காணப்படு கிறது. இது எவ்வளவு சீக்கிரம் தொலை கிறதோ, அவ்வளவு சீக்கிரத்தில்தான் நன்மையேற்படும்.

### 4

சில வருஷங்களாக நமது நாட்டில் விழாக் கள எல்லாம் அதிகரித்து விட்டிருப் பதை நீங்கள் கவனித்திருக்கலாம். சங்கீத விழாவென்றால் ஐந்து தினங்களிலிருந்து பத்துத் தினங்கள்வரை நடைபெறுகின்றன. ஒரு புதிய ஸினிமா படமென்றால் ஒரு மாதத் திலிருந்து மூன்று மாதங்கள் வரை ஓடுகின் றது. ஒரு கிரிக்கெட் விழாவென்றால் ஒரு வாரத்துக்குக்குறையாமல் நடைபெறுகிறது. ஒரு கண் காட்சியென்றால் ஒரு மாதம் வரை யில் இழுத்துப் பறித்து நிற்கிறது. இத் தகைய விழாக்கள் அனைவற்றிலும் கூட்டத் தினர் முக்கியமாகச் சிறுவர்களும் சிறுமி களுமே. அவர்களில் பெரும்பாலர் பணப் பெருக்கும் செல்வாக்கும் உள்ளவர்கள் அல்ல. முதல் வகுப்பு, இரண்டாவது வகுப்பு டிக்கெட்டுகள் வாங்கிக்கொண்டு செல்லுப வர்கள் வெகு சிலரே. கடைசி வகுப்பு டிக் கெட்டுகள் வாங்குபவர்கள்தான் பாதிக்கு மேல் கூட்டத்தினர். இவர்களுக்குச் செய்யப் படும் ஏற்பாடுகள் எவ்விதமானவை என்று பார்த்தாலோ மனது மிகவும் சங்கடப்படு கிறது.

### 5

சமீபமாகச் சென்னையில் கிரிக்கெட் விழா நடந்ததல்லவா? அதில் முதல் வகுப்புக் கட்டணம் $12\frac{1}{2}$ ரூபாய்; இரண்டாவது வகுப்புக் கட்டணம் 10 ரூபாய்; மூன்றாவது வகுப்புக் கட்டணம் $7\frac{1}{2}$ ரூபாய்; நான்காவது $2\frac{1}{2}$ ரூபாய்; ஐந்தாவது $1\frac{1}{4}$ ரூபாய். கூட்டத்தினர் மொத் தம் நாற்பதினாயிரம் என்றால், கடைசி இரண்டு வகுப்பினர்மாத்திரம் பாதிக்கு மேலிருந்தனர். இவர்களுக்கு ஏற்பட்டிருந்த இட வசதிகளும் சௌகரியங்களும் சொல்லத் தகாத தாழ்மை யாயிருந்தன—திறந்துவைத்த காலரிகள் தான். தலைக்குமேல் கீற்றுக்கூடக் கிடையாது நாள் முழுவதும் நல்ல வெய்யிலில் அடிபட்டுக் கிடந்தனர். அத்தனைபேரும் காலையில் சுமார் ஐந்து மணிக்கே டிக்கெட்டுகளை வாங்கிக் கொண்டு இடத்துக்குப் போட்டிபோட்ட னர். காலை ஐந்து மணிக்கு உட்கார்ந்தவர் கள் சாயந்திரம் ஐந்து மணி வரையில் இருந்த இடத்தைவிட்டு எழுந்திருக்க முடியாமல் அடைபட்டுக்கிடந்தனர். வயிற்றிலும் உட லிலும் எவ்வளவு சங்கடங்கள் ஏற்பட்ட னவோ கடவுளுக்கே தெரியும், இடத்தை விட்டு எழுந்தவர்களுக்கு இடம் போயிற்று. இவர்களில் பெரும்பாலார் சுமார் பன்னிரண்டு வயது முதல் இருபத்தைந்து வயதுக்குள் ளடங்கிய மாணவர்கள் மாணவிகள், குமாஸ் தாக்கள், சிறிய சம்பளக்காரர். பணமில்லாத கொடுமையினால் இவர்கள் சங்கடங்களை அநுபவித்தது மாத்திரமா? உற்சாகம் தீர்ந்து விழா முடிந்து வீட்டுக்குப்போய் இவர்களில் பெரும்பாலார் ஜ்வரம், தலைவலி, வயிற்றுவலி இவைகள்போன்ற நோய்களால் பீடிக்கப்பட்டுப் பணச் செலவு, தேகவருத்தம் முதலிய துன்பங்களை யநுபவித்தவரேயா வர்.

### 6

ஆகவே நமது நாட்டில் அடிப்படையான கருத்துகளில் அநேகம் சீர்திருத்தப் படவேண்டும் என்பது எனது கொள்கை. கேவலம் பணம் உள்ளவனுக்கே வாழ் நிலையில் உத்கிருஷ்டமான சௌகரியங்கள் கிடைக்கும் என்பதும், பணமில்லாத வனுக்குக் கால்நடை ஜந்துக்களைவிட இன் னும் மோசமான நிலைமைதான் ஏற்படும் என் கிற கருத்தும் குடி கொண்டிருக்கிறது. ஒரே யடியாக, சமத்துவமென்பதைப் பிரபஞ்சத் தில் நிலை நிறுத்துவது அசாத்தியந்தான். ஆனாலும் ஒருவித அளவுக்குக் குறைவாக எவனும் கஷ்டப்படலாகாது என்கிற தத்து

வம் யாவரும் அங்கீகரிக்கவேண்டும். பொதுக் கூட்டங்களில் அபரிமிதமான பேதங்கள் ஏற்படலாகாது. ரயில் வண்டிகளில் முதல் வகுப்பு, இரண்டாவது வகுப்புக்காரர்களுக்கு, அளவில்லாத செல்வாக்கும், மூன்ருவது வகுப்புக்காரர்களுக்கு நரக அவஸ்தையும் என்கிற கொள்கை மாறி விட்டதல்லவா? மூன்ருவது வகுப்புக்காரர்களுக்கும் சிலவித அடிப்படையான செளகரியங்கள் செய்து வைக்கத்தான் வேண்டும் என்றல்லவோ தற்சமயக் கொள்கை? அது போலவே சங்கீதம், கலே, தேகப்பயிற்சி, ஆட்டம் இவைகளைத் தழுவிய விழாக்களில் நாடோடி சாமான்ய ஜனங்களுக்கு அடிப்படையாக வேண்டிய வசதிகள் ஏற்பாடு செய்தபின்தான் செல்வாக்குள்ளவர்களைக் கவனிக்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால், சமூகத்தில் வகுப்புத் துவேஷம் ஏற்படும். இந்த அல்பமான விஷயத்தில் நாமெல்லோரும் புத்தியைச் செலுத்தவில்லேயே என்று வருந்துகிறேன்.

## 7

மேற் கூறிய கிரிக்கெட் விழாவில் கஷ்டத்தை அனுபவித்த சிறுவர்களும் சிறுமிகளும் இன்னும் பத்து வருஷங்களில் வயது முதிர்ந்து நமது நாட்டின் வளர்ச்சியில் ஈடுபடக்கூடியவர்கள். அவர்களுடைய மனப்பான்மைகள் செழிப்பாயிருக்கவேண்டுமென்பது நமது கவலேயல்லவா? வகுப்பு வெறுப்பும், துவேஷமும் சிறு வயதிலேயே அவர்களிடம் பெருகிவிட்டால், வருங்காலத்தில் அவர்களுடைய மனப்பான்மை எத்தகையதாயிருக்கும்? பணமில்லாதவன் கஷ்டப்பட்டுத்தான் விருத்திக்கு வரவேண்டும். அதாவது முயற்சியில் கஷ்டப்படவேண்டும். வாழ்நிலேயிலும் கஷ்டப்படவேண்டுமா? பணமில்லாதவர்களுக்குப் போஷாக்குகள் செய்யவேண்டுமென்பது அரசாங்கச் சமூகத் தொண்டில் ஒரு முக்கியமான கொள்கை. அத்தகைய போஷாக்குகளுக்கு அவர்களிடமிருந்தே செலவுக்கு வேண்டிய பணத்தை வசூல் செய்து வசதிகளை வினியோகப்படுத்தவேண்டும் என்பது தவறு, முடியாத காரியம். பணமுள்ளவர்களிடமிருந்து சேமித்து இல்லாதவர்களுக்கு வினியோகம் செய்வதுதான் தர்ம நியாயம். ஆகவே அரசாங்கத்திலும் சரி, அரங்கங்களிலும் சரி, சமூகத்திலும் சரி, சங்கங்களிலும் சரி, எந்தப் பொதுக்கூட்டத்திலும் தாழ்மையான அந்தஸ்துள்ளவர்களுக்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்து வைத்தபின்தான் மேன்மையுள்ளவர்களைப் போஷிக்கவேண்டும்.

## 8

சில மாதங்களுக்கு முன் ஒரு வெள்ளிக்கிழமையன்று மதுரை மீனுக்ஷியம்மன் கோவிலுக்கு நான் போயிருந்தேன். கோவிலுக்குப் போவதென்ருலே எனக்குப் பயம். கூட்டத்தைக் கண்டால் பயம். அர்ச்சகர்களைப் பார்க்கும்போதெல்லாம் ஒரே பீதி. அவர்களிடம் அகப்பட்டுக்கொண்டு, சடங்குகளை முடித்துக்கொண்டு மரியாதையுடன் வெளியேறுவது ஒரு அசாத்தியமான காரியம் என்பது எனது சொந்த அநுபவத்தால் ஏற்பட்ட கருத்து. ஆகவே எப்பொழுது கோவிலுக்குப்போனலும் வெறுங்கையுடன் போய் வெறுங்கையுடன் வருவதுதான் என் வழக்கம். "பாலும் தெளிதேனும், பாகும் பருப்பும் இவை நாலுங்கலந்து உனக்கு நான் தருவேன்" என்கிற வாக்கில் நான் ஈடுபடவில்லே. வெற்றிலேபாக்கு, பழம் தேங்காய், சூடம் இவைகளால் மட்டுமே தெய்வத்தைத் திருப்தி செய்வது என்கிற கொள்கை என்னுடைய அஞ்ஞான முறையில் நுழையவில்லே. ஆகவே கோவிலுக்குப் போய், பிராகாரத்தைச் சுற்றிவிட்டு மூலவர் வரை சென்று மனதால் பணிந்து விட்டுத் திரும்பி விடுவது என் வழக்கம். அது போல் அன்று மதுரையில் செய்தபொழுது ஆச்சரியமான ஒரு சம்பவத்தைக் கண்டேன். அம்மன் சன்னிதியில் கூட்டம் நிறைந்திருந்தது; ஜாதி பேதமில்லாமல் ஆண் பெண் அடங்க எல்லோரும் தட்டுத் தட்டாக விநியோகங்களை வைத்துக்கொண்டு காத்திருந்தனர். சன்னிதியில் திரை போடப்பட்டிருந்தது. இரவு ஒன்பது மணி. இரும்புக் கம்பிகள் போட்டிருந்த கதவுகள் மூடப்பட்டிருந்தன. வில்லேச் சேவகன் கூட்டத்தினரை மிரட்டிக் கொண்டேயிருந்தான். அவர்களில் அநேகர் கதவைத் திற, கதவைத்திறவென்று கேட்டபோது, "முடியாது, உள்ளே பெரிய உத்தியோகஸ்தர் ஒருவருக்கு ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்யப்படுகிறது. அவர் உள்ளே இருக்கிருர். அவருடைய குடும்பத்தினரும் சிபபந்திகளும் இருக்கிருர்கள். கோவில் டிரஸ்டியும் ஆஜராயிருக்கிருர். அவருடைய உத்தரவின்பேரில் இன்னும் ஒரு மணி நேரத்திற்குக் கதவு திறக்கப்படாது" என்று சொல்லிவிட்டான். ஆகவே பத்து மணி வரையில் மீனுக்ஷி அம்மன் சிறைச்சாலேயில் அடைபட்டுக்கிடந்தாள். பெரிய உத்தியோகஸ்தருடைய பூஜையை

மாத்திரம் அங்கீகரித்துக்கொண்டு, வெளியே காத்துக்கொண்டிருந்த சுமார் முந்நூறு செல்வாக்கற்ற சாமான்ய ஜனங்களை அம்பாள் ஒதுக்கி வைத்திருந்தாள்! நான் இம்மாதிரி எழுதுவதை உங்களில் சிலர் அங்கீகரிக்கமாட்டீர்கள். நானும் ஒரு கறுப்புச் சட்டைக்காரரைச் சேர்ந்தவனு என்றும் கேட்பீர்கள். அதைப்பற்றி நான் கவலைப் படவில்லை. அடிப்படையாக நமக்கு ஏற்பட்டிருக்கும் சில கருத்துக்களில் உள்ள அழுக்குகளையே நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். சங்கங்களிலும், சபைகளிலுந்தான் முதல் வகுப்பு, இரண்டாவது வகுப்பு என்று ஏற்பட்டிருக்க, நமது தேவாலயங்களிலுங் கூட செல்வாக்குக்குத் தகுந்த வசதி என்று ஏற்பட்டிருப்பது பிசகல்லவா? இத்தகைய பிசகினுல் விளையக்கூடிய சமூகத்வேஷம் வருங்காலத்தில் எவ்வளவு கொடுமைக்கு ஏதுவாயிருக்கும்?

9

ஆகவே சென்ற மாதத்தில் நான் எழுதிய கட்டுரையில் "எங்கே பார்த்தாலும் அழுக்கு; சங்கீதத்தில் அழுக்கு, சாத்திரத்தில் அழுக்கு, அரசியலில் அழுக்கு, சமூகத்தில் அழுக்கு" என்கிற வாக்குகளை விஸ்தரித்தே இந்தக் கட்டுரையிலும் எழுதியிருக்கிறேன். ஜனநாயக சமூகத்தில் சிறப்பும் மேன்மையும் கிரமமாக ஓங்கி வளரவேண்டுமென்கிற கருத்துள்ளவர்கள் எல்லோரும், சமூகத்தில் உள்ள அழுக்குகளை விலக்குவதற்கே மார்க்கம் தேடவேண்டும். இல்லாவிடில் சமூகம் நசித்துப்போம். ஜனங்களின் மத்தியில் பகுத்தறிவு அதிகரித்துக்கொண்டு வருகிறது. அறிவுக்கு விரோதமான விஷயம் அநியாயத் தன்மையுடையது என்று ஏற்பட்டுவிட்டது. அதுவும் சரிதான். அடிமைத்தனத்தில் மூழ்கிக் கிடந்த மக்களுக்கு அநியாயமான கொள்கைகளில் பலவற்றைப்பற்றிக் கவலைப்படவோ, சீர்திருத்தம் தேடவோ அவகாசமில்லாமலிருந்தது. இப்பொழுதோ அடிமைத்தனம் நீங்கி, அரசியல் பொறுப்பு ஏற்பட்டு விட்டது. இதுதான் சமயம் சீர்திருத்தத்துக்கு. இந்தச் சமயத்தை விட்டு விட்டால் சமூகத்துவேஷம் குடிகொண்டு போம். இதை நாம் நன்கு மனதில் வாங்கிக் கொள்ளவேண்டும். ●




நண்பர்கள் சிரித்தார்கள். நானும் சிரித்தேன்.

ஹ ஹ் ஹ் ஹ் ஹா.........

ஹ ஹ் ஹ் ஹ் ஹா.........

ஓ ஹோ ஹ் ஹ் ஹோ.........

"நீங்களும் இவர்களுடன் சேர்ந்து சிரிக்காதீர்கள் ஸார்" என்றான் துக்ளக்.

கேட்டீர்களா ஸார்! நான் சிரிக்கக் கூடாதாம்! ஏன் ஸார் நான் சிரிக்கக் கூடாது! எனக்கு ஹாஸ்ய உணர்ச்சி இருக்கிறது தவறு ஸார்! ரஸிக்கிற மனோபாவம் என்னிடம் இருக்கிறதே ஸார்! அப்படித்தான் நான் சிரித்தாலும் இந்தக் கோணங்கி துக்ளக் யார் ஸார், என்னைச் சிரிக்காதே என்பதற்கு?

ஹூம்! எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது இந்தக் கோணங்கி துக்ளக்கை நினைத்துவிட்டால். பயலுடைய இரட்டை மண்டையும் கச்சட்டி மூஞ்சியும்! அடடா! முஸோலினியைத் தெரியுமா ஸார், உங்களுக்கு! நம்ப பயல் சாக்ஷாத் அந்த மகானுபாவனுடைய திரு அவதாரம், அந்த லக்ஷணமான உருவம். கோணங்கி வேறு செய்ய ஆரம்பித்து விட்டால் பார்த்தபேர் ஏன் ஸார் சிரிக்கமாட்டார்கள்?

கோணங்கி துக்ளக் என்று நம்ப ஊரில் யாரிடம் வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்களேன். 'பக்' என்று சிரிப்பார்கள். 'ஓஹோ அடைக்கழுகை'ச்சொல்கிறீர்களா?' என்றும் கேட்பார்கள்.

அதென்ன மகானுபாவனுக்கு இரண்டாவது பட்டம்என்று கேட்கிறீர்களா? தூரத்திலே இரை கிடந்தால் கழுகிற்கு மூக்கிலே வேர்க்கும் என்பார்கள் அல்லவா? நம்ப கோணங்கிக்குக் கிராமத்தில் யார் வீட்டில் அடை தட்டினாலும் தெரிந்துவிடும்.

அடுத்த நிமிஷம் பிதுங்கி விழுகிற தொந்தி சகிதம் நம்ப துக்ளக்கை அந்த வீட்டுத் திண்ணையில் பார்க்கலாம். நேரே உள்ளே போவான் என்கிறீர்களோ? மாட்டான். திண்ணையில் ஆரோகணித்து, 'கொட்டாவி' 'ஏப்பம்' சொடுக்கு, சோம்பல் முறித்தல் முதலிய சப்தங்களை எழுப்பி வீட்டிலுள்ளவர்களின் கவனத்தை இழுப்பான்.

"கடன்காரன் வந்துட்டானா" என்று உள்ளேயிருந்து சேஷிப்பாட்டி இரைவாள். பயல் எமப்பயல்! இந்தமாதிரி வசவுகளை எல்லாம் டன் டன்னாக வாங்கி ஸ்டாக் பண்ணுகிறதிலே நிபுணன். சேஷிப்பாட்டி சொல்றதை 'வெல் கம்' மாதிரியே நினைத்து, "நீ என்னத்திற்கு பாட்டி எரைஞ்சு சிரமப்படுத்திக்கிறே! நானே வந்துட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே உள்ளே போவான். பிறகு இரண்டு அடையாவது வாங்கிக்கொள்ளாமல் துக்ளக் வெளியே வர மாட்டான்.

கொடுக்கிறதைப் பேசாமல் சாப்பிட்டுவிட்டுப் போவான் என்னலாமா? ஊஹூம்... பயலுக்கு நாக்கு நாலு முழம். "தொகையலுக்கு இன்னும் இத்தனை பெருங்காயம் வைச்சிருக்கலாம், பாட்டி" என்பான.

"போறுமே...... நான் பெருங்காயம் வைக்காமே அடை தட்டறச்சேயே உனக்கு மூக்

கிலே வேர்த்துடறது... இன்னும் நிறைய வைச்சுண்டேனே, பிழைச்சேன்!'' என்று சேஷி அங்கலாய்த்துக் கொள்வாள்.

துக்ளக்கிற்குப் படிப்பு வாசனையே கிடையாது. மழைக்குக்கூடப் பள்ளிக்கூடக் காம் பவுண்டிலே ஒதுங்கியிருப்பானு என்கிறது சந்தேகம். ஆள் சும்மா குட்டியானை மாதிரி இருப்பான்; பிள்ளையாருக்குச் சுற்றினமாதிரி ஒரு எட்டரையணுத் துண்டை இடுப்பிலே சுற்றி, தொப்புளுக்குக் கீழே சொருகி இருப்பான்.

தெருவோடு போய்க் கொண்டிருப்பான் துக்ளக்.

''ஏலே, சித்தானைக்குட்டி, யார் வீட்டுக் கடா, போறே'' என்று திண்ணையில் ஜபம் பண்ணிக்கொண்டிருக்கிற சர்மா கேட்பார்.

''கோவிலே அடுத்த குப்பிச்சி வீட்டிற்கு'' என்பான் பயல்.

''வேர்த்துடுத்தாக்கும் மூக்கிலே'' என் பார் சர்மா.

கோணங்கி புன்னகை செய்தபடியே மேலே நடப்பான், அப்போது சர்மா வீட்டிற்கு எதிர்த்த வீட்டிலிருந்து, நடந்த சம்பாஷணையைக் கோட்டுக்கொண்டிருந்த கோபாலன் ''காலம்பற முத்தையன் கடையிலே குப்பிச்சி பேரன் வெங்காயம் வாங்கிண்டிருந்தான், அய்யர்வாள்! அப்பவே கழுகு அங்கே இருந்தது'' என்று சொல்வது துக்ளக்கின் காதில் விழத்தான் செய்யும். இருந்தாலும் வழக்கமான அதே புன்னகையைத் தவிர, துளி கோபத்தை அவன் முகத்தில் காண முடியாது.

''சீ! நீ சுத்தக் கோழையடா! ரங்க மாமா உன்னை 'எலே கழுகு'ன்னு கூப்பிடுகிறுர். நீ பேசாமல் சிரிக்கிருயே! நாலு வார்த்தைகூடவா கிடைக்கலே'' என்று ஒரு சமயம் எனக்கே பொறுக்காமல் கேட்டேன்.

எனக்கும் அதே புன்னகைதான் கிடைத்தது. ''இன்னிக்கி சண்டை போட்டுண்டுடலாம் சுலபமா! ஆனு நாளைக்கு அவாத்திலே அடை தட்டினு படி ஏற முடியுமா?'' என்ருன்.

அடை என்ருல் பையனுக்கு அத்தனை உயிர். நாலு மைலுக்கு அப்பால் உள்ள சின்னமனூருக்கு ஒரு காரியமாகப் போய்வர உங்களுக்கு ஒரு ஆள் வேண்டும், கூப்பிடுங்கள் பயலே. ''ஏலே கழுகு! சின்னமனூர் போய்வரணுமடா! வருவயா! மாமியை இன்னிக்கி ஜோரான அடை தட்டச் சொல்லியிருக்கேன்'' என்று ஒரு வார்த்தை கடைசியில் போட்டுவிட்டால் பயல் தக்ஷணமே கிளம்பிவிடுவான்.

''ஏலே, இந்தா வழியிலே கொறிக்கிறதுக்குக் கடலை ஏதாவது வாங்கிக்கோ'' என்று ஓரணுவை எடுத்துக் கொடுப்போம் நாம்.

''அதென்னத்திற்கு மாமா! வேண்டாம். மாமியை வெங்காயம், இங்காயம் போட்டு அடை தட்டச் சொல்லுங்கள். அதோடெ நல்ல தொகையல்......'' என்று இழுப்பான்.

''எல்லாம் ராத்திரி ஜோர்பண்ணிப்பிடலாம்! போயிட்டு வா'' என்று கண்ணைச் சிமிட்டிச் சிரித்தோமானுல் பையன் எவ்வளவு குஷியாக நடை போடுவான் என்கிறீர்கள்?

பாபம்! துக்ளக்கிற்கு அம்மா இல்லை. அப்பாவோ, பிராமணுர்த்தம், சவுண்டி. என்று அந்த உலகத்திலேயே 'கிராண்ட்டிரிப்'புகள் போய்க் கொண்டிருந்தார்.

ஊரில் எல்லா வீடுகளும் அவனுடையவையே! அவன் புகுந்து, புறப்படாத வீடு கிடையாது. ஒவ்வொரு பெண்மணி கையாலும் அடை சாப்பிட்டிருக்கிருன், அம்மாதிரி கொடுப்பவர்கள் என்ன காரியம் சொன்னுலும் தட்டாமல் செய்வான்.

கோபாலய்யர் சம்சாரம் லக்ஷ்மிக்கு எங்கள் துக்ளக் மேலே தனிப் பரிவு. ''என்னமோ, தாயில்லாப்பிள்ளை'' என்று அடிக்கடி அவனைப் பற்றிச் சொல்லுவாள். தெரு வழியாக துக்ளக் போய்கொண்டிருப்பான். வாசற்படியில் நின்று கொண்டிருக்கிற லக்ஷ்மி அவனைப் பார்த்துவிட்டு ''இங்கே வாடா!'' என்று கூப்பிடுவாள்.

இவன் அருகில் போய் நிற்பான், அவனுடைய மூஞ்சியும் பரிதாபக் கோலமும் அவள் மனதில் இரக்கத்தை உண்டாக்கிவிடும், ''ஐயோ! பிள்ளையே! ஏண்டா இப்படி வியாதியஸ்தன்மாதிரி இருக்கே! நன்னு குளிச்சு, துணியைத் துவைச்சு உடுத்திக்கப்படாதாடா? மூஞ்சியையும் மோரையையும் பார்க்கச் சகிக்கவில்லையேடா! வாடா, உள்ளே'' என்று வைது அழைத்துக்கொண்டு போவாள்.

கொல்லைக் கிணற்றடியில் உட்காரவைத்து நாலைந்து குடம் தண்ணீரை இழுத்து, தலையில் கொட்டுவாள். ''அந்த சோப்பை எடுத்து உடம்பெல்லாம் தேயடா, முண்டம்'' என்று கடிந்து கொள்வாள்.

''சோப் என்னத்துக்கு, மாமி, வேண்டாம்'' என்பான் பயல்

''சோப்பு வேண்டாமா? அப்போ வைச்சுடுடா கீழே! அந்தச் செங்கலை எடுத்து அழுத்தி,தேயடா! அப்போதான் உன் அழுக்குப் போகும்! பிறந்தயே பிள்ளை! ஐயோ!''

அரை மணிக்குப் பின்னுடி பார்த்தால் நம்ப துக்ளக், கோபாலய்யருடைய இழிந்த வெள்ளை



வேஷ்டி எதையாவது உடுத்தியிருப்பான், காடாக வளர்ந்திருக்கிற தலைமயிரிலே தேங்காய் எண்ணெய் வாசனை வீசும். நெற்றியில் குங்குமம் பளிச்சிடும். வயிறு மட்டும் காலியாக இருக்கும் என்கிறீர்களோ, ஊஹூம், சும்மா கிண்கிண் என்றே இருக்கும்.

இவ்வளவெல்லாம் அக்கரையாக லக்ஷ்மி செய்கிறாளே. மறுதினம் அதே சமயம் அவனைப் பாருங்கள், பழைய குருடி கதவைத் திறடி என்ற கதைதான்.

ஒருநாள் இரவு வேளையில் என் வீட்டுத் திண்ணையில் முகாம் போட்டான். "இன்னிக்கு நம்ப வீட்டில் அடை ஒன்றும் தட்டவில்லையேடா?" என்றேன்.

"இன்னிக்கு இங்கே படுக்கை மட்டும்தான்! ராயர் வீட்டிலேயே பலகாரம் பண்ணிபுட்டேன்" என்றான் துக்ளக்.

"என்ன பலகாரமோ!"

"வேறென்ன அடைதான்" என்றான் அவன்.

அவன் வாயைக் கிளறவேண்டும் என்று எனக்கு ஆசை!

"ஏண்டா கழுகு! இத்தனை வீட்டிலே அடை சாப்பிட்டிருக்கயே, யார் வீட்டிலேயடா, அடை நன்னா தட்டுகிறார்கள்" என்று கேட்டேன்.

அடை விஷயத்திலே அவனை நிபுணனாக ஒப்புக்கொண்டு நான் இப்படிக் கேட்டதுபற்றி துக்ளக்கிற்குப் பரம திருப்தி; பரம சந்தோஷம்.

"அ! அவர்கள் தட்டுவதெல்லாம் அடையா?" என்று அலக்ஷியமாகச் சொன்னான் துக்ளக்.

"என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்!" என்றேன் ஆச்சரியத்துடன்.

"பின்னே என்ன ஸார்! நம்ப ஊர் பொம்மனாட்டிகள் ஒருத்திக்காவது அடைன்னா என்னன்னாவது தெரியும் என்கிறீர்களா? போங்கள், ஸார், போங்கள்! அடை எல்லாம் பத்தமடை மீனாக்ஷி மாமியோடே போயிடுத்து" என்று வருத்தப்பட்டான் அவன்.

"அது யாருடா, பத்தமடை மீனுக்ஷி! அவள் என்ன அப்படி புதுசா அடை தட்டிஞள்?" என்று விசாரித்தேன்!

"போன வருஷம் பத்தமடையிலே சித்தப்பா வீட்டிற்குப் போயிருந்தேன், ஸார்! எங்க சித்தப்பா பத்தமடைக்கு ஆறு மைல் தள்ளி ஒரு கோவிலிலே பூஜை பண்ணிண்டிருந்தார். நான் போயிருந்தப்போ, அவருக்கு உடம்புசரியில்லாமெ போயிடுத்து! அவருக்கு பதிலா நான்தான் தினமும் பூஜை செய்யப் போவேன்; காலம்பற போனு 'சாயரட்சை'யும் செய்துவிட்டுத்தான் திரும்புவேன்.,,

"மத்தியானச் சாப்பாடு!"

"அடை" என்ருன் துக்ளக்.

"அடையா? அந்த அத்துவானக் காட்டில் உனக்கேது, அடை?"

"எங்க சித்தப்பாவுக்கு அத்தை ஒருத்தி இருந்தாள்! அவள் பேருதான் மீனுக்ஷி என்கிறது! அவள் காலம்பற நான் புறப்படறச்சே ஒரு அடை தட்டி கொடுத்தனுப்புவா?"

"அடி ஷக்கை! உன்பாடு வேட்டைதான்னு சொல்லு!"

துக்ளக் நாக்கைச் சப்புக்கொட்டிக்கொண்டான்! "அடை என்ருல் அடையா ஸார் அது? தேவாமிர்தம்! இவ்வளவுக்கும் பொட்டணத்திலே ஒரே ஒரு அடைதான் இருக்கும்!"

"ஒண்ணே, ஒண்ணு! அதெப்படி உனக்குக் காணும்!"

"நன்னு சொன்னேள் ஸார்! அந்த ஒன்றை ஒரு மனுஷன் முழுக்கச் சாப்பிடமுடியுமா? அடை இரண்டு இஞ்சு கனமிருக்கும் ஸார்! எத்தனை பெரிசு என்கிறேள்! பௌர்ணமி அன்னிக்கு சந்திரன் இருப்பானே, அத்தனை பெரிசு! அந்த ஒரு அடைக்கு அரிசி உளுந்து, நவதானியங்கள் எல்லாம் வகைக்கு மாகாணிப்படி போடுவள். நாலு கரண்டி எண்ணெயை ஊத்தி முறுமுறுன்னு வேக வைப்பள்! பவுன் கலரில் என்ன மாக இருக்கும் என்கிறீர்கள்?"—துக்ளக் அந்த நாளுக்கே போய்விட்டான்.

"தொட்டுக்கறதிற்கு என்ன?"

,,எள்ளுத்தொகையல்! மிளகு சீரகம் போட்ட அடைக்கு எள்ளுத்தொகையல் எப்படி இருக்கும் என்கிறீர்கள்" என்ருன் துக்ளக்.

"பின்னே ஏன் பத்தமடையை விட்டுட்டு வந்துட்டே"

"மீனுக்ஷிமாமி செத்துப்போயிட்டா, அப்புறம் அங்கே என்ன இருக்கு" என்று பெருமூச்சு விட்டான் அவன்.



"போறது! நம்ப ஊரிலே யாருக்கு 'பஸ்ட்' மார்க் கொடுக்கலாம்?" என்றேன்.

"லக்ஷ்மிமாமி நன்னு நாகரீகமா தட்டறு! ஆனல் குப்பிச்சிக்குத்தான் ஜோரான தொகையல் அரைக்கத் தெரிகிறது."

"இரண்டும் சேர்ந்த கை ஏதாவது இருக்கா?"

"காசிக்குப் போனுளே அம்மணிப்பாட்டி, அவளைச்சொல்லலாம்."

* * *

துக்ளக்கிற்கு வயது ரொம்ப ஆகிவிடவில்லை. பதினறு, பதினேழுதான் சொல்லலாம். சுத்தவெகுளி, அடை விஷயமாகப் பேசினல்தான் பேச்சில் ஸ்வாரஸ்யம் தட்டுமே தவிர மற்றப்படி வேறே எதைப்பற்றிப் பேசினலும் அதிலே கலந்துகொள்ளத் தெரியாது.

கோபாலய்யருக்குக் குழந்தைகள் இல்லை. அதனலும் லக்ஷ்மிக்குத் துக்ளக்மீது ஒரு இரக்கம். அவள் கோபாலய்யரைத் தொணப்பி அவனுக்கு உபநயனம் ஏற்பாடு செய்தாள். புருஷனும் பெண்டாட்டியுமே மணையில் உட்கார்ந்து ப்ரும்மோபதேசம் செய்துவைத்தார்கள். செலவெல்லாம் சொற்பம்தான். அதிகமானல் நாற்பது ரூபாய் ஆகியிருக்கும்.

துக்ளக் புதுப்பூணுல் சகிதம் வந்து நமஸ்கரித்தபோது லக்ஷ்மியின் கண்களில் நீர் ததும்பிற்று. "மகராஜனு இருடாப்பா" என்று வாயார, நெஞ்சம் தழுதழுக்க வாழ்த்தினள். ஒரு வாத்தியாரை ஏற்படுத்தி, தினசரி பத்து நாளைக்குச் சந்தியவந்தனம் சொல்லிவைக்கச் செய்தாள்.

"உங்க மனஸு ரொம்ப தயாளம் அம்மா" என்றுள் பக்கத்து வீட்டுக்காரி.

"ஒன்றும் பிரமாதமா நான் செய்துடலையே, பார்வதியம்மா! என்னவோ, தாயில்லாக் குழந்தை அவன்! எனக்கொரு குழந்தையிருந்தால் செய்யமாட்டேனு?" என்று சொன்னள் லக்ஷ்மி.

அக்கம் பக்கத்துக்காரர்கள் அவள் எதிரில்தான் புகழ்ந்து பேசினர்களே தவிர அவள் தலை மறைந்ததும் "கேட்டீர்களா அம்மா,! லக்ஷ்மிக்கு ஒரு ஸ்வீகாரப் பிள்ளை கிடைச்சுருக்கே, அதற்கு உபநயனமாம்! அதன் கோட்டான் மூஞ்சிக்கும் பித்துக்குளித்தனத்திற்கும் வேண்டியதுதானே!" என்று பேசிக்கொண்டார்கள்.

இதெல்லாம் பழைய சமாசாரம், பதினைந்து வருஷ காலத்திற்குப் பிறகு போனவாரம் கிராமத்திற்குப் போயிருந்தேன்! ஊருக்குள் நுழையும் போது இருட்டிவிட்டது. கோவில் பக்கம் திரும்பி அக்ரகாரத்தில் கால் வைத்ததும் எதிரே யார் யாரோ பெண்கள் கையில் விளக்குடன் வருவது தெரிந்தது. அவர்கள் என் அருகில் வந்ததும் நடுவிலிருந்த ஒரு அம்மாள், "யாரு கிச்சாமியா? வாடா அப்பா! நல்ல சமயத்திலே வந்தே! நம்ப குழந்தைக்கு இன்றைக்குக் கல்யாணம். ராத்திரி சாப்பாட்டிற்கு வந்துவிடு!" என்றுள். யார் என்று பார்த்தால் கோபாலய்யர் சம்சாரம் லக்ஷ்மி.

"யாருக்குக் கல்யாணம்?" என்று திகைத்தேன்.

"நம்ப குழந்தைக்குத்தாண்டா" என்றுள் லக்ஷ்மி.

"ஸ்ரீமான் கோணங்கி துக்ளக்கிற்கு" என்று என் காதில் சொன்னன் நண்பன்.

"அட பாவி! அடைக்கழுகிற்கா!?—என்று கூவப்போன என் வாயையும் இறுக்கி மூடினன்.

ராத்திரி சாப்பாட்டிற்கு மேலே கோபாலய்யர் வீட்டு மாடியில் பழைய நண்பர்கள் கூடியிருந்தோம். மாப்பிள்ளையும் அதில் கலந்துகொண்டான். பேச்சு ஸ்வாரஸ்யமாகக் கிளம்பியது.

"பேஷ்! பயலே! பெண் ஜோரா இருக்கிருளேடா? பெயர் என்ன? எங்கே, எப்படிப் பிடித்தாய்?" என்று கேட்டேன்.

என் பாராட்டுதல் அவன் தலையில் ஐஸ் வைத்ததுபோல் இருந்தது.

"மீனுக்ஷின்னு பேரு! ஊர் பத்த மடை" என்றுன் துக்ளக்!

"என்ன" என்று கூவினேன்.

"ஆமாம் ஸார்! பத்தமடை மீனுக்ஷி மாமின்னு முன்னே சொன்னேனே! செத்துப்போன அவளே இப்போ பிறந்திருக்கா! அதுவும் அதே ஊரிலே என்றுன் துக்ளக்.

"ஏய்! ரெட்டை மண்டை! என்ன கதை அளக்கிறே" என்றேன்.

"இல்லை ஸார்! எனக்கு இப்போ கிட்டத் தட்ட முப்பது வயசாயிடுத்து ஸார்! கல்யாணமே பண்ணிக்கிறதில்லேன்னுதான் நினைச்சுருந்தேன்! ஆனல் செத்துப்போன பத்தமடை மீனுக்ஷி மாமியே பிறந்து உயிரோடே வந்திருக்கும்போது அவளை நான் கட்டிக்காட்டா, என் ஆயுஸிலேயே ஒரு நல்ல அடை 'எக்ஸ்பர்ட்'டைக் கைநழுவவிட்டதாயிடும், இல்லையா ஸார்!" என்றுன் துக்ளக்.

நண்பர்கள் கலகலவென்று சிரித்தார்கள்; எனக்கும் சிரிப்பு வந்தது.

"சிரிக்காதீர்கள் ஸார்! பல் சுளுக்கிக்கொண்டு விடும்" என்றுன் அவன்.

"அப்போ, மீனுக்ஷியும் ஜோரா அடை தட்டுகிருள் என்கிருயாக்கும்"

"ஆமாம் ஸார்! அவள் கையாலேயே நனையப் போட்டு, அரைத்து, தட்டி—எள்ளுத் தொகையலும் அரைக்கப்பண்ணி—சாப்பிட்டுப்பார்த்த அப்புறம்தான் கல்யாணத்திற்கு ஒத்துக்கொண்டேனுக்கும்" என்றுன் துக்ளக்.

"ஓஹோ......" என்று நண்பர்கள் கூவினர்கள்; சிரித்தார்கள்.

"நீங்களும் இவர்களுடன் சேர்ந்து சிரிக்காதீர்கள், ஸார்" என்றுன் துக்ளக்.

ஏன் ஸார்! நான் சிரிக்கக்கூடாதா?

# எம். எஸ். சுப்பிரமணிய அய்யர்

காலையில் ஒன்றுவர், கடும்பகலில் ஒன்று வர், மாலையில் ஒன்றுவர், மனிதர் எல்லாம் என்றுள் ஔவை. மனிதரோ முக் குண வயத்தர். சாத்விகம், ராஜஸம், தாமஸம் எனும் குணங்கள் மாறிமாறி வரும். அவற்றினுக்கேற்ப, மானிடரின் சொல்லும் செயலும் சிந்தையும் மாறுபடும். ஆனது பற்றியே அங்ஙனம் ஔவை உரைத்தாள்.

இனி, மனிதர் உயர்வதும் தாழ்வதும், அவரது வினையின் விளைவாம். தேசமும் சமூகமும் சிறத்தலும் சாயதலும் காலத்தின் கோலம் எனலாம். ஊரும் நகரும் மிளிர் வதும் மாறுவதும் படையெடுப்பின் பயனே யாம். இது எப்படி? தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த ராஜகிரி—பண்டாரவாடை எனும் கிராமங்கள் சான்றும்.

பாரத பூமியின் தென் பகுதியில் தனியரசு கொண்டு, மலைக்கோயில்களும் சிற்பச் செல் வங்களும் சமைத்துச் சென்றுர் பல்லவ வேந் தரானுர், அவர்களிலே காஞ்சிப்பல்லவரைத் தமிழகம் ஒரு நாளும் மறக்கவொண்ணுது. அப்பல்லவரிலே ஒருவன் தமிழினுக்கு உயிர் தந்தான். இதற்கு "நந்திக்கலம்பக" வர லாறே சாட்சியாம்.

அத்தகைய காஞ்சியில் பல்லவரின் வீற டக்கித் தமிழகத்திலே சோழ ராஜ வம் சத்தை மீண்டும் நிலைநாட்டியவன் ஆதித்த சோழன் எனப்படுவான். அப்பெருமித வெற்றியின் விளைவாக ராஜகேசரி என்று தமிழ்ப் பெருமக்கள் அவனுக்கு அரிய பட் டஞ் சூட்டினர். பின்னுளில் அது சிறப்புப் பெயராகவே விளங்கலாயிற்று.

வடமொழி, தென்மொழி இரண்டையும் அப்பல்லவர் பெரிதும் வளர்த்து வந்தனர். அம்மொழிகளின் வல்லாரை விரும்பி உப சரித்து, வெகுவாக மானியமும் வழங்கி வந் தனர். அத்துறையிலே பல்லவரைக் விஞ்ச முனைந்தான் ஆதித்த சோழன்.

எங்ஙனமெனில், வடநாட்டிலிருந்து நான் மறையும், ஆறங்கமும் நன்குணர்ந்த வேத வித்தகரை வரவழைத்தான். தஞ்சைமா நகருக்கு அப்பால் காவிரியின் கரையிலே குடியேற்றுவித்தான்; நிலமும் புலமும் அளித்து, வீடு வாசலும் கட்டிக் கொடுத் தான். மேலும் வாழ்வுக்கு வேண்டிய பல வற்றையும் தேடித் தந்தான்.

அவ்வித்தகரின் புலமையும், தனது வள் ளன்மையும் விளங்க வேண்டி, அவர்கள் வாழ்ந்து வந்த இடத்தினை ராஜகேசரி சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட்டு அழைத்தான். அங்கே வேதாகமங்களும், வேத கோஷமும், வேத சாஸ்திரப் பயிற்சியும் மலிந்தன. எங் கும் விழுமிய ஓமப் புகையும் வானவீதியிலே மேக மண்டலத்துடன் கலந்தது.

முந்நூறு வருஷ காலம் ராஜகேசரி சதுர் வேதி மங்கலம் மகிமையுடன் துலங்கியது. ஆதித்தனுக்குப் பின் வந்த ராஜராஜன், ராஜேந்திரன், என்னும் சோழ வேந்தரும் அச்சதுர்வேதி மங்கலத்தைக் சாலச் சிறப் புறப் பாதுகாத்து வந்தனர். தமிழகம் முழுவதும் அவ்வித்தகரின் அறிவுக் கனலும் ஞான ஜோதியும் பரவி நின்றன.

ராஜகேசரி சதுர்வேதி மங்கலம் நாளடை வில் ராஜகிரி மங்கலம் என்றுயிற்று. அதன் பின்பே ராஜகிரி என மருவி வழங்கலாயிற்று. அந்நாளில் அங்கே அதியற்புதமான ஆலய மும், அடியார்களின் மடமும், மாணவரின் விடுதியும் அழகுற விளங்கி வந்தன. அவற் றின் சின்னங்களை இப்போதும் ராஜகிரியில் பார்த்து மகிழலாம், பதறலாம், பதைக் கலாம்!

ஆதித்த சோழனது காலத்திலும், அவ னுக்குப் பின் வந்த வேந்தரின் காலத்தும் சோழரின் தனசாலை, பொக்கிஷசாலை இருந்த இனிய தலம் பண்டாரவாடை எனப்படும். அன் றியும் ராஜகேசரி மங்கலத்து ஆலயத்தின் விசாரணைச் சபையாரும் அப்பண்டாரவாடை யிலேயே பொருந்தியிருந்து, திருக்கோயிலின் நிர்வாகத்தை நன்கு கவனித்து வந்தனர். சோழ வேந்தரது தர்மாசன நல்லறிஞரும அம்மங்கலத்தில் வசித்து வரலாயினர்.

பண்டாரம் என்றுல் பொக்கிஷம், உக்கி ராணம் என்று அர்த்தம். சதுர்வேதி மங் கல மறையவருக்கும் ஆலயத்துக்கும் அன் றுடம் அளிக்கும் தானிய வகைகளின் தானியக் களஞ்சியமும் பண்டாரவாடையிலேயே இருந்து வந்தது. ஆனதுபற்றியே, பண் டார வீடு, பண்டாரவாடை என்ற பெயர் ஏற்படலாயிற்று.

இந்நிலையை நினைக்கையில், இந்நாளிலே ராஜகிரி, பண்டாரவாடை ஆகிய இரண்டும் முகம்மதியரே மிக நிரம்பிய கிராமங்களாக இருக்கின்றனவே, இதன் காரணமும் வரலாறும் என்ன? என்று பலரும் சிந்திக்க நேரும். ஆதியிலே அசல் ஹிந்து கிராமங்கள் என்பதற்குரிய அடையாளங்கள் இப்போது நன்கு தோன்றவில்லையே என்றும் சிலர் நினைக்கக்கூடும்.

பதின்மூன்று, பதினான்கு இந்த நூற்றுண்டுகளிலே வடக்கே டில்லியிருந்து துருக்கப் படை வெள்ளம் கிளம்பி, மாலிக்காபூர், குஸ்ருகான் இவர்களின் தலைமையிலே தென்னாட்டில் புகுந்து பற்பல இடங்களையும் தவிடுபொடி பண்ணியது என்பது சரித்திர உண்மையல்லவா?

பின்பு அத் துருக்க வெள்ளம் இங்கிருந்து பொன்னும் மணியும், வராகனும் பூஷணமும் பொதி பொதியாகக் கொண்டு சென்றது என்பதையும் சரித்திர ஆராய்ச்சியாளர் அறிவர். அப்படையெடுப்புக் காலத்திலே தமிழகம் பட்டபாடு எப்படி? அந்நாள் கவிஞரொருவனது வார்த்தையில் விளம்புவதாயின்,

"வியாக்கிரபுரி — அதாவது சிதம்பரம் மெய்யாகவே புலிகள் வாழும் தலமாகவே துலங்கியது! ஸ்ரீரங்கத்திலே அரங்கநாதருக்கு ஆகாயமே கூரையாக இருந்தது. வீணைகானமும் வேத ஒலியும் நாத கீதமும ஒலித்த இடங்களிலே நரிகள் கும்பு கூடி ஊளையிட்டன!

"சதுர்வேத மங்கலங்களான கிராமங்களிலே முன்னம் எங்கும் ஓமப புகை கிளம்பும். படையெடுப்புக் காலத்திலோ பசுவின் மாமிசத்தைப் பாகஞ் செய்யும் புகையே கிளம்பலாயிற்று. தாமிரவர்ணியின் நதிக் கரையிலே இளமாதரின் வாசனைச் சுண்ணங்கள் கமழ்ந்ததுபோக, அம் மாதரசிகளின அழுகுரலும் இரத்தமுமே வீசா நின்றன!"

காவேரி, வைகை, தாமிரவர்ணி, இந் நதிதீரங்களிலே அப் படையெடுப்புடன் வந்த துருக்கர் தங்கி வசிக்கலாயினர். ஐயம்பேட்டை, லால்பேட்டை, ராஜகிரி, பண்டார

வாடை இந்த இடங்கள் அங்ஙனமே துருக்கரின் குடியிருப்புத் தலங்களாயின. தென் மதுரை மாநகரிலும் ஓர் ஐம்பது வருஷ காலம் துருக்கரின் ஆட்சி நடவாநின்றது, பதினலாம் நூற்ருண்டிலே. அப்போது மதுரை மீனுட்சி கோயில் மூடுண்டு கிடந்தது.

புராதன ஹிந்து சமூகம், கலாசாரம், பண்பாடு, பெருமை இவற்றைத் தென்ஞட்டிலேனும் காக்கவேண்டும் என்னும் கருத்துடன் தோன்றியதல்லவா விஜயநகர ஸாம்ராஜ்யம்! அப்பேரரசின் வேந்தன் தனது இளவலாம் கம்பன்னராயன், தளபதி கோபன்ன ராயன் இருவரையும் தமிழகத்துக்கு அனுப்பினுன் ஒரு பெரும் படையுடன்.

இவ்விரு போர்த் தலைவரும் தெற்கு நோக்கிக் கடுகி வந்தனர்; புண்ணியபுராதன தலங்களில் குந்திக் கிடந்த துருக்கரை விரட்டினர்; ஆலயங்களையெல்லாம் நன்னிலையில் அமைத்தனர்; நகரங்களைச் செம்மை செய்தனர். ஆங்காங்கே அட்டகாசஞ் செய்து திரிந்த துருக்கத் தலைவர்களைக் கொன்று குவித்தனர். மதுரையிலே துருக்கராட்சியை வேரறுத்தனர்!

அந்நிலையிலே துருக்க மக்கள் கூப்பிய கையினராய், "ஐயா! நாங்கள் இனி என் செய்வோம்? வடநாடு செல்ல வகையில்லை, ஆதலின் தமிழகத்தே தருக்கொழிந்து வாழ்ந்து வருவோம். தயவு செய்யவேண்டும்" என்று அவ்விரு போர்வீரரையும் வேண்டி நின்றனர்.

அதன்மேல், ஆங்காங்கே சிதறிக்கிடந்த துருக்கரை எல்லாம் திரட்டிச் சிற்சில இடங்களிலே சேர்ந்து வாழச் செய்தான் கம்பராயன். கும்பிட்டோரைக் குமைக்கவேண்டாம் என்ருன் கோபன்ன ராயன்.

பாண்டிய நாட்டின் கடலோரத்தே சிற்சில இடங்களில் பன்னெடு நாளாக முகம்மதியர் இருந்து வருகின்றனரென்ருல், பாண்டிய வேந்தருக்கு வேண்டிய பரிகளை அரேபியாவிலிருந்து கொணர்ந்து விற்ற முகம்மதியரின் சந்ததியாரே அவர்கள். தவிர, முத்துக் குளியை மதித்து, பாரசீக வளைகுடாவிலிருந்து இங்கு வந்து குடியேறிய முகம்மதியரின் வழித் தோன்றலுமாவர்.

தென்னிந்தியாவிலே — தமிழகத்திலே — முகம்மதியர் என்போர் முதன் முதல் தோன்றிய வரலாறு இஃதேயாகும். இது நிற்க.

தஞ்சையிலுள்ள கிழவர் பலருக்கும் 'ஹைதர்கலாபம்' என்பது தெரிந்திருக்கும். ஹைதர், திப்பு இவர்களின் வாள் வீச்சுக்குப் பயந்து, ஹிந்துக்களிலே சில பலர் முகம்மதிய மதத்தைத் தழுவ நேர்ந்ததென்பது சரித்திரப் பிரசித்தம்.

பின்னுளிலே, தஞ்சையில் அரசுகொண்ட நாயக்க வேந்தரும் மகாராஷ்டிர மன்னவரும் பெருந்தன்மை வாய்ந்த புருஷர்; சமயத்திலே சமரஸம் நிறைந்தோராவர். ஆதலின், முகம்மதியக் கிராமங்கள் மங்காது இருந்தன.

ராஜகிரி, பண்டாரவாடை இக் கிராமங்கள் முகம்மதியக் கிராமங்களாக மாறின விருத்தாந்தம் மேலே சொல்லியதாம், மராட்டியரின் காலத்திலே ஸையத்கோரி என்பான் அம் மன்னவரின் குடும்பத்தாரிலே மூவரை அடுத்தடுத்துக் கொலைபுரிந்து, அரசையே கைப்பற்ற எண்ணி முயன்ருலும், வெண்ணன் ஆற்றங்கரையில் அவனது கோரி இருந்து வருவதின் காரணம், நம்மவரின் மத ஸமரஸமேயாகும்!

நாகூர் ஆண்டவனது ஆலயத்துக்கு மராட்டிய மனனர் அளித்துள்ள ஆதரவை விரித்துரைக்க இது இடமன்ருயினும், ஆதரவளித்தனர் என்பதைக் குறிப்பிட வேண்டும். ஆர்க்காட்டு நவாபின் ஆட்சிக் காலத்திலே ராஜகிரி, பண்டாரவாடை கிராமங்கள் சலுகை பெறலாயின.

ஆங்கிலேயரின் ஆட்சி ஏற்பட்ட பின்போ, தங்களது சுயநலத்தை மதித்து, முகம்மதியரைத் தட்டிக் கொடுத்து, வரம்புமீறி வாழ்வளித்து வந்தனர் என்பதும் வேறு கதை,

கம்பன்ன, கோபன்ன ராயர்களிடம் "தமிழகத்தையே தாய் நாடாகக் கொள்வோம்; வடநாட்டுத் துருக்கருடன் தொடர்பு கொள்ளோம்" என்று வாக்களித்த பின்பே, ராஜகிரி, பண்டாரவாடை, ஐயம்பேட்டை இந்த இடங்களில் முகம்மதியர்கள் வசிக்க முடிந்தது என்பதை யாரும் மறப்பதற்கில்லை.

தமிழக முகம்மதியரோ வங்காள முகம்மதியரைப்போல் நடை, உடை, பாவனை, இவற்றிலும், பாஷையிலும், தாம் வசிக்குமிடத்தின் தன்மையை மேற்கொண்டிருத்தலும், தமிழ் மொழியிலே பல முகம்மதியர் வல்லுநராயிருப்பதும் கவனிக்கத்தக்கன.

கிராமங்களின் பூர்வ சரிதத்தை உற்று நோக்கின் பற்பல அற்புதங்கள் புலப்படும்.

# ஸிம்ப்ஸன் & கம்பெனி லிட்

[ ஆடோமோபைல் & ஜெனரல் இன்ஜினீயர்ஸ் உயர்தர கருவிகளும் உபகரணங்களும் உற்பத்தியாளர்கள் ]

**மதராஸ் 2**

எங்கள் சொந்த தயாரிப்புகள்

இணையற்றது நம்பக்கூடியது

*கீழ் கண்டவைகளை விற்பனை செய்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம் :–*

- வீல் பாரோஸ்
- கொல்லுலைகள், துருத்திகள்
- அஸிடிலைன் ஜெனரேடர்கள்
- பதப்படுத்திய உருக்கு ஸ்பானர்கள்
- கைத்தொழிலுக்குரிய ஸ்டீல் சக்கரங்கள்
- ட்ராலிகள், ட்ரெய்லர்கள்
- ஸாகெட் ரின்ஞ்செஸ் (23 டைப்)
- போர்ட்டபில் க்ரேன்கள் (தொழிற்சாலைகளுக்கு)
- வண்டிகளுக்கான ஸ்டீல் ப்ராப்ஸ்
- தண்ணீர் தொட்டிகள் & தூக்கு வண்டிகள்

வைகள்

*தலைமை தொழிற்சாலை*

**202/203, மவுண்ட்ரோடு, மதராஸ்–2.**

*பிராஞ்சுகள் :*

*பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, ஹைதராபாத் (Dn.)*

*டெப்போ :*

**கோயமுத்தூர்**




# தெய்வம்

# தந்தது

# மாயாவி

9

வாழ்வில் எனக்குச் சற்று அதிகமான ஓய்வு கிட்டுவது இதுபோன்ற நெடும் பிரயாணத்தில்தான். ஒன்று மாறி ஒன்றாகச் சதா மனதைச் சூழ்ந்து நிற்கும் கவலைகளை ஒதுக்கி விட்டு, அப்பிரயாணப் பொழுதில் உள்ளத்துக்கும் உடலுக்கும் முழு நிம்மதியை அளித்துவிடுவேன். எனவே, அதற்கேற்பப் பிரயாணத்தை வசதி செய்துகொள்வது என் இயல்பு, அந்த இயல்புடன் இன்று சென்னை மீனம்பாக்கத்தில் இறங்கியதும், நேரே எழும்பூர் ஸ்டேஷனுக்குத்தான் வந்தேன், முதல் வேலையாக மதுரைக்கு இரண்டாம் வகுப்பு டிக்கட்டு ஒன்றை வாங்கி, கிடைத்த மேல் 'பர்த்'தையும் ரிசர்வ் செய்துகொண்டேன், பிறகு அருகிலிருந்த ஹோட்டல் ஒன்றுக்குச் சென்று உணவை முடித்துக்கொண்டு, வண்டி பிளாட்பாரத்துக்கு வந்ததும் ஏறி அமர்ந்து, உடனே படுக்கையை விரித்து உறங்கியும் விட்டேன். ரெயில் சென்னையைவிட்டுக் கிளம்பியதுகூட எனக்குத் தெரியாது.

ரெயில் போய்க்கொண்டிருந்தது. நானும் என்னை மறந்து தூங்கிக்கொண்டிருந்தேன், ஆனால் என் மனம் தூங்கவில்லைபோலும், அது விழித்துக்கொண்டு கனவு ஒன்றை ரசமாகக் கண்டு அனுபவித்துக்கொண்டிருந்தது. கோவையற்ற அக் கனவின் சம்பவங்கள் அனைத்தும் எனக்கு இப்போது நன்றாக நினைவில்லை. ஆயினும் அதில் நடமாடியவர்களும், என்னை உறக்கம் நீங்கி விழிக்கச் செய்த இறுதி நிகழ்ச்சியும் நினைவில் இருக்கின்றன. என் கனவில் டே கூறிய கதையில் வந்த பாத்திரங்கள் ஒவ்வொருவரும் தோன்றினர்; ஏதேதோ பேசினர்; செய்தனர்; மறைந்துவிட்டனர். கடைசியாக அங்கே பத்மினியும் பாஸ்கரனும் வந்தார்கள். முதலில் பத்மினி வந்தாள். கண்ணைப் பறிக்கும் அழகொளி அவளிடமிருந்து வீசிற்று, எதிரே பாஸ்கரன் வந்துகொண்டிருந்தான். அவனிடமிருந்து அத்தகைய தேக காந்தியே ஒளித்தது. இருவரும் அருகே அருகே நெருங்கி வந்தார்கள். அவர்கள் நெருங்குந்தோறும் ஏனோ என்னுள் ஒருவிதப் பீதி எழுந்தது. அழகும் அழகும் இணையும் போது அங்கே பிரளயமேற்படுகிறது என்ற டேயின் வார்த்தைகளை நினைத்து, நான் பயத்தால் நடுங்கிக்கொண்டிருந்தேன். அவர்களைத் தடுத்து நிறுத்திவிட என் கரங்கள் துடித்தன. ஆனால் கால்கள் நகராது தரையோடு ஒட்டிக்கொண்டன. அவர்கள் நெருங்கிவிட்டார்கள்; ஒன்றறக் கலந்துவிட்டார்கள். அப்பொழுது பளிச்சென்று ஒரு மின்வெட்டு; 'படார்' என்று ஒரு இடியோசை!

நான் விழித்துக்கொண்டபோது மேல் 'பர்த்'திலிருந்து உருண்டு கீழே விழுந்திருந்தேன்.

சே! என்ன வெட்கக்கேடு; இத்தனை வயதான நான் தூக்கத்தில் உருண்டு விழுவதென்றால்! சக பிரயாணிகள் நகைக்கப்போகிறார்களே; உடம்பு வலியையும் பொருட்படுத்தாது, சுருட்டி மடக்கிக்கொண்டு எழுந்து, யாரேனும் பார்த்துவிட்டார்களோ என்று வெட்கத்துடன் சுற்றி நோக்கினேன். முதலில் கீழ் ஆசனங்களில் படுத்திருந்தவர்களிடமே என் பார்வை பாய்ந்தது, நல்லவேளை! அவர்கள் தூங்கிக்கொண்டுதானிருந்தனர். ஆனால், இது என்ன? சற்று முன்பு பிரளயத்தை உண்டுபண்ணி, என் தூக்கத்தைக் கலைத்துக் கீழே உருட்டித்தள்ளிய பேர்வழிகளையல்லவா, கிட்டத்தட்ட இவர்கள் நிகர்க்கிறார்கள்? இரு வெவ்வேறு பெஞ்சுகளில் படுத்து ஆழ்ந்த நித்திரையிலிருந்த அந்த ஜோடியை நான் மாறி மாறிப் பார்த்தேன். காந்தத்தில் கவர்ந்து இழுக்கப்பட்ட இரும்பைப் போல என் பார்வை அவர்களைவிட்டு நகர மறுத்தது. ஆயினும் சிறிது நேரத்துக்குப் பிறகு கனவு மயக்கந் தீர்ந்து உணர்வை எய்தியபோது என் அந்த நோக்கை அவர்கள் தவறாக எடுத்துக்கொண்டு விடலாகாதே யென்று அஞ்சியவனாக, மேலே ஏறிப் படுத்துக்கொண்டேன். கனவில் தோன்றிய பாஸ்கரன்–பத்மினியோடு இந்த ஜோடியை ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே கொஞ்ச நேரத்துக்குப் பின்னர் கண்ணயர்ந்தேன்.

காலையில் வண்டி மதுரை ஸ்டேஷனில் வந்து நின்று ஐந்து நிமிஷங்களாகிவிட்டபிறகுதான் நான் விழித்தெழுந்தேன், அவசரம் அவசரமாகப் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு வண்டியை விட்டு இறங்கினேன். இறங்கிக்கொண்டிருந்தபோதே அந்த ஜோடியின் நினைவு எனக்கு எழுந்தது. ஆவலுடன் உள்ளே ஊடுருவிச் சென்ற என் பார்வை ஏமாற்றத்தையே அடைந்தது. அவர்கள் படுத்திருந்த ஆசனங்களில் வேறு யாரோ அமர்ந்திருந்தனர்.

விடியற்காலம் எட்டரை மணிக்குத்தான் அன்று முகூர்த்த நேரம். எனவே, குருவோ, அல்லது வேறு எவரேனுமோ ஸ்டேஷனுக்கு வந்திருப்பார்களென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், டிக்கட்டைக் கொடுத்துவிட்டு வெளியேறிக்கொண்டிருந்தபொழுது, "ஸார்" என்று நடுத்தர வயதுடையவர் ஒருவர் என்னை நெருங்கினார்.

"நீங்கள் பம்பாயிலிருந்து வருகிறீர்களோ?"

"ஆமாம்,"

"மாயாவி என்பது..............!"

"நான்தான்"

"அவன், சொன்ன அடையாளத்தை வைத்துக்கொண்டு கண்டுபிடித்துவிட்டேன், பார்த்தீர்களா?" என்றபோது என் கைகள்

என்னை எவருக்கும் எளிதாகக் காட்டிக்கொடுத்து விடும் வழுக்கைத்தலையைத் தடவிக்கொண்டன.

"அதிருக்கட்டும்; நீங்கள் யார்?"

"நான் குருவின் தோழன். ஆமாம்; உங்கள் மனைவி குழந்தைகள் ஒருவரும்..........."

"அவர்கள் வரக்கூடவில்லை."

"அடடே! குரு ரொம்ப வருத்தப்பட்டுக் கொள்ளுவானே; சரி; வாருங்கள், போகலாம்."

அவர் அமர்த்திய ஜட்காவில் ஏறி, சம்பந்திகள் ஜாகைக்கு வந்துசேர்ந்தேன். பல் விளக்கிவிட்டு ஸ்நானத்துக்கு ஏற்பாடு செய்துகொண்டிருந்த போது அம்மா வந்துவிட்டாள்.

"நீ மாத்திரந்தானு வந்தாய், அப்பா; அவளை மட்டிலுமாவது கூட்டி வந்திருக்கலாகாதோ?"

"எப்படிக் கூட்டிவருவது? சொல்லுங்கள்."

"எனக்குப் பிராப்தமில்லை. என் ஒரே மாட்டுப் பெண்கூட இல்லாது கலியாணத்தை நடத்த நேர்ந்திருக்கிறதே."

"ஆமாம், நாங்களும் இவ்வளவு கெடு–பிடியாக நடந்துவிடும் என்று நினைக்கவில்லை."

"என்ன செய்கிறது சொல்லு, அப்பா; சென்ற வாரந்தான் பெண்ணை வந்து பார்த்தோம். உன் தம்பி பிடித்திருக்கிறது என்ருன். உடனே தாம்பூலத்தைக் கைமாற்றிக்கொண்டோம். முகூர்த்தத்துக்கு நாள் பார்த்தால், இன்றைக்குப் பிறகு வேறு நல்ல நாளே இல்லை. பெண் வீட்டுக்காரர்களோ, எப்படியும் இந்த முகூர்த்தத்திலே நடத்தி விட வேண்டுமென்று பிடிவாதமாக இருந்தார்கள். எனக்குந்தான் எப்பொழுதடா இவனை மணக்கோலத்தில் பார்க்கப் போகிறோம் என்று இருந்ததா? சரியென்று சொல்லிவிட்டு, ஊருக்குவந்து உடனே உனக்குத் தந்தியை அனுப்பினேம். நான் என்னென்னவெல்லாமோ, ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். கடைசியில் அவள்கூட வராமல் நடத்தும்படி ஆகிவிட்டது."

அம்மாவின் சொற்களில் இயல்பான வருத்தம் தொனித்தது. அந்த வருத்தத்தை மேலும் வளரவிடலாகாதென்று நான் ஒரு பொய்யைக்கூறி அவளைச் சமாதானப் படுத்தினேன்: இருந்தாலும், "அவள் என்னுடன் புறப்படக்கூடிய நிலையில் இல்லை. அவள் இப்போது வெளியில் உட்கார வேண்டிய சமயம்"

மணப் பந்தலில் அன்னையை அழைப்பதாக ஒருவர் வந்து விளித்தார். "நீ குளித்துவிட்டுப் பந்தலுக்கு வா அப்பா; தாலி கட்டுகிற நேரமாகி விட்டது." என்று கூறி, அவள் புறப்பட்டுச் சென்ருள்.

ஸ்நானத்தை முடித்து உடுத்திக்கொண்டு மணப் பந்தலில் நுழைந்த சமயம் என் தம்பி, மனைவியின் கழுத்தில் மூன்று முடிச்சுகளை இட்டுக்கொண்டிருந்தான். அப்போதுகூட அவன் கவனம் என் வருகையிலேயே இருந்ததுபோலும்; பந்தலில் காலடி வைத்ததுமே, என்னை நோக்கி முறுவலித்து, அருகில் வருமாறு சைகை செய்தான். கூட்டத்தை விலக்கிக்கொண்டு அங்கே சென்றதும், "மதனி வரவில்லையா" என்பதுதான் அவன் முதல் கேள்வியாக இருந்தது.

"அப்புறம் பேசிக்கொள்வோம்; நீ காரியத்தை முடி" என்று கூறிவிட்டு மணப் பெண்ணிடம் பார்வையைச் செலுத்தினேன்.

எனக்கு ஒரு கணம் தூக்கிவாரிப்போட்டது. ஏனெனில் முன் இரவு ரெயிலில் நான் பார்த்த அந்த அழகியை அப்படியே உரித்து வைத்தாற் போல் இருந்தாள், இந்தப் பெண்! 'ஒரு கால் அவளுடைய சகோதரியோ, என்னவோ?' என்ற நினைவு எழவே சுற்றி நின்ற பெண்களை நோக்கினேன். அதே உருவுடைய பெண் எவளையும் அங்கே காணவில்லையே!

நான் ஒரே சிந்தனையில் லயித்துவிட்டேன். பெண் வீட்டுக்காரர் ஒருவர் வந்து, புருஷர்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு என்னை அழைத்துச் சென்று சந்தனம்-தாம்பூலம் வழங்கினுர். உணர்வற்றவனுக அவற்றை ஏற்றுக்கொண்டு மீண்டும் பித்தனைப் போல், பந்தலில் நின்ற ஒவ்வொரு பெண்ணையும் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தேன்,

அன்னை ஒரு சிறுவனை அனுப்பி, என்னைக் காபி சாப்பிட அழைத்துச் சென்ருள். அன்பின் மிகுதியால் புகை மண்டியிருந்த கலியாண வீட்டு அடுக்களைக்கே கூட்டிச் சென்று காலை ஆகாரத்தை உண்ணச் செய்தாள். கை கழுவ வீட்டின் முற்றத்துக்குச் சென்றபோது, அதை அடுத்திருந்த தாழ்வாரத்தில் புதுப்புடவை சல–சலக்க நெற்றிக்கு இட்டுக்கொண்டிருந்த ஒரு யுவதியின்மீது என் பார்வை யதேச்சையாக விழுந்தது. அதன் பிறகுதான் சிந்தனைப்பித்து அடைந்து நின்ற என் மனம் ஒரு நிலைப்பட்டது. ஆம்; அவள்தான் நான் ரெயிலில் கண்ட பெண்! அவள் சகோதரிதான் என் குருவின் மனைவியாக இருக்கவேண்டும்.

ஆகாரத்தை முடித்துக்கொண்டு பந்தலை அடைந்தேன். மணச்சடங்குகள் முடிந்து தம்பதிகள், சம்பந்திகளின் ஜாகைக்குச் சம்பிரதாய கிரகப்பிரவேசம் செய்யப் புறப்பட்டுக்கொண்டிருந்தனர். கூட்டத்தில் சென்றுகொண்டிருந்த போதும், என் கவனம் அந்த வண்ணப்பெண்ணிடம்தான் இருந்தது. முன் வரிசையில் சென்ற பெண்கள் கும்பலிலிருந்து விலகி, கருநிறமும், சற்று விகார ரூபமும் உடைய ஒரு வாலிபனுடன்

என்னென்னவோ குழைந்து பேசியவாறு அவள் நடந்துகொண்டிருந்தாள்.

பத்தரை மணியோடு கிரகப்பிரவேசச் சடங்குகள் முடிவடைந்தன. சாவகாசமாய்ப் பேச, சமயத்தை நோக்கியிருந்த குரு உடனே என்னிடம் வந்தான். மதனி வராது கலியாணத்தை நடத்த நேர்ந்ததுபற்றி ஒரு புராணம் படித்து விட்டுச் சொன்னான்: "ஆனல் அண்ணு, இந்தப் பெண்ணை இத்தனை சடுதியில் மணந்துகொள்ள இணங்கியதிற்கு முக்கிய காரணம் ஒன்றே ஒன்றுதான். பெண்ணின் மூத்த சகோதரி பம்பாயில்தான் இருக்கிருள். அவள் கணவர் பெரிய உத்தியோகம் வகிப்பவராம். என் இளைய மாமனர் குடும்பத்துக்கும் அவருக்கும் அவ்வளவு ரசமில்லையென்றுலும், இந்தப் பெண்ணிடம் மிகுந்த வாஞ்சை உடையவர் என்பதால், எனக்கு அங்கே ஒரு நல்ல உத்தியோகம் தேடித்தந்து விடுவாரென்று பெண் வீட்டார் ஆசைகாட்டி விட்டனர்."

"உன் மனைவியின் பெயர் என்னடா, குரு? இளைய மாமனர்—இளைய மாமனர் என்று கூறிக்கொண்டிருக்கிருயே, பெண்ணுக்குப் பெற்ருேர் இருக்கிருர்கள், இல்லையோ?" என்று நான் சிறிது ஆர்வத்துடன் கேட்டேன்.



"அவள் பெயர் சாந்தி, அண்ணு. பெற்ருேர் இல்லை. இளைய மாமனர் கங்காதர சர்மாதான் அவளைக் குழந்தைமுதல் வளர்த்து, இன்று தாரை வார்த்துக் கொடுத்தார்."

சாந்தி!

என் மனம் டேயின் கேசுக்குக் குதித்தோடிற்று. "உன் மனைவியின் பம்பாய்ச் சகோதரியின் பெயர் என்ன?" என்று துள்ளிக்கொண்டு வினவினேன்.

"அவள் பெயர் என்னவோ, தெரியாது இருங்கள் விசாரித்துச் சொல்லுகிறேன்" என்று கூறி, குரு வெளியே சென்று; சற்று முன்பு அந்த ரெயிலில் பெண்ணுடன் சிரித்துப்பேசி வந்தானே அந்த அழகற்ற வாலிபனை என்னிடம் அழைத்து வந்தான். "இவர்தாம், நான் முன்பு உங்களிடம் கூறினேனே, அந்த என் அண்ணு—இவர் என் ஒன்றுவிட்ட மைத்துனர், பாஸ்கரன்." என எங்கள் இருவரையும் அறிமுகம் செய்து வைத்தான்.

"நமஸ்காரம்" என்று கை கூப்பிய அவ் வாலிபனுக்குப் பதில் அஞ்சலி செய்தேன். ஆனல் அச்சமயம் என் மனம் என்னிடம் இல்லவே இல்லை.

குரு அவனிடம் தொடர்ந்து வினவிக்கொண்டிருந்தான். "மிஸ்டர் பாஸ்கரன், சாந்தியின் சகோதரியின் பெயர் என்ன? பம்பாயில் அவள் கணவர் என்ன வேலையில இருக்கிருர்? அவர்கள் எவ்ரும் கலியாணத்துக்கு வரவில்லையா?"

"அவள் பெயர் பத்மினி; அவள் கணவரும் நாங்களும் அவ்வளவு ரசமாகப் பழகுவதில்லையென்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. ஆனுலும் பத்மினி, கலியாணத்துக்கு வந்திருக்கிருள். இன்று காலையில்தான் அவள் வந்து சேர்ந்தாள். ஸாருக்குக்கூட ஒருவேளை அவள் கணவரைத் தெரிந்திருக்கலாம்—டி. எஸ். வைத்தியநாத ஐயர் என்று பம்பாய் ரிசர்வ் பாங்கில் உதவி அக்கவுண்டண்டாக இருக்கிருர்."

என்னை ஒரே வியப்பில் ஆழ்த்திவிட்டு அவன் மேலும் பேசிக்கொண்டு போனுன். அதோடு மாத்திரமா? பேச்சில் இடையே, உள்ளே சென்று ரெயிலில் கண்ட அதே பெண்ணை அழைத்து வந்து, "இதோ பார், பத்மினி, இவர் தாம் பிரபல எழுத்தாளர், மாயாவி! பம்பாயில் இருப்பவர். நம் சாந்தியின் கணவருக்குக் கூடப் பிறந்த அண்ணுமாதிரி" என்று வேறு அறிமுகப் படுத்தி, என்னைத் திக்குமுக்காடச் செய்துவிட்டான்.

இவ்வாருகச் சங்கிலித் தொடர்போல ஒன்ருேடு ஒன்று இணைந்துபோன கதா பாத்திரங்களில் பலர் ஒரு விநாடியில் எனக்கு அறிமுகமாகி விட்டனர். ஆனல், அந்த அறிமுகம் கேசின் தன்மை

யில் புது அத்தியாயம் ஒன்றையும் கிளப்பி என்னை உலுக்கிற்று.

"இவள் பத்மினியானால், நேற்று இவளுடன் பிரயாணம் செய்து வந்த இவளுக்கு இணையான அழகன் யார்?"

"இந்த அழகற்ற வாலிபனே சர்மாவின் அண்ணா பிள்ளை பாஸ்கரன் என்றால், டேயிடம் அதே பெயர்—உறவுடன் வந்த அழகிய வாலிபன் யார்! அவன் தான் ரெயிலில் வந்தவனானால், எதற்காகப் பொய் உறவுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்?"

இந்தக் கேள்விகளின் காரணமாக டேக்குக் கூறப்பட்ட கதையில் ஏதோ பித்தலாட்டம் இருக்கவேண்டுமென்ற சந்தேகம் எனக்கு ஏற்பட்டது. ஆகவே, மிக ஜாக்கிரதையாக, எவருக்கும் தெரியாமல், இந்தக் கேஸின் விவரங்களை வெளியில் விசாரித்து அறிய வேண்டுமென்றும் எச்சரிக்கை அடைந்தேன்.

அவ்வாறே, பக்குவமாக முதலில் குரு, அம்மா முதலியவர்களிடமும், பிறகு பெண் வீட்டுக்காரர்கள் ஒருவர்—இருவரிடமும் அதை விசாரித்தேன். அவர்கள் அனைவரும் ஒரு முகமாக டே அறிந்திருந்த கதையைத்தான் கூறினர். பிற்பகுதியில் வைத்தியநாத ஐயரைப் பத்மினியின் மூலமாக வைத்தியம்செய்து கொள்ளத் தூண்ட, பாஸ்கரன் பம்பாய்க்கு வந்ததாக அறிவித்திருந்தானே, அது மாத்திரம் அவர்கள் கூறிய கதையில் வரவில்லை. இந்தப் பாஸ்கரன் எப்பொழுதுமே பம்பாய்க்கு வந்தவனல்ல.

இந்த உண்மை என் சந்தேகத்தை இன்னும் வலுப்பெறச் செய்தது, அப்படியானால், அந்த வாலிபன் யார்? அவனுக்கு ஏன் பத்மினியிடம் அத்தனை அக்கறை? எதற்காக அவனும் அவளும் அதை டேயிடம் மறைத்தனர்? என்ற கேள்விகள் மீண்டும் என்னைச் சூழ்ந்தன.

அவை எல்லாவற்றின் விடைகளையும் நான் கண்டு கொள்ள முடியவில்லை. எனினும், பம்பாய் திரும்புமுன்பு அவற்றில் முதல் இரண்டுக்கு விடை என்னைத் தேடி வந்துவிட்டது.

சர்மாவின் அண்ணா ஏழ்மை நிலையிலே இருந்தார். ஆயினும் சாந்தியின் கலியாண வரிசைகளில் குறையேதும் வைக்கவில்லை. அன்றிரவு மணமக்களின் ஊர்வலத்துக்குக்கூட அவர் ஏற்பாடு செய்திருந்தார். இரவு போஜனத்துக்குப் பிறகு ஊர்வலம் புறப்பட்டது. கலியாணத்தில் கலந்து கொண்ட பெண்—பிள்ளை வீட்டுக்காரர் அனைவரும் ஊர்வலத்திலும் கலந்துகொண்டனர். மோட்டார் வண்டி ஒன்றைத் தமது சக்திக்கு உகந்தவாறு அலங்கரிக்கச்செய்து, அதில் தம்பதிகளை அமர்த்தியிருந்தனர். முன்னால், நாதஸ்வரம், பாண்டு முதலிய விருது கோஷ்டியினர் தங்கள் கைவரிசைகளைக் காட்டிக்கொண்டு சென்றனர். அவர்களை அடுத்து ஆண்கள் கும்பல் சென்றது. காரின் இருமருங்கிலும் அதற்குப் பின்னுமாகப் பெண்டிர் வந்துகொண்டிருந்தனர்.

ஆண்கள் கூட்டத்தில், வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு நடந்த நான், அதைத் துப்புவதற்காக ஒரு சமயம் காரைத் தாண்டிப் பின்னால் சென்றேன். தாம்பூலமும், பிரம்மபத்திரமும் அடிக்கடி போடும் இயல்புடையவன்தான் என்றாலும், அதைக் கண்ட இடத்தில் உமிழும் அநாசாரப் பழக்கம் என்னிடம் கிடையாது. அதனால்தான் அன்று அத்தனை கூட்டத்தையும் கடந்து தெருக்



கோடியிலிருந்த குப்பைத்தொட்டியை நோக்கி நடந்துகொண்டிருந்தேன். நடந்துகொண்டிருந்த போது, பெண் வீட்டைச்சேர்ந்த இரு யுவதிகள் வரிசைக்கு ஒருவராக, ஊர்வலம் பார்க்க வந்து நின்ற தெருப் பெண்மணிகளுக்குச் சர்க்கரை வழங்கி வருவதையும், அவர்களில் ஒருத்தி பத்மினி என்பதையும் பார்த்தேன்.



திரும்பி வந்தபோது பத்மினி ஒரு வீட்டுத் திண்ணையில், தன் வயதுடைய பெண் ஒருத்தியுடன் பேசிக் கொண்டிருந்தாள். அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதைத் துப்பறியும் நினைவு எனக்கு அப்பொழுது சிறிதும் இல்லை. ஆனால் அவர்கள் பேச்சில் அடிபட்ட ஒரு வார்த்தை அச்சம்பாஷணை முழுவதையும் கேட்க என்னைத் தூண்டிற்று. வாய் கழுவச் செல்லுபவன்போல அருகிலிருந்த தெருக் குழாயண்டை சென்று நின்று, ஒட்டுக் கேட்கும் கேவலமான வேலையில் ஈடுபட்டேன்.

பத்மினிதான் முதலில் பேசினாள்: "பாஸ்கரன் தூங்கி விட்டாரோ, துளசி?"

"ஆமாம்; ரெயிலில் வந்த அலுப்பு" என்றாள் அந்தப் பெண் துளசி.

"அலுப்பு என்னடி அலுப்பு? சுகமாக ஆளுக்கொரு ஸீட்டாக ஆக்கிரமித்துக்கொண்டு, எழும்பூரில் படுத்தவர்கள், சோழவந்தான் தாண்டிய பிறகுதானே விழித்து எழுந்தோம்? அதிருக்கட்டும்; ஏண்டி துளசி, பம்பாய்க்கு வந்த பிறகாவது எங்காத்துக்கு வந்து போய்க் கொண்டிருப்பாயா, அல்லது.........?"

என்னை வயிற்றெரிச்சல் கொட்டாதேடி, அம்மா; நாங்களா, இப்படி நடந்துகொள்ளுகிறோம்? வீட்டுக் கிழடுகள் இன்று சினிமாவுககுப் போயிராவிட்டால், இந்த ஊர்வலத்தைக்கூடப் பார்க்கக்கூடாதென்று என்னைத் தடுத்திருக்குமே?"

"அவர்களைக் குறை சொல்ல என்ன இருக்கிறதடி; துளசி; எல்லாம் என்

தலையெழுத்து. சொல்லாமல்கெடுத்து ஊருக்கு உலகத்துக்கு நல்லவர்களாக அவர்கள் நடந்துவிடுகிறார்கள். இவர்கள்தாம் என்று தெரியாவிட்டாலும், யாரோ எங்களுக்குத் திங்கு செய்பவர்கள் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து அதற்குப் பயந்து, சாந்தியின் கலியாணத்தை, இவ்வளவு தடபுடலாக வந்த மாப்பிள்ளையை விடாது, முடித்துவிட ஏற்பாடுகள் செய்ததாகப் பாஸ்கர அண்ணா சொன்னான். எனக்கு இன்னும்கூடப் பயமாய்த்தான் இருக்கிறதடி, அம்மா—இவர்கள் சாந்தியின் வாழ்க்கையையும் அலங்கோலமாக்கி விடலாகாதே யென்று."

"ம்......அதையெல்லாம் ஏன் இந்தச் சந்தோஷ சமயத்திலே நினைக்கிறாய்?"

"சந்தோஷ சமயமா? எனக்கு ஏதடி துளசி சந்தோஷமும், ஒன்றும்? ஏதோ வெளித்தோற்றத்துக்கு, ஊர் வாய் அடைக்க ஆரம்பித்து விடுமேயென்று சந்தோஷப்படவேண்டிய காலத்தில் சந்தோஷமாக இருப்பதுபோல நடந்துகொள்ளுகிறேன். ஆனால் என் மனசு செத்து எத்தனையோ நாட்களாகிவிட்டன என்பது உனக்குத் தெரியாதா?" பத்மினி இதைச் சொன்னபோது அழுதுவிட்டாள் போலிருக்கிறது; அவளுடைய கடைசி வார்த்தைகள் தடுமாறி வந்தன.

துளசி அவளைத் தேற்றினாள்: "கலங்காதேடியம்மா பத்மி; உன் கஷ்டம் விடிந்துவிடும்; தெய்வம் கண்களைத் திறந்துவிடும்' என்று சற்று முன்புதான் அவர் என்னிடம் சொன்னார். ஆமாண்டி; அந்த மனத்தத்துவப் புரொபசர் அவ்வளவு கைராசிக்காரராமே?"

"அது என்னவோடி, துளசி; அதைத்தான் கடைசித் துரும்பாகப் பற்றிக்கொண்டு நிற்கிறேன், அவரும் கை விட்டுவிட்டால்............? ம்............எதற்கு? நல்லதையே நினைப்போமே. அது சரி; நீங்கள் என்றைக்குப் புறப்படப்போகிறீர்கள்?"

"நாளையன்று புறப்படலாமென்று இருக்கோம். அவருக்கு ஒரு வாரம்தானே லீவு? நீ என்ன செய்யப்போகிறாய்? இருந்துவிட்டு வரப்போகிறாயா? அல்லது............?"

"இங்கே இருக்கவா? என் உடல்தான் இங்கே இருக்கிறதே தவிர, துளசி, என் மனசு அங்கேயல்லவா இருக்கிறது. அதிலும் நான் புறப்படுகிற அன்றைக்குத்தான் அந்த வைத்தியர் புதிய சிகிச்சை ஒன்றை ஆரம்பிக்கப்போவதாகச் சொல்லியிருந்தார். 'இதற்கும் உங்கள் கணவரின் மனது திரும்பவில்லையென்றால், அப்புறம் நான் செய்யக் கூடியது எதுவுமே இல்லை'யென்று வேறு சொல்லிவிட்டார். என் விதி என்ன ஆயிற்றோ என்று ஒவ்வொரு நிமிஷமும் துடித்துக்கொண்டிருக்கேனடி, துளசி. மேலும், இங்கேதான் பாஸ்கர அண்ணாவைத் தவிர வேறு யார் என்னோடு சரியாகப் பேசினார்கள்? கலியாணம் நிச்சயமானதும் அண்ணாதான் தந்தி அடித்தானும். இல்லாவிட்டால் ஒரே தங்கையின் கலியாணமும் நான் அறியாமலே நடந்திருக்கும்."

"ஆமாண்டி பத்மி? அவர் எப்படி உன்னை அனுப்பச் சம்மதித்தார்?"

"அவரா? அவர் தெய்வமடி, துளசி. அவருடைய பெருந்தன்மை எங்கே? இவர்கள் எங்கே? ஆபீசுக்குத் தந்தி வந்ததும், அவர்தானடி அதை எடுத்துக்கொண்டு ஓடிவந்தார். உன் தங்கைக்குக் கலியாணமாமே; முறைப்படி உன் சார்பில் நான் பார்த்து முடித்துவைக்க வேண்டிய கலியாணம் இது, அன்று அவளும் உன்னுடன் கிளம்பி வந்திருப்பாளானால், அதைச் செய்தும் இருப்பேன். இப்போது அவள் அவர்கள் பெண்; அவர்களே நிச்சயித்திருக்கிறார்கள்; நடத்துகிறார்கள். நடத்தட்டும். நான் வரமுடியாது. வரவும் மாட்டேன். நீ புறப்படு, இரவு ரெயிலில்" என்று என்னை அனுப்பியவர் அவர்தானடி. இந்தப் பெருந்தன்மை எதையும் சகித்துக் கொள்ளும் பொறுமை—அதுதானேடி, துளசி, இந்த நிலையில் தவிக்க விட்டிருந்தும், அவரிடம் இன்னும் என்னைப் பக்தி கொண்டிருக்கச் செய்திருக்கிறது.

"அப்படியானால் நீயும் எங்களுடன் புறப்பட்டுவிடேன்".

"அது நடக்குமென்று தோன்றவில்லை, துளசி. சாந்தியின் கணவரைப்பற்றி, வந்ததும் அண்ணா சொன்னான்: நல்ல மனிதர்கள்; ஆனால் ரொம்ப ஏழைக் குடும்பம். பையன் ஒரு மில்லில் சம்







LUX
LUX
TOILET SOAP

பளத்துக்கு இருந்துகொண்டே, சுருக்கெழுத்தும் டைப் அடிக்கவும் கற்று இப்பொழுதுதான் பரீட்சை கொடுத்திருக்கிறுன். எங்களிடந்தான் உன் கணவருக்கு விரோதம், சாந்தியிடம் இல்லேயே? செயலாக, செல்வாக்குடன் இருக்கும் அவரிடம் தகுந்தவாறு சொல்லி ஒரு நல்ல வேலே வாங்கிக் கொடுக்கச் செய்தாயானுல், உன் தங்கையை உன்னுடனேயே வைத்துக்கொள்ள ஒரு வழி கிட்டும் என்ருன். ஆகவே, வருவதானுல் அவரை அழைத்துக்கொண்டே கிளம்பலாம் என்றிருக்கிறேன், எதுவும் நிச்சயமில்லே; போகப் போகத் தான் தெரியும். நான் பம்பாய்க்கு வந்ததும் பாஸ்கரனுக்கு டெலிபோன் செய்து உனக்கு அறிவிக்கச் செய்கிறேன்"

ஊர்வலம் நெடுந்தூரம் முன்னேறிச் சென்றுவிட்டது. அதைப் பார்த்து விட்ட பத்மினி "சரி; நான் வருகிறேனடீ துளசி; பம்பாயில் பார்ப்போம்" என்று கூறிக் கிளம்பி விட்டாள்.

நானும் கிளம்பி விட்டேன்.

ஒட்டுக்கேட்ட இந்தச் சம்பாஷணை எனக்கு இப்பொழுது பல சிக்கல்களைத் தெளிவு படுத்திவிட்டது. டேயிடம் பத்மினியையும் அழைத்து வந்தவனும், நேற்று ரெயிலில் அவளுடன் பிரயாணம் செய்து வந்தவனுந்தான் இன்று இவர்கள் சம்பாஷணையின் ஆரம்பத்தில் வந்த பாஸ்கரன். அவன் வீடுதான் அது. பத்மினியுடன் பேசிக்கொண்டிருந்த பெண் துளசி, அவன் மனைவி. அவன் பம்பாயில் ஏதோ வேலையில் இருக்கிறுன். மனைவியை அழைத்துப்போக வந்திருக்கிறுன். பாஸ்கரனின் பெற்ருர்களுக்குச் சர்மாவின் குடும்பத்துடன் ஏதோ விரோதம். அது வெளியில் உள்ளவர்களுக்குத் தெரியாது. ஆனுல் பத்மினி, பாஸ்கரன், துளசி முதலியவர்களுக்குத் தெரியும். முன்பு பத்மினிக்கு, 'காக்கை வலிப்பு' நோய் இருப்பதாகக் கதைகட்டி விட்டதுகூட அவர்கள்தான் போலிருக்கிறது. அதுபோல, சாந்தியின் கலியாணத்தின்போதும் ஏதேனும் கிளம்பி விடலாகாதேயென்று பயங்கொண்டு, சர்மாவின் சதோதரர், உடனடியாகக் கலியாணத்தை முடித்துவிட அவசரப்பட்டிருக்கிருர். பத்மினியும் துளசியும் நெருங்கிய தோழிகளாக இருக்கவேண்டும். எனவே, அவளுடைய அந்தரங்கம் அனைத்தும் துளசிக்குத் தெரிந்து இருக்கிறது. ஒருகால் அவளுடைய தூண்டுகோலினுல்தான் இந்தப் பாஸ்கரன், ஐயரை முதலில் ஸ்பெஷலிஸ்டிடமும் பிறகு டேயிடமும் வைத்தியம் செய்துகொள்ள ஏற்பாடுகள் செய்தானே என்னவோ? ஆனுல் அதற்கு அவன் டேயிடம் தன்னை மறைத்துக் கொண்டிருக்க வேண்டாமே? பத்மினியும் அதற்கு உடந்தையாக இருந்திருக்கவேண்டாமே!

இந்த ஒரு சிக்கல் கடைசி வரையில் என் யூகத்திலோ, மேலே நடத்திய விசாரிப்புகளிலோ விடுபடவே இல்லை. அதை அந்த மனத்தத்துவப் புரொபசர் ஒருவரால்தான் விடுவிக்க முடிந்தது.

## 10

பம்பாய்க்கு வந்து, வீட்டில் நுழைந்ததும், மேஜையின்மீது டேயின் கடிதம் ஒன்று பல்லே இளித்துக்கொண்டு கிடந்தது. முன்னுள் அனுப்பிய அக்கடிதம் அன்று காலேத் தபாலில் வந்திருந்தது. சுருக்கமாக நாலே வரிகள் தாம்;

"ராம்,

சொன்னபடி, நாளை எக்ஸ்பிரஸில் வந்துவிடுவீர்கள் என்று நம்புகிறேன். வந்ததும், உடனே நிலேயத்துக்கு வரக் கேட்டுக் கொள்ளுகிறேன். மிக அவசரம்.

உங்கள் பிரிய நண்பன்
டே"

அவருக்குமேல் நான் அவசரப்பட்டுக்கொண்டு தானே இருந்தேன்—மதுரையில் சேகரித்த விவரங்களைக்கூற. ஆகவே, உள்ளே நுழைந்தது முதல் கலியாண விமரிசைகளை அறியத் துடித்துக் கொண்டிருந்த மனைவிக்குக்கூட விரிவாக எதையும் கூருது, குளித்து உடைமாற்றிக்கொண்டு 'மரைன்ஸ்லைக்கு' ரெயிலேறினேன்.

டே, நிலேயத்தில் காத்திருந்தார். "என்ன? தம்பியின் கலியாணம் விமரிசையாக நடந்தேறிற்ரு?" என்று கேட்டார்.

"ஆமாம்; இந்தக் கலியாணத்துக்கு என்னைப் போகவிடாது தடுத்துவிடப் பார்த்தீர்களே!"

"ஆம் ராம், நீங்கள் போய்விட்டீர்கள்; இங்கே ஐயருக்குச் சிகிச்சையும் நடைபெறவில்லே."

"ஏன்?"

"தமிழ் வாத்தியார் ஜ்வரமாகப் படுத்துக் கொண்டுவிட்டார். வேறு யார் இந்தக் கஷ்டமான பணியை ஏற்றுக்கொள்ளுவார்கள்?"

"ஒருவருமே ஏற்றுக்கொள்ள வேண்டாம், பாபூஜி, இந்தச்சிகிச்சையே தேவையில்லாதவாறு, ஐயரின் கேஸ் ஒரு புது முளையைக் கிளப்பியிருக்கிறது" என்று தொடங்கி, மதுரைக்கு ரெயிலேறியதுமுதல் நடந்தது அனைத்தையும் கூறினேன்.

டே அதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போவார் என எதிர்பார்த்தேன். ஆனுல் அவர் கொஞ்சங்கூடச் சலனமின்றி, சிரித்துக்கொண்டே, "நீங்கள் சொல்லுவது உண்மையானுல், இக்கேசில் என் தலைத்தீர்மானம் தப்பவே இல்லே; ஆம் ராம்; அந்தப் பையன் அவள் சகோதரன் அல்லவென்ருல், அவன் தன்னை மறைத்துக் கொண்டதன் ரகசியம் இன்னுமா உங்களுக்கு விளங்கவில்லே?"

"என்ன? பத்மினிக்கும் பாஸ்கரனுக்கும் தொடர்பு இருக்கும் என்ரு சொல்லுகிறீர்கள்?"

"அருவருக்கும் தொடர்பு இருக்கவேண்டுமென்று சொல்லவில்லே. ஆனுல் அந்த நெருங்கத்தகாத கவர்ச்சிகள் நெருங்கின. அதன் விளைவே ஐயரின் இந்த மனமாற்றம்."

"டே பாபு; உங்களின் இத்திர்மானத்தை நான் ஒப்புக்கொள்ளமுடியாது. அன்றிரவு பத்மினியும், பாஸ்கரனின் மனைவி துளசியும் பேசிக்கொண்டிருந்த பேச்சுக்கூட அவனும் அவளும் மிகத் தூய்மையாகப் பழகியவர்கள் என்பதற்குச் சான்ருகத்தானே இருந்தது?"

"மீண்டும் நீங்கள் கூறியதையே கூறிக்கொண்டிருக்கிறீர்களே. அவர்கள் தூய்மை கெட்ட நெருக்கம் கொண்டார்கள் என்று நான் சொல்லவில்லை. ஆனுல், அவர்கள் சகோதர—சகோதரியராகப் பழகி வரவில்லையென்று திட்டமாகக் கூறுவேன்."

"அப்படியே வைத்துக்கொள்ளுவோம், டே. ஆனுல் பெண்மையைப் போற்றும், ஐயர் அதனுல் மனம் மாறியிருப்பார் என்று நினைக்கிறீர்களா?"

"ராம், சந்தேகம் என்பது ஒரு பேய். தான் பிடித்துக்கொண்டவர் யாராகத்தான் இருக்கட்டும் அவரை ஆட்டுவிக்காமல் அது விலகிவிடாது. சாதாரண மனிதராக இருந்தால், உடனே மனைவியைத் தள்ளி வைத்திருப்பார். அசாதாரணப் பேர்வழி ஆயிற்றே. ஆகவே மனைவியைப் பூசித்துக்கொண்டே அந்த உயிர்த் தெய்வத்தைக் கல்தெய்வமாக நிறுத்தி வைத்திருக்கிருர்."

தமது முடிவை நிலைநாட்ட டே இன்னும் என்னென்ன வெல்லாமோ ஆதாரங்களைக் காட்டினுர். ஆயினும் ஐயரின் மனமாற்றத்தின் காரணம், மனைவிமீது ஏற்பட்ட சந்தேகம் என்பதை என்னுல் ஒப்புக்கொள்ளவே முடியவில்லை. டேயிலிருந்து இதுவரை ஐந்தாறுபேர்கள் அவரைப்பற்றி எனக்குக் கூறிவிட்டார்கள். ஒவ்வொருவர் கூற்றும். அவர் பெண்மைப் பற்றுக்கும், தெய்வ நம்பிக்கைக்கும் சான்ருக அல்லவா இருந்தன? அப்படி இருக்கையில், சொந்த மனைவியைத் தொடாதிருக்கச் செய்ய, தெய்வக்கூற்று என்று அவர் மனத்தில் பதிந்துவிட்ட சொற்களையல்லாது வேறு எதற்குத்தான் திறன் உண்டு!

டே இறுதியாகச் சொன்னுர்: "உங்களுக்கு இன்னும் நம்பிக்கை ஏற்படவில்லை என்று தோன்றுகிறது. எல்லாவற்றையும் இன்றிரவு வெட்ட வெளிச்சமாக்கிவிடுகிறேன், பாருங்கள். ராம், இரவு எட்டு மணிக்கு முன்பு நீங்கள் மீண்டும் என் நிலையத்தில் இருக்கவேண்டும். இப்பொழுது மணி நாலு ஆகப்போகிறது. வீட்டுக்குப் போய்த் திரும்புகிறீர்களா? அல்லது இங்கேயே தங்கிவிடுகிறீர்களா?"

"இன்னும் மனமயக்கச் சிகிச்சையா செய்யப் போகிறீர்கள், டே பாபு? கேசின் முளைதான் உங்களுக்குக் கிட்டிவிட்டதே"

"ராம், நீங்கள் கற்பனைக் கதைகளுக்குச் சிக்கலும் விடுதலையும் தேடுவது போலல்ல, மனத் தத்துவ வைத்தியர் இங்கே வேறு மனிதர்கள் — அது நானுகவே இருக்கட்டும் — கொண்டுவரும் ஆதாரத்தின் அடிப்படையில் சிகிச்சையைத் தொடங்கிவிட முடியாது. எந்த உண்மையும் நோயாளியின் வாய் வழியேதான் வரவேண்டும். எனவே, உங்களை எதிர்பார்த்து, இன்றிரவு ஐயரைச் சிகிச்சைக்கு வந்துவிடும்படி ஏற்கனவே அறிவித்து விட்டேன், அவர் வருவார்; நீங்களும் வாருங்கள், உண்மையை ஒளித்திருக்கும் அவர் மனமே இன்று அதைக் கக்குவதைப் பாருங்கள்"

வீட்டுக்குப் போய்த் திரும்புவதாக அவரிடம் சொல்லிக்கொண்டு கிளம்பினேன். ஆயினும் அன்றை மனமயக்கச் சிகிச்சை அநாவசியம் என்ற நினைவே என்னுள் மேலோங்கி நின்றது. பத்மினிக்கும் பாஸ்கரனுக்கும் ஏதோ ஒருவிதத் தொடர்பு இருந்தது என்பதையாவது கொஞ்சம் ஏற்றுக்கொள்ளலாம் போலிருந்தது. ஆனுல், ஐயரின் மாறிய போக்கு, தெய்வ பக்தியை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததல்ல என்பதை ............? சே! இருக்கவே முடியாது. அந்த மனிதரின் மேலான போக்கு எங்கே? இந்த அற்ப முடிவு எங்கே?

என்னுடைய இந்தத் திடந்தான் இரவு சிகிச்சையில் உறுதியாகப் போகிறதென்றிருந்தேன். ஆனுல், அதைத் தவிடு பொடியாக்கிவிடும் சம்பவம் ஒன்று நான் வீடு சேருவதற்கு முன்பே நிகழ்ந்து விட்டது.

'மரைன் லைன்' லில் வண்டியேறியபொழுது, நான் ஒருகணம் திடுக்கிட்டுப் பின் வாங்கினேன். ரெயில் மாத்திரம் புறப்பட்டிருக்காவிட்டால், கீழே குதித்தோடிக்கூட இருப்பேன், ஆம், ஒரு வாரத்திற்கு முன்பு என் பிராணனை வாங்கிவிட்ட அந்த 'வெர்ஸோவாக்' கிழவர் வண்டியினுள் உட்கார்ந்திருந்தார்!

"ஓ! நீங்களா? வாருங்கள்" என்று அவர் சிரித்துக்கொண்டு வரவேற்றபோது எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது. "உங்கள் ஆபீசு 'மரைன் லைன்' லில்தான் இருக்கிறதோ! எத்தனை மணிக்கு மூடுகிறது? நாலு மணிகூட இன்னும் ஆகவில்லையே, ஸார்?"

"நான் இன்று ஆபீசுக்குப் போகவில்லை; நண்பர் ஒருவரைப் பார்க்கப் போயிருந்தேன்" என்று வேண்டா வெறுப்பாகப் பதில் உரைத்தேன்.

"அப்படியா? ஆமாம்; இந்த வண்டி 'பாஸ்ட்' வண்டியாச்சே ஸார்; மாதுங்காவில் நிற்காதே"

மாதுங்காவில் வசிப்பதாக அன்று அவரிடம் கூறியிருந்ததை நல்ல வேளையாக இந்த எச்சரிப்பு ஞாபக மூட்டிற்று. இல்லை, நான் மாதுங்காவில் இறங்கப்போவதில்லை. அந்தேரியில் அன்று சந்திக்கச் சென்ற நண்பரைப் பார்க்க இப்பொழுதும் அங்கேதான் போய்க்கொண்டிருக்கிறேன்" என்று சாதுரியமாகக் கூறிவிட்டேன்.

"நான்கூட இன்று ஆபீசிலிருந்து சீக்கிரமாகக் கிளம்பிவிட்டேன். கொஞ்சம் வேலை இருக்கிறது. வீட்டுக்குப் போய்விட்டு மறுபடி இங்கேதான்

வரவேண்டும்; அதிருக்கட்டும் ஸார்; அன்று அந்த எழுத்தாளர் 'மாயாவி' யின் விலாசம் கேட்டிருந்தேனே? விசாரித்தீர்களா?"

சம்பாஷணை எங்கே அன்றைய போக்கில் திரும்பி விடுமோ என்ற பயம் எனக்கு. ஆனால், இந்த ஆசாமி என்னை விடவும் மாட்டாரே? சரி, பேச்சையாவது வேறு திசைக்குத் திருப்பலாம் என்று கொரியாச் சண்டையைப்பற்றி ஆரம்பித்தேன். அப்பேச்சில்கூட அந்த மன்னன் தமது மனப்போக்கைக் காட்டாதிருந்துவிடவில்லை உலகில் நிகழும் சண்டை அனைத்துமே, 'தெய்வம் இல்லை' என்ற நினைவால் தோன்றுவதுதான் என்று ஸ்தாபித்துப் பொழிய ஆரம்பித்துவிட்டார். எதையாவது சொல்லிவிட்டுப் போகட்டுமென்று, பேசாமல் 'ம்' கூட்டிக்கொண்டு இருந்தேன்,

அந்தேரி ஸ்டேஷன் வந்ததும், அவருக்கு முன்னால் இறங்கிச் சென்றுவிட எழுந்தேன். ஆனால், அவர் எனக்கு முன்பாகக் கதவண்டை சென்று நின்றுகொண்டு, "நான் பஸ்ஸைப் பிடிக்க வேண்டும் ஸார்; மாலை நேரமானதால் 'க்யூ' நீளமாக இருக்கும்; சற்று என்னை முதலில் இறங்க விடுங்கள்" என்று கூறியவாறு இறங்கிப் போனார். சில அடிகள்தான் நடந்திருப்பார்; உடனே வண்டியை நோக்கித் திரும்பி ஓடிவந்தார். "ஸார், ஸார்; என் லெதர் வாலெட்'டை மறந்து விட்டேன். கொஞ்சம், வண்டி புறப்படுவதற்குள் ஜன்னல் வழியாக வாங்கி விடுங்களேன்" என்று பதறினார்.

இதற்குள் வண்டியினுள்ளிருந்த ஒருவர் அந்த 'வாலெட்'டை எடுத்து ஜன்னலோரம் நின்ற என்னிடம் கொடுத்தார். அதை வாங்கி, அவரிடம் கொடுத்தபோழுது, பொன்னெழுத்தில் பொறிக்கப்பட்டிருந்த அந்த ஆசாமியின் பெயர் என் கண்களில் பட்டது.

டி. எஸ். வைத்தியநாத ஐயர்!

என்ன? எனக்குக் கிரீச்சிட்டுக் கத்தவேண்டும் போலிருந்தது. இந்த ஆசாமியா டேயிடம் சிகிச்சைபெற்றுவரும் ஐயர்? இவரா பத்மினியின் கணவர்? உலகத்து ஜீவராசிகள் அனைத்தையும் உத்தமமானவையெனக் கருதுபவரா, அவை அனைத்தும் பாவமே உருவானவை என்று பேசினார்! எப்பொருளிலும் தெய்வத்தைக்கண்ட இவரா, இந்த உலகில் தெய்வமே இல்லையென்றும் அன்றும் இன்றும் என்னிடம் வாதாடினார்?

மனத்தத்துவ நிபுணருக்கும் எழுத்தாளனுக்கும் உள்ள ஊகிக்கும் சக்தியின் வித்தியாசத்தை நான் இப்பொழுதுதான் நன்றாக உணர்ந்தேன். ஆம்; இப்படி அடியோடு மாறிவிட்ட மனிதர், தெய்வமே இல்லையென வார்த்தைக்கு வார்த்தை கூறியவர், நிச்சயமாகப் பேய் பிடித்த பெண்ணின் சொற்களைத் தெய்வக் கூற்றென நம்பியிருக்க மாட்டார்; அதன் நிமித்தம் மனைவியை விலக்கி வைத்திருக்கவும் மாட்டார். டேயின் முடிவுப்படி பாஸ்கரன்—பத்மினியின் தொடர்பில் எழுந்த சந்தேகமே இவரை இப்படி அடியோடு மாற்றியிருக்கவேண்டும்.

[தொடரும்]

( ராகமாலிகைத் தொடர்ச்சி )

# ஸ்ரீ ஸ்துதி

புதுச்சேரி த்யாகப்ரும்ம மியூசிக் அகாடமி பிரின்ஸ்பால் ஸங்கீத வித்வான் கல்கத்தா A. K. ராகவாச்சாரியாரால் வர்ணமெட்டு அமைக்கப்பட்டது.

स्तोतव्यत्वं दिशति भवती देहिभिः स्तूयमाना
तामेव त्वामनितरगतिः स्तोतुमाशंसमानः ।
सिद्धारम्भः सकलभुवनश्लाघनीयो भवेयं
सेवापेक्षा तव चरणयोः श्रेयसे कस्य न स्यात् ॥ ॥ ३ ॥

ஸ்தோதவ்யத்வம் திசதி பவதீ தேஹிபிஸ்தூயமாநா
தாமேவத்வாமநிதரகதி : ஸ்தோதுமாசம்ஸமாந : |
ஸித்தாரம்ப : ஸகல புவந ச்லாக நீயோ பவேயம்
ஸேவாபேக்ஷா தவசரணயோ : ச்ரேயஸே கஸ்ய நஸ்யாத் || [3]

ராகம - ஆந்தோளிகா தாளம் : ஆதி

| லகு | த்ருதம் | த்ருதம் |
|---|---|---|
| ஸ்ா ; ; ; ; ; ஸ் ஙி 'ரி ஸ் ஸ் ஙி நீ ; ; ஙி தா ம பா ; | ; ரி ம பா ; ; பா ; | ஸ்ா , ஙி ஙி தா ம பா ; ; ; |
| ஸ்தோ த வ்ய . . த்வம் | திச . தி | ப . வ . . தி |
| ம ரீ , ப மா , ஙி பா , ; ; பா , ஙி ப ஸ் ஙி ஙி மா ; பா ; | ஙி பா , ஙி பா , நீ ; ஙி தா ம | மா ரீ ரி ப ம ம ஸ ரீ ஸ ஸா ; |
| தே . ஹி பி | ஸ்தூ . . . ய . . | மா நா |
| ஸா நீ ஸா ; ரீ ; மா ரீ மா ; பா மா பா ; ; ரீ | மா பா ஸ்ா நீ ஙி தா ம பா ; | த ம பா நீ ; ஸ்ா நீ ஸ்ா ; |
| தா . . மே வ த்வாம் அ | ஙி . த ர | க தி . . |
| 'ரீ நீ ஸ்ா ; 'ரீ ஸ்ரீ ; ; 'ரீ ஸ்ா 'ரீ ம'ர் ஸ் 'ரீ ஸ் ஸ்ா ; | ஸ் 'ரீ 'ரி ஸ் ஸ் ஙி நீ ; ஙி தா ம | பா ; ; ; ஸ்ா நீ ஸ்ா ; |
| ஸ்தோ து . மா சம் | ஸ மா . . | ந . . |

## மத்யம காலநடை

| | | |
|---|---|---|
| 'ரீ 'ரீ ஸ்ா நீ தா மா ; ரி ம பா ; பா ம ரி ப மரீ ; | மா ரீ மா பா நீ நீ தா மா | பா ; ஸ்ா நீ ஸர் ; ; ; |
| ஸி . த்தா ரம் ப ஸக . ல பு . வ . ந | ச்லா . க நீ . யோ . . | ப வே . யம் |
| ரீ மா பா நீ ஸ்ா 'ரிம் 'ரீ ஸ்ா நீ தா மா ரீ ப ம ரீ ; ஸா | 'ரீ ஸ்ா நீ தா மா ரீ ; ஸா | மா ரீ மா பா ; நீ பா நீ |
| ஸே வா . பே . . க்ஷா , த வ சரண . யோ . | ச்ரே . ய ஸே . க ஸ்ய | ந . . . ஸ்யா . த் |

## ஸ்வர ஜதி

| | | |
|---|---|---|
| ஸ்ா ; ; நீ தா மா ரீ ; ; மா ; பா ; நீ தா மா | ரீ ; ; ஸா ; ; நீ ஸா | ரீ மா ரீ மா பா நீ தா மா |
| ஸா த க த ஜம் மா பா நீ தா மா | ரீ ஸா த க | த ஜம் . மா பா ஙி தா மா |
| பா ; ; ரீ மா பா நீ ஸ்ா நீ தா மா ரீ ; ரீ ஸா ரீ | பா மா ரீ ஸா நீ ஸா ; மா | ரீ மா பா நீ தா மா பா நீ |
| பா ரீ மா பா நீ த தி கி ண தொம் ரீஸாரீ | பா த தி கி ண் தோம் மா | ரீ மா பா த தி கி ண தொம் |

यत्संकल्पाद्भवति कमले यत्र देहिन्यमीषां
जन्मस्थेमप्रळयरचना जङ्गमाजङ्गमानाम् ।
तत्कल्याणं किमपि यमिनामेकलक्ष्यं समाधौ
पूर्णं तेजः स्फुरति भवतीपादलाक्षारसाङ्कम् ॥ ॥ ४ ॥

யத்ஸங்கல் பாத் பவதி கமலே யத்ர தேஹிந்ய மீஷாம்
ஜன்மஸ்தேம ப்ரளயரசநா ஜங்கமா ஜங்கமாநாம் |
தத்கல்யாணம் கிமபியமி நாம் ஏகலக்ஷ்யம் ஸமாதௌ
பூர்ணம்தேஜஸ்புரதி பவதீ பாதலாக்ஷார ஸாங்கம்|| [4]

**ராகம்: மாளவி** **தாளம்: ஆதி**

| லகு | த்ருதம் | த்ருதம் |
|---|---|---|
| த ஸி தா நீ ; ஸ்ா ; ; ; ஸி ஸ்ா ஸி தா நீ பா ; ; ; | ; ரீ கா, ம பா ; பா ; | பா மா கா மா ரீ ; ; ; |
| ய . த் ஸங் கல் பா த் | ப வ தி | க ம லே |
| மா ரீ ரி ஸ ஸ ஸி ஸா ; ; ; ரீ , க மா பா பா மா தா ; | நீ ; ஸி த தா நீ ; ; ; | ஸி ஸ்ா ஸி தா நீ பா ; ; ; |
| ய த்ர தே ஹி ந் | ய | மீ ஷாம் |
| தா நீ பா மா கா மா ரீ ; கா , ம ரீ ஸா ஸா நீ ஸா ; | நீ ஸா ரீ கா மா பா பா மா | நீ தா நீ ; ஸ் ஸி த ஸி பா ; |
| ஜ . . . ந்ம ஸ்தே ம | ப்ர . ள ய | ர . ச நா |
| பா மா தா ; நீ ; ; ; ·ரீ ஸ்ா நீ ஸ்ா ·ரீ , க் மா ; | பர் ம்ா க்ா ம்ர் ரீ ; ; ; க் | ஸ்ா, ஸி தா நீ பா ; ; ; |
| ஜ ங் க மா ஜ ங்க . . | மா | நாம் |

## மத்யம கால நடை

| | | |
|---|---|---|
| ·ரீ ஸ்ா நீ ஸ்ா ஸ்ா நீ தா நீ பா மா கா மா ரீ ஸா நீ ஸா | ரீ கா மா பா ; பா ; மா | மா தா ; நீ ஸ்ா நீ ஸ்ா ; |
| த த் க ல் யா . ண ம் கி ம . பி ய மி நா . | மே . க . ல க்ஷ்யம் | ஸ மா . தௌ . . |
| ·ரீ ஸ்ா நீ ஸ்ா ·ரீ க்ா ம்ா ; கர் க்ா ம்ா ·ரீ ; ·ரீ ஸ்ா ; | ஸ்ா ; ; நீ தா நீ பா ; | ; மா பா மா கா மா தா நீ |
| பூ ர் ண ம் தே . ஜ ஸ்பு ர தி ப வ தி | பா த லா . க்ஷா | ர ஸா . . ங் க ம் |

## ஸ்வர ஜதி

| | | |
|---|---|---|
| ஸ்ா ; ; ·ரீ ஸ்ா நீ ஸ்ா ; ; நீ தா நீ பா ; ; மா | கா மா ரீ ; ; ரீ ஸா நீ | ஸா ; ; ரீ கா மா தா நீ |
| ஸா ரீ ஸா நீ ஸா த க த ஜம் மா | கா மா ரீ த கி ட் | தாம் ரீ கா மா தா நீ |
| ஸ்ா ·ரீ க்ா ம்ா ; ·ரீ ஸ்ா நீ தா நீ பா மா ; கா மா ரீ | ஸா ரீ கா மா ; ரீ கா மா | தா நீ பா மா ; மா தா நீ |
| ஸ்ா ரீ க்ா ம்ா ரீ ஸ்ா நீ த தி மி தா ம் கா மா ரீ | ஸா ரீ கா மா த ஜ ணு | த கிடதாம் மா தா நீ |

(தொடரும்)




நள்ளிரவு. 'இந்தோ சிலோன்' எக்ஸ்பிரஸ் சென்னை நோக்கி வெகு வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. சுக்கில பட்சத்துச் சந்திரன் ஒளியில் மரங்கள், காடுகள், சின்னச் சின்ன ரெயில்வே ஸ்டேஷன்கள் யாவும் பனிப்படலம் போல் நடராஜன் கண்களுக்குத் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. அந்த மூன்ரும்வகுப்பு வண்டி ஒன்றின் ஜன்னல் வழியாக வெளியே தலையை நீட்டியவாறே பற்பல யோசனைகளில் ஆழ்ந்துபோயிருந்த அவன் கண்களில் 'இன்ஜினின்' கரித்தூள் வந்து விழுந்தது. உடனே தலையை உள்ளுக்கிழுத்துக்கொண்டான். கண்களைக் கசக்கியவாறே திரும்பினான் அவன். எதிர் பெஞ்சியில் தன் கால்களைச் சுருட்டி முடங்கியவாறே தூங்கிக்கொண்டிருந்தாள் அவன் தாய் செல்லம்மாள்.

இந்த உலகில் உறவு என்று சொல்லிக்கொள்ளும் வகையில் நடராஜனுக்கு இருந்தது அவன் தாய் ஒருத்திதான். அவன் மாமா சிற்றப்பா முதலியவர்கள் ஊரார் தூற்றுக்கு அஞ்சி மறுநாள் நடக்கவிருந்த நடராஜன் கலியாணத்திற்கு வர ஒப்புக்கொண்டிருந்தனர். அவர்கள் யாவரும் தங்கள் தங்கள் ஊர்களிலிருந்து முன்னமேயே சென்னை சென்றிருக்கக்கூடும் என்றெண்ணினான் நடராஜன்.

அவன் தாய் முனகியவாறே புரண்டு படுத்தாள். ஐம்பது வயதுக்கு மேலாகாவிட்டாலும் அவள் வயது அவன் கண்களுக்கு எழுபது இருக்கும்போல் தோற்றமளித்தது! நெற்றியிலும் கை, கால்களிலும் வயதின் முதிர்ச்சியைக்காட்டும் சுருக்கங்கள்; சிந்தனையின் தேய்ந்துபோன ரேகைகள். அவன் பொருட்டு அவள் பட்ட கஷ்டத்தில் தளர்ச்சியடைந்த அவன் தாயைப் பார்த்து ஆழ்ந்த பெருமூச்சு விட்டான். தன் பால்ய நினைவுகளை எண்ணிப் பார்க்கவும் நடராஜன் உள்ளம் சிலிர்க்கத்தான் செய்தது!

2

நடராஜன் தந்தை ராமு முதலியார் ரங்கூனின் பெயர் பெற்ற வைர வியாபாரி. சடந்த ஜப்பான் யுத்தத்தின் காரணமாக வீடிழந்து, வாசலிழந்து ஓடிவந்து தவித்த குடும்பங்களில் ராமு முதலியார் குடும்பமும் ஒன்று. இறந்துவிட்ட தந்தைக்காக அழநேரமில்லாமல் இருந்துவிட்ட தாயுடன் இந்தியா ஓடிவந்தான் நடராஜன்! அப்போது அவன் வயது பதினெட்டு. ரங்கூன் காலேஜில் படித்த அரைகுறைப் படிப்புடன் அவன் படிப்பு நின்றுவிட்டது. நல்ல செல்வாக்கில் அவன் தந்தையிருந்த காலத்தில் தலைமேல் வைத்துக் கூத்தாடிய அவன் உறவினர்கள், சொத்திழந்து தந்தையிழந்து தாயுடன் ஓடிவந்தபோது ஏனென்று கேட்பாரில்லை. மனமுடைந்துபோய் தன் தாயாரை மாமாவின் வீட்டிலேயே விட்டுவிட்டு ஒரு நாள் திடீரென்று மறைந்துவிட்டான் அவன்!

தன் வாழ்நாட்களில் ஒரு பாத்திரம் கூடத் தன் கைகளால் தொட்டறியாத செல்லம்மாள் தன் தமையன் வீட்டுப் பத்துப் பாத்திரங்கள் ஒன்றுவிடாமல் தேய்க்கும் கஷ்டத்தைக் கண்டு கண்ணீர் விட்டான் நடராஜன். "தன்னால்தான் தன் தாய்க்குக் கதிமோட்சம்" என்று திட்டமாக உணர்ந்த அவன், அன்று புறப்பட்டுச் சென்று மிலிடரியில் சேர்ந்துவிட்டான்.

எல்லாம் இன்று பழங்காலச் சம்பவங்களாகிவிட்டன! இப்போது நடராஜன் மிலிடரியிலி

ருந்து வந்த ஒரு கைதேர்ந்த 'ரேடியோ மெகானிக்'! அவன் தாயின் விருப்பப்படி கலியாணம் செய்துகொண்ட பின்னரே வேலை தேடுவது என்று தீர்மானித்திருந்தான்.

தன் கலியாணத்திற்குப் 'பெண் பார்த்த வைபவம் ஞாபகத்திற்கு வந்ததும் தன்னையறியாமல் சிரித்துக்கொண்டான் நடராஜன்,' ஆம். எல்லோரும் 'பெண் பார்க்க' என்று போய், பெண்ணைப் பார்த்து நிச்சயம் செய்துகொண்டு வருவார்கள்; ஆனால் நடராஜனை நாடி அந்தப் பெண் வந்தாள்!

சென்னையின் பாங்கு ஒன்றில் குமாஸ்தா வேலை செய்து வந்த செல்வரங்க முதலியார் தம் உறவினர் ஒருவர் கலியாணத்திற்கு நடராஜன் இருந்த வரகனேரிக்கு வந்திருந்தார். அப்போது தான் அவர் பெண், 'கமலம்' நடராஜன் கண்களில் பட்டாள்! நடராஜனைப்பற்றிக் கேள்விப் பட்ட சென்னை முதலியார், தம் மனைவி மூலம் அவன் அன்னையைப் போய்ப் பார்த்துவருமாறு அனுப்பினர். தான் அதிக நாட்கள் உயிருடன் இருக்கமாட்டோம்' என்று வெகு நாட்களுக்கு முன்பிருந்தே கவலைப்பட்டுக்கொண்டிருந்த செல்லம்மாள், இந்த ஏற்பாட்டை மனதார வரவேற்றாள்!

கமலம் கறுப்புத்தான் என்றாலும் குறுகுறுப்பு, கவர்ச்சியுடைய முகம்—அதிக அழகு என்றில்லாவிட்டாலும் அவலட்சணம் என்று யாரும் அவளை ஒதுக்கிவிட முடியாது! என்று நடராஜன் மனம் எண்ணியது. வயது பதினெட்டு ஆகிறது; ஆனால் என்ன? எனக்குமட்டும் இருபத்தாறு ஆகவில்லையா? என்று தன்னைத்தானே கேள்வி கேட்டுச் சமாதானம் செய்துகொண்டான் அவன். செல்லம்மாளுக்குக் கமலத்தைத் தன் மருமகளாகக்கொள்ளவேண்டும் என்று பரிபூரண ஆசை இருந்தது. எனவே நடராஜன் அவன் தாயின் விருப்பத்தை நிராகரிக்க முடியவில்லை. ஏற்கனவே தன்னால் அவள்பட்ட துயர் போதும், இந்த ஒருதடவையாவது அவள் விருப்பம்போல் செய்யட்டும் என்று எண்ணித்தான் கலியாணத்திற்குச் சம்மதித்தான் அவன்.

ஆனால்! இவ்வளவு சீக்கிரம் தன் கலியாணத்திற்கு ஏற்பாடு செய்வார் என்று நடராஜன் எண்ணவேயில்லை. கிராமத்திற்கு வந்துபோன பத்தாவது நாள் கலியாணம் நடக்க நிச்சயம் செய்து நாள் குறித்துவிட்டார் செல்வரங்க முதலியார்!

"நாளை இந்நேரம் கிருஹஸ்தனாகிவிட்டிருப்பேன். பின்னர் உடனே வேலை தேடவேண்டும்- கமலத்துடனும், தாயுடனும் வரகனேரியை விட்டே, திருச்சியைவிட்டே சென்றுவிடவேண்டும் சென்னைக்கு!'' நடராஜன் இதயத்தை எண்ண அலைகள் ஒவ்வொன்றாக வந்து தாக்கிய வண்ணமாயிருந்தன.

ஏதோ ஒரு ஸ்டேஷனில் மெயில் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு நின்றது. நடராஜன் காலடியில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அந்த 'ஸ்டீல் டிரங்க்' 'பட்' டென்ற சப்தத்துடன் கீழே சாய்ந்ததைக் கவனித்த அவன், பெட்டியைப் பெஞ்சிக்கு அடியில் நகர்த்தினன். அப்போது அவன் பையிலிருந்து கடிதம் ஒன்று விழுந்தது கீழே. அதை ஆர்வமுடன் எடுத்துப் பிரித்து நூற்றுஒன்றாவது தடவையாக அதனுள்ளிருந்த அந்தப் போட்டோவைப் பார்த்தான். ஆம், அவனுடைய அத்யந்த நண்பன் கிருஷ்ணசாமியினுடைய திருமணப் போட்டோவும் பழைய திருமணக் கடிதமும்தான் அவை. கிருஷ்ணசாமியின் வாழ்க்கையைப் பற்றி எண்ணிய நடராஜன் மனதில் ஒரு நிமிடம் பொறாமையின் பொறி ஒன்று பறந்தது. அடுத்தகணம் அவனிடமிருந்து ஆழ்ந்த பெருமூச்சு வெளிவந்தது!

"எவ்வளவு அருமையான 'ஆதர்ச' தம்பதிகள் கிருஷ்ணசாமியும், மேரியும்! அவனுடைய புன்னகை தவழும் முகமும் மேரியின் குறுநகை புரியும் நயனங்களும் ஆஹா! எவ்வளவு அழகான பொருத்தம்! ஆம். கிருஷ்ணசாமி மிகவும் அதிர்ஷ்டம் செய்தவன்தான்! காதலுக்குப்பின் கல்யாணம் நடந்தது. அவனுக்கு!-- ஆனால் எனக்கோ? மணமானபின் ஆற அமரயோசித்துத்தான் காதல்!'

கிருஷ்ணசாமி சென்னையில் ஒரு செல்வந்தரின் புதல்வன். நடராஜன், காலத்தின் கோலத்தால் ஏற்பட்ட வறுமையின் காரணமாக மிலிட்டரியில் வந்து சேர்ந்தது போலவே நன்றாகப் படித்துப் பட்டமெல்லாம் பெற்ற கிருஷ்ணசாமி, வீட்டில் ஏற்பட்ட சச்சரவின் காரணமாகப் பெற்றோரை விரோதித்துக் கொண்டு மிலிட்டரியில் வந்து சேர்ந்தான்! அங்குதான் அவன் அதிர்ஷ்டச் சக்கரம் சுழன்றது! அவனுடைய மேலதிகாரியாயிருந்த மேஜர் துரை ஒருவரின் கடாட்சம் அவன்மேல் பரிபூரணமாக விழுந்தது. பலன் கிருஷ்ணசாமி வெகு சீக்கிரமே "காப்டன் கிருஷ்ணசாமி"யானன்! அத்துடன் மேஜர் துரையின் பெண் 'மேரி'யின் கடைக்கண் பார்வைமுன் நிற்க முடியாமல் தவித்த அவன், கடைசியில் அவளிடமே அடைக்கல மடைந்தான்! அவனுடைய 'கலப்பு மணம்' எவ்வளவு புகழுரைகளுடன் எத்தனை பேபர்களில் வந்தது! தான் மிலிடரியை விட்டு வந்ததும், கிருஷ்ணசாமி வர விருப்பமில்லாமல் அதிலேயே உழைப்பதாக வாக்குறுதி அளித்ததும் நடராஜனுக்கு நினைவு வந்தது.

"ஹூம்! இந்த மூன்று வருடங்களில் ஒரு 'கர்னலாக'வாவது ஆயிருப்பான் கிருஷ்ணசாமி ......அவன் இருப்பிடம்கூட எனக்குத் தெரியவில்லை. ஏதோ பழைய முகாமுக்கு அல்லவா திருமணப் பத்திரிகை அனுப்பியிருக்கிறேன்? அவன் கையில் அது கிடைக்குமோ, கிடைக்காதோ?......

## 3

சென்னை எழும்பூரில் நடராஜனை வரவேற்கச் செல்வரங்க முதலியார் மட்டுமே வந்திருந்தார். அவர் முகம் களையிழந்து வெளிறிக் கிடந்தது. கலியாண அலுவல்களினுல் ஏற்பட்ட களைப்பு அவருக்கு என்றெண்ணிய நடராஜன் அவர்பால் அநுதாபம் கொண்டான்.

கலியாணத்திற்கு முதலியாரின் சுற்றத்தார் அதிகம்பேர் வரவில்லை, நடராஜன் வகையிலும் அவன் மாமாவும் சிற்றப்பாவும் குடும்பத்துடன் வந்திருந்தனர், அவ்வளவுதான்!

முகூர்த்த நேரம் நெருங்க நெருங்க நடராஜன் உள்ளம் காரணம் தெரியாதபடி படபடத்தது! 'சீர்' என்றவகையில் ஏதோ சுமாராகச் செய்திருந்தார் முதலியார். ஒரு பாங்கி குமாஸ்தாவிடம் இதைவிட அதிகமாக எதிர்பார்ப்பது அழகல்ல என்று தன் மனதைத் தேற்றிக்கொண்டான் அவன்.

வீட்டின் நடுக்கூடம்; அழகாக அலங்கரிக்கப்பட்ட பூப்பந்தல்; கீழே கோலமிடப்பட்ட இடத்தில் மணைகள் இரண்டு. எதிரே 'ஹோமம்' வளர்க்கும் குண்டம். அதிலிருந்து வந்துகொண்டிருந்த புகை கொஞ்சம் கொஞ்சமாக கூடம் பூராவும் ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. தன் கண்களைக் கசக்கிவிட்டுக்கொண்டே இரு மணைகளுள் ஒன்றில் அமர்ந்துகொண்டான் நடராஜன். மணப்பெண்ணை அலங்கரித்து அவனருகில்வந்து உட்காரவைத்தனர். வாசலில் நாதஸ்வர கோஷ்டியினர் அந்தத் தெருவே அதிரும்படி தம் கை வரிசையைக் காட்டிக்கொண்டிருந்தனர். விவாகச் சடங்குகள் ஆரம்பமானதும், அடக்கவியலாத ஆவல் தூண்டப்பட்டவனாய் நடராஜன் தன் வலதுபக்கம் திரும்பினுன். கமலத்தைக் கடைக்கண்ணால் பார்த்தான். ஆ! அவன் இதயம் ஒரு நிமிடம் நின்றுவிட்டது. அவன் தலை கிறுகிறென்று சுற்றியது. நிமிர்ந்து பார்த்தான். தன்னைப் போலவே தன் தாயும் மணப்பெண்ணைக் கூர்ந்து நோக்குவதைக் கண்டான், அருகில் செல்வரங்கமுதலியாரும் அவர் மனைவியும் நின்றுகொண்டிருந்தனர், அவர்கள் முகத்தில் ஈயாடவில்லை. புரோகிதர் கையில் கொடுத்த 'மாங்கல்ய'த்துடன் பெண்ணின் கழுத்தை நெருங்கிய நடராஜனின் கரங்கள் நெருப்புச் சுட்டதுபோல் பின்னுக்கிழுத்துக்கொண்டன! ஆம்; அவன் பார்த்து நிச்சயம் செய்த கமலா அல்ல, மணையில் உட்கார்ந்திருந்தது! நடராஜனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. துக்கம் தொண்டையை அடைக்க "அம்மா!..." என்று தன் தாயை அழைத்தான் ஈனஸ்வரத்தில்.




"என்னடப்பா நடராஜு!" செல்லம்மாள் தன் பிள்ளையின் அருகில் வந்து நின்றுகொண்டாள் உடனே.

"நாம் மோசம் போவதற்கு இருந்தோம் அம்மா! கடவுள்தான் நம்மைக் காப்பாற்றினார்........." என்றான் தழுதழுத்த குரலில் நடராஜன். உடனே செல்லம்மாள் மணப்பெண் அருகில் வந்து அவள் முகத்தை மூடியிருந்த மலர்த்திரையை விலக்கினாள். அவள் கண்களும் நிலைகுத்தி நின்றுவிட்டன. கமலத்தைவிட இரண்டு மூன்று வயது பெரியவளும், அழகு என்று சொல்லமுடியாதவளுமான ஒரு பெண் தான் மணையில் உட்கார்ந்திருந்தாள்!!!

"முதலியாரே! மணையில் உட்கார்ந்திருக்கும் பெண் யார்? பட்டப் பகலில் இந்த மோசடியா? நிச்சயதார்த்தத்தின்போது ஒரு பெண்ணைக் காட்டுவது; கலியாணத்திற்கு வேறொரு பெண்!" தன் கண்களையே நடராஜனால் நம்ப முடியவில்லை.

"ஏ......ன் என்......பெண்தான். கல்யாணி! கம......லத்தின் அக்கா......என்னுடைய...மூத்த பெண், மாப்பிள்ளை!"

"ஓ!......பின் எனக்கு நிச்சயம் செய்திருந்த பெண் கமலம்தானே! இந்தப் பெண்ணை மணையில் கொண்டுவந்து உட்கார்த்தி வைப்பதன் அர்த்தம்?.........தங்களுக்கு மூத்த பெண் ஒன்று இருப்பதாகவும், அவளும் கலியாணமாகாத பெண் தானென்றும் எங்களுக்கு அறிவிக்கும் புதுமுறை போலிருக்கிறது! பேஷ்!"

நடராஜன் கோபத்தில் வார்த்தைகளை அள்ளி வீசினான் முதலியாரை நோக்கி. சட்டென்று மணையில் உட்கார்ந்திருந்த அந்தப்பெண் எழுந்திருந்தாள். நடராஜன் திரும்பினான். அவள் அவனைப் பார்த்த அந்தப்பரிதாபமான பார்வை! —ஆ! அந்தக் கண்களின் துயர தீட்சண்யத்தைத் தாங்க அசக்தனாய் வேறு பக்கம் திருப்பிக் கொண்டான் முகத்தை!

கைகளால் முகத்தை மூடியவாறே, விசித்துக் கொண்டே அந்தப் பெண் உள்ளே ஓடினாள் ... ...ஆ!? இதென்ன? நடராஜன் நன்றாகக் கவனித்தான்; ஆம்; கல்யாணியின் இடது கால் கொஞ்சம் ஊனம்! விஷயம் அறிந்ததும் அவன் உள்ளம் கொழுந்துவிட்டெரிந்தது! அவன் தாய் செல்லம்மாள் ஒரு மூலையில் முகத்தை மூடிக்கொண்டு கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள். நடராஜனுக்கு முன்னமே, கல்யாணத்திற்கு வந்திருந்த பெண்கள் மூலமாகச் சமாசாரம் முழுவதும் அறிந்துகொண்ட அவன் தாயுள்ளம் ஆயிரம் சுக்கல்களாகச் சிதறிப்போயிருந்தது.

"இருந்திருந்து ஓரே பையன் கலியாணம். அவனுக்கா இந்த நொண்டிப் பெண்!? ஒரு பெண்ணைக் காட்டி வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்துவைக்கத் துணிந்த இந்தச் செல்வரங்க முதலியார் எவ்வளவு பெரிய நயவஞ்சகர்! ஆஹா! இந்த இடத்தில் இனிமேல் கால் வைப்பதும் பெரிய தவறு!" செல்லம்மாளின் மனம் துயரத்தால் துடித்தது.

செல்வரங்க முதலியாரோ, அவர் மனைவியோ ஒன்றும் பேசாமல் சிலையாகிவிட்டிருந்தனர். அவர்கள் கண்களிலிருந்தும் கண்ணீர் வடிந்தது.

"நடராஜா! நல்ல இடம் பார்த்து, சம்பந்தம் செய்ய உன் தாயார் அவசரப் பட்டாள்! ஏதோ நல்ல காலம்! நீ பிழைத்தாய்! நொண்டிப் பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு அவஸ்தைப் படும்படியாகவா உன் தலையில் எழுதியிருந்திச்சு? ஹூம்! இந்தப் பட்டினமே படுமோசம்! இனி அரை நிமிஷம்கூட இங்கே தாமதிக்கக் கூடாது! புறப்படு சீக்கிரம்!" என்று இரைந்தவாறே நடராஜனின் மாமாவும் சிற்றப்பாவும் தங்கள் பெட்டி படுக்கைகளுடன் புறப்பட்டுவிட்டனர். நடராஜன் மனம் ஒரு நிலையில் இல்லை. அவன் மாமா வந்து தடுத்திராவிட்டால் செல்வரங்க முதலியாரை அடித்தேயிருப்பான்;

"ஹூம், கல்யாணியாம் கல்யாணி! பேரைப் பார்! சகல கல்யாண குணங்களும் அம்சங்களும் இல்லாமல் போனாலும் குறையாவது இல்லாதிருக்கக்கூடாதா? நொண்டிப் பெண்ணுக்குப் பெயர் கல்யாணி!"

உள்ளம் வெறுத்து வறண்ட சிரிப்பு ஒன்று சிரித்தான் நடராஜன், அவன் மாமா அவன் கைகளைப்பற்றிக் கரகரவென்று வாசலுக்கு இழுத்துவந்தார். வாயில் மச்சுப்படியில் நின்றுகொண்டு ஓர் உருவம் தன்னை நோக்குவதைக் கண்ட அவன் நிமிர்ந்து பார்த்தான். ஆம். கமலம் தான் கண்களில் நீர்மல்க நின்றுகொண்டிருந்தாள்!

மாலை சுமார் மணி மூன்றுக்கு எல்லோரும் எழும்பூர் ரெயில்வேஸ்டேஷன் வந்து சேர்ந்துவிட்டனர். நடராஜனது தாயார் செல்லம்மாள் கண்ணீர் விட்டவண்ணமாக இருந்தாள்.

திருப்பவும் கிருஷ்ணசாமியின் நினைவு வந்தது நடராஜனுக்கு! "அவன் தற்போது இங்கு இல்லாதிருந்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று!"

சட்டென்று தன் பெட்டியைத் திறந்து காகிதம் ஒன்றெடுத்து நீண்ட கடிதம் எழுதினான் நடராஜன், கிருஷ்ணசாமிக்கு!

"என் வாழ்க்கை முழுதுமே துயரப் புயல்தான் அடிக்கிறது கிருஷ்ணசாமி! இத்தகைய பயங்கர அநுபவம் ஒன்றும் உங்கள் ஆதர்ச வாழ்க்கையில் ஏற்படவேண்டாம்! உனக்கும் உன் மனைவி மேரிக்கும் இத் துர்ப்பாக்கியனின் வணக்கங்கள் என்று எழுதிமுடித்து அதைக் கிருஷ்ணசாமியின் விலாசத்திற்குத் தபாலில் சேர்த்தபின்னரே நடராஜன் மனதிற்குச்சிறிது ஆறுதல் ஏற்பட்டது.

## 4

நடராஜன் மனதிலிருந்த துயரச் சுமையைப் போலவே அளவற்ற பிரயாணிகளுடன் தூத்துக்குடி மெயில் இரவு சரியாக 9. 10 மணிக்குப் பெருமூச்சு விட்டுக்கொண்டே எழும்பூரை விட்டு நகர்ந்தது.

கல்யாணத்திற்குப் போகும்போது இருந்த மன நிலையையும் திரும்ப இப்போது போகும் போது இருக்கும் மன நிலையையும் ஒரு கணம் ஒப்பிட்டுப் பார்த்தான் அவன்! அவன் உள்ளம் புழுங்கியது.

"அப்பா! ஒருவழியாக ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பினோம், எனக்கு வாழ்க்கைத் துணைவியாக இருக்கவேண்டி, கலியாணம் செய்துகொள்ளப்போக, நொண்டிப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு அவள் வாழ்வு பூராவும் அவளுக்கு ஊன்றுகோலாகவல்லவோ இருக்க நேரிடவிருந்தது?!... ஹூம்! கிருஷ்ணசாமியைப் போல், 'காதலுக்குப்பின் கல்யாணம்' என்றில்லாவிட்டாலும் கல்யாணம் செய்துகொண்டு 'காதல்' என்ற பதத்தின் அர்த்தத்தை அறிந்துகொள்ளக்கூட அந்தப் பாழும் தெய்வம் சந்தர்ப்பம் அளிக்கவில்லையே!"

"ஹூம்! மறந்தேபோயிட்டேனே! இன்னிக்கு உனக்குவந்த கடுதாசிகளையெல்லாம்

பார்க்கவேயில்லையே நீ?'' நடராஜன் தாய் அவனிடம் ஒரு கத்தைக் கடிதங்களைக் கொடுத்தாள்.

"என்ன எழுதியிருக்கப்போகிறார்கள்! எல்லாம் நண்பர்களின் திருமண வாழ்த்துச் செய்திகளும், தந்திகளுமாகத்தான் இருக்கும்; இதைப் போய்ப் படிக்கவேறு வேண்டுமா?...'' என்று தான் மனம் எண்ணியது.

அவன் எதிர்பார்த்த கடிதங்கள்தான் அவை. ஒவ்வொரு வாழ்த்துச் செய்தியையும் சுக்கு நூறுகக் கிழித்து ஜன்னல் வழியாக வெளியே விட்டெறிந்தான். கிருஷ்ணசாமியின் கடிதமும் அதில் இருந்தது. கடிதம் கனமாக இருந்ததால் அவசரம் அவசரமாக அதை உடைத்துப் படித்தான். ஆம், அது கிருஷ்ணசாமியின் கடிதமல்ல! கதை!!

* * *

"நான் டில்லி நகர் மிலிடரி ஆஸ்பத்திரியிலிருந்து இந்தக் கடிதம்—அல்ல, கதை—எழுத ஆரம்பித்தேனென்றால் நீ ஆச்சர்யப்படுவாய் நடராஜன்! ஆம், நானே ஆச்சர்யப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்!!

சுமார் நான்கு வருடங்களுக்கு முன் என் மனைவி 'மேரி'யை. முதன் முதலாக நான் டில்லியில், மிலிடரி 'ஹெட் குவாடர்ஸ்' ஆபீஸில் மேஜர் துரையின் அருகில் கண்டதும் காதல் கொண்டேன் என்றதும், அந்த இடம், நேரம் எல்லாம் எனக்குப் புனிதமானவை 'என்று நீங்கள் எல்லோரும் கேலி செய்திருக்கிறீர்கள்! போகட்டும்! அதே இடத்தில், கிட்டத்தட்ட அதே காலத்தில், தன் தந்தையிடம் அதே 'மேரி' என்னுடைய 'விவாகரத்து' செய்வதைப்பற்றிய அவருடைய அநுமதியைப் பெற்றாள் என்றால் அது ஆச்சர்யப்படவேண்டிய விஷயமல்லவா? அப்படியானல், அதே காலம், இடம் எல்லாம் என்வரையில் பாவம் செய்த சமயமாகவல்லவோ ஏற்படுகின்றது?

நான் 'காப்டன்' ஆனதும் எனக்கும் மேரிக்கும் நடந்த ரிஜிஸ்தர் விவாகம் எவ்வளவு பேர்களால் புகழப்பட்டு, போட்டோவுடன் எத்தனை பத்திரிகைகளில் வந்தது என்பதும் உனக்குத் தெரியும்! அப்போது நானும்தான் எண்ணிக் கொண்டிருந்தேன், 'என்னைப்போல் பாக்கியசாலி, யாரும் இருக்கமுடியாது' என்று!

விவாகத்திற்கு முன் நானும் 'மேரி'யும் பேசிக் கொண்ட அன்பு மொழிகள்கூட மணமான பின், ஒருநாளும் பேசியறியோம் என்றால், நீ நம்பமாட்டாய்! ஆம். பூ கவர்ச்சிகரமாகத் தான் இருந்தது. ஆனால், அதில் தேனுக்குப் பதில் விஷம்தான் இருந்தது!

"நம் நாட்டுக் கலாசாரத்தை, மேல்நாட்டுக் கலாசாரத்துடன் ஒப்பிட முடியாது, நாகரிகத்தின் சிகரம் மேல்நாட்டுக் கலாசாரம்!'' என்று நான் உன்னிடம் அப்போது விவாதித்திருக்கிறேன். ஆனால் என்னவோ, என் மனைவி 'மேரி,' டில்லி நகரின் பெரிய ஆங்கில ஹோட்டல்களிலும் பொழுது போக்கும் விளையாட்டுக் கிளப்புகளிலும் பிறருடன், வேறு ஆடவருடன் சேர்ந்து கொண்டு நடனமாடும்போதும் என்னுடல் சாணகத்தான் குறுகியது, குன்றியது! அவளுடைய கேளிக்கைகளுக்கும், டாம்பீக வாழ்க்கைக்கும் நான் ஒரு 'உதவும் ஊழியனுகத்தான் இருந்துவந்தேனேயொழிய, கணவன் என்ற முறையில் அவள் என்றும் என்னை மதிக்கவேயில்லை.'

இந்த நிலையில்தான் அந்தத் துர்அதிர்ஷ்டமான சம்பவம் நடந்தது!—ஏன்? அதிர்ஷ்டமானதும் கூட!—

போன மாதம் ஒரு நாள், மேரியின் வீம்புக்கு அடிபணிந்து, அவள் தோழி ஒருத்தியை அழைத்துவரும் நிமித்தம், இரவு பத்து மணிக்கு மேல், டில்லியைவிட்டுப் பத்து மைல் அருகேயுள்ள ஒரு கன்டோன்மெண்ட்டுக்குக் கிளம்பினேன் என் காரில்.

எனவே, நான் எதிர்பார்த்த துர் அதிர்ஷ்டம் கார் விபத்துமூலம், டில்லிக்கு ஐந்துமைல் மேற்கே, யாருமற்ற பெரியதொரு ரஸ்தாவில் என் வசமிழந்து என் கார் ஒரு விளக்குக் கம்பத்தை முத்தமிட்டுக்கொண்டதால் ஏற்பட்டது! விபத்தில் நான் உயிர் தப்பியது அதிசயம்தான்.

நாள் பூராவும் அநேக சிப்பாய்களுடன் 'மிலிடரி பாரேட்' செய்துவிட்டு வந்திருந்ததால் என்னுள்ளம் போலவே உடலும் சோர்ந்து போயிருந்தது. அதனால்தான் கார் விபத்து நேரிட்டது. ஆனால் என் வலது முழங்கால் எலும்புகொஞ்சம் முறிந்துவிட்டதாக ஆஸ்பத்திரியில் சில நாட்களுக்குப்பின் தெரிந்துகொண்டேன்.

விபத்துக்குப்பின் நடந்தவை ஒன்றும் கோவையாக எனக்குத் தெரியாது. மூன்று தினங்கள் நினைவிழந்து டில்லிநகர் ஜனரல் ஆஸ்பத்திரியில் கிடந்தேன். பின் மிலிடரி ஆஸ்பத்திரிக்கு மாற்றப்பட்டேன். நான் சுய நினைவையடைந்தபோது பகல் மணி இரண்டிருக்கும். என் படுக்கையருகே என் மனைவி 'மேரி'யும் அந்த வார்டின் டாக்டரும். நர்ஸும் நின்றுபேசிக் கொண்டிருந்தனர். எனக்கு நினைவு வந்தது அவர்கள் ஒருவருக்கும் தெரியாது. என் வலது காலைச் சுற்றிப் பெரிய 'பிளாச்சு' வைத்துக் கட்டி 'பாண்டேஜ்' போட்டிருந்தனர். அது ஒரே கனமாகக் கனத்தது. 'பளிச்'சென்று நிமிடத்திற்கு ஒருதரம் பொறுக்கமுடியாத வலி ஒன்று வந்துகொண்டிருந்தது அந்தக் காலில். திறந்த கண்களை அரைகுறையாக மூடிக் கொண்டே அவர்கள் பேசுவதை நன்கு கேட்டேன்.

"நாங்கள் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. முழங்கால் மூட்டு முறிந்திருந்தால் விமோசனமே ஏற்பட வழியில்லை, நல்லவேளை முறிவு முழங்காலுக்குக் கீழே உள்ள எலும்பில்தான் ஏற்பட்டிருக்கிறது. அப்படி நடக்க ஆரம்பித்தாலும் ஊனமின்றி நடக்கப் பல மாதங்கள் ஆகலாம்!"

"ஆ! டாக்டர்! அப்போது இவர் வேலைக்குத் திரும்பவும் வர இயலாது என்று கூறுங்கள்!" என்று கிரீச்சிட்டாள் மேரி. அவள் முகம் விகாரமடைந்து பீதியுடன் தோற்றமளித்தது!

'உஸ்' என்று டாக்டர் உதட்டில் விரலை வைத்துச் சப்தம் செய்யாதிருக்குமாறு மேரிக்கு, 'சமிக்ஞை' செய்தார். பின் ஏதோ 'குசுகுசு' வென்று பேசியபடி மூவரும் அறையைவிட்டு வெளியேறினர்.

"ஹும்! நான் பிழைத்து எழுந்ததைப் பற்றி ஒரு சந்தோஷ வார்த்தையைக் காணோம். என் வேலையைப்பற்றியல்லவா கவலைப்படுகிறாள் மேரி! நல்ல காதல் மனைவி எனக்கு!"

ஆனால்? என் உடல் நிலையைப்பற்றிய கவலையே எனக்கு ஏற்படவில்லை. என் 'மேரி'யைப் பற்றிய கவலைதான் ஏற்பட்டது! என்னை வேலைக்கு மறுபடியும் எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டால்? மறுத்துவிட்டால்?!...ஒரு 'காப்டன்' மனைவியாக இருக்கத்தான் 'மேரி' ஒப்புவாளே தவிர,—ஒரு நொண்டியின் வாழ்க்கைத் துணைவியாக ஆயுள் முழுவதும் கஷ்டப்பட ஒப்புவாளா?

எனக்கு நினைவு வந்ததுமுதல் அன்று வந்து போன பின்னர் ஒரு நாளாவது என்னை மேரி வந்து பார்க்கவில்லை. அதற்காக என் மனமும் வருந்தவில்லை. ஏனெனில் யாவும் நான் எதிர்பார்த்தபடியேதான் நடந்துகொண்டிருந்தது!

நான் எதிர்பார்த்த அந்தக் கடிதமும் வரத்தான் செய்தது, ஆனால் அதன் வாசகம்? படித்த என்னுள்ளம் விம்மியது!

"தங்கள் வலது கால் ஊனமாகவேதான் இருக்கும், என்ற கசப்பான உண்மையை டாக்டர் சொல்லிவிட்டார்! எனவே, தங்கள் வாழ்நாள் முழுவதும் என்னையும் தங்களுடனேயே கழிக்கும்படி, தங்களுடைய பரந்த இதயம் எண்ணுது என்று திடமாய் நம்புகிறேன்! எனக்கு விடுதலையளிக்க—இதனுடன் இணைத்திருக்கும் இந்த 'விவாக ரத்துப்' பத்திரத்தில் கையெழுத்திட்டு அனுப்புங்கள். என்னை மன்னித்துவிடுங்கள்!—தங்கள்—"மேரி!"

என் விபத்துக்காக, நான் அடைந்த குறைக்காகப் பச்சாதாபப்படும் ஒரு சொல்கூட காணவில்லையே அதில்! இதுதான் காதலா? கணவன் காலொடிந்து அவஸ்தைப் படும்போது அதைக் கண்டு உள்ளம் உருகாமல், தன் வாழ்நாளைப் பற்றிய பிரச்னையை யல்லவா முக்கியமாகக் கொண்டுவிட்டாள் மேரி! நம் ஹிந்து சமூகத்தில் கணவன் என்னதான் பொல்லாதவனாக இருக்கட்டும்; அவன் கஷ்டம் கண்டு மனைவி கண்ணீர் உகுக்காமல் இருக்கமாட்டாள்!

நடராஜன்! என் காதல் திருமணத்தைப் பற்றிப் பொறுமைகூடச் சிலர் கொண்டிருந்தனர்; அவர்கள் மனம் இப்போது குளிர்ந்திருக்கும்! ஆம், 'விவாக ரத்து' மனுவில் கையெழுத்திட்டு அனுப்பிவிட்டேன்; கூடவே, டாக்டர் சர்ட்டிபிகேட்டின் பேரில், மேரியின் தந்தையின் மூலம் 'மிலிடரி'யிலிருந்தே எனக்கு விடுதலையளிக்குமாறு கோரியிருந்தேன்! "பாவம்! மேரியினுடைய அடுத்த பலி யாரோ?" என்றெண்ணிய போது என்னுள்ளம் உண்மையாகவே அந்தக் கற்பனைப் புருஷனுக்காக வருந்தியது!

அந்தச் சமயம்தான் உன்னுடைய திருமணப் பத்திரிகையும் கடிதமும் பல இடங்கள் சுற்றிவிட்டு ஆஸ்பத்திரி வந்து சேர்ந்தன! பத்திரிகையைக் கண்டதும் சிறு குழந்தையைப் போல் விசித்து அழவேண்டும்போல் தோன்றியது எனக்கு! ஏன் தெரியுமா? உன் கலியாணத்திற்கு வர இயலாமை குறித்துத்தான்! வந்து, 'காதலுக்குப்பின் கலியாண'மல்ல! 'கலியாணத்திற்குப்பின் காதல்'தான் வாழ்வில் ஒளிபெறக்கூடியது!" என்று உனக்கு அறிவுறுத்த முடியாமல் போனதற்காகத்தான்.

ஒரு சமாசாரம்—நான் வாழ்க்கையில் கண்ட துர்ப்பாக்கிய அநுபவம்போல் என் நண்பர்கள் வாழ்க்கையொன்றிலும் ஏற்படவேண்டாம்!—

மணமாகும் தம்பதிகளுக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

அன்பு—"கிருஷ்ணசாமி"

நடராஜன் பெருமூச்சு விட்டான் "பாவம்! கிருஷ்ணசாமியின் வாழ்க்கை எவ்விதம் பாழாகிவிட்டது! அவனைக் கண்டு பொறுமைகூடக் கொண்டேனே!" அவன் ஆஸ்பத்திரியில் காலொடிந்து படுத்திருக்கும் கோலத்தை ஒருகணம் கற்பனை செய்துபார்த்தான் நடராஜன். அவன் மெய் சிலிர்த்தது.

"அந்த நொண்டிப் பெண்ணின் பரிதாபமான பார்வை! கமலத்தின் கண்ணீர்விடும் அந்த முகம்!—என்ன மனவேதனை! திரும்பத் திரும்ப அதே நினைவுதானா?" நடராஜன் தன் மனதைக் கட்டுப்படுத்துவதறியாமல் தவித்தான். நாள் பூராவும் சுற்றிய களைப்பு, இரவு முழுதும் கண் விழித்த அசதி, யாவும் அவனையறியாமல் உறக்கத்தில் ஆழ்த்தின! எல்லோர் கவலைகளும் மறக்க இயற்கையளிக்கும் சந்தர்ப்பம் அது ஒன்றுதான்!

## 5

"வாழ்க்கையில் நாம் எதிர்பார்க்கும் சம்பவங்களைவிட எதிர்பாராத சம்பவங்களே அதிகம் ஏற்படுகின்றன. அவற்றில்தான் வாழ்க்கையின் 'ரசனை'யும் இருக்கிறது" இவ்விதம் தனக்குத்தானே யோசனை செய்தவாறே, சரியாக ஒரு வருடத்திற்குப் பின்னர், அதே சென்னைக்குத் திருச்சியிலிருந்து பகலில் புறப்படும் சென்னை எக்ஸ்பிரஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தான் நடராஜன்!

ஒரு வருஷம் இடைவெளி! அதற்குள் எவ்வளவு மாறுதல்! முன்னரும் அவன் தன் கலியாணத்தின் பொருட்டுத்தான் சென்னை சென்று கொண்டிருந்தான்! இப்போதும் அதேகாரணத்திற்காகத்தான். ஆனால் வித்தியாசம்?

முன்போல் வேலையின்றி இருக்கவில்லை நடராஜன், திருச்சியில் ரேடியோக் கம்பெனி ஒன்றில் பொறுப்புமிக்க பதவி வகித்துக்கொண்டிருந்தான். நின்றுபோன கல்யாணத்தைப்பற்றி அவன் அநேகமாக மறந்துவிட்டான், ஆனால்? அன்றுவந்த அவன் நண்பன் கிருஷ்ணசாமியின் கடிதம்? பழையபடி சென்னைக்குப் புறப்பட்டதும் அந்தக் கடிதத்தினால்தான்! "நண்பனின் துயர வாழ்க்கையின் பிற்பகுதி இந்தக் கடிதத்திலேயே அடங்கிவிட்டதே!" என்று வியந்தவாறே சட்டைப் பையிலிருந்த கிருஷ்ணசாமியின் கடிதத்தை மறுபடியும் எடுத்துப் பிரித்தான் நடராஜன்!

* * *

"சிலருடைய வாழ்க்கையின் அநுபவங்கள் சிலர் வாழ்க்கையைத் திருத்தி அமைக்க உதவிவிடுகின்றன! என் கதையும் அவ்விதமே!

உன் கடிதம் என் கைகளில் கிடைத்த இரண்டு நாட்களுக்கெல்லாம் எனக்கு ஆஸ்பத்திரியிலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது, மேரியிடமிருந்து விடுதலை கிடைத்தது போலவே! ஆனாலும் 'மிலிடரி'யிலிருந்து விடுதலைபெறக் கொஞ்ச நாள் ஆயிற்று.

நானும் வலது கால் நொண்டியாகத்தான் ஆஸ்பத்திரிவிட்டு வெளிவந்தேன். அப்போது என் மனம் பட்டபாடு! ஆ! கற்பனைக்கூடச் செய்யமுடியாது. இந்த அநுபவம் இனி எப்போதும் எனக்கு ஏற்பட வேண்டாம்!

உலகில் குறையுடனே பிறக்கக் கூடாது, நடராஜன்! பிறந்துவிட்டால் அவதிதான்! நான் நொண்டியான பின்னர்தான் நீ வெறுத்துவந்த அந்த நொண்டிப் பெண் 'கல்யாணி'யின் உள்ளக் குமுறல்களைக் கற்பனை செய்ய முடிந்தது என்னால்! ஆஹா! நீயும் உன் சுற்றத்தாரும் செல்வரங்க முதலியார் வீட்டிலிருந்து சண்டை செய்துகொண்டு புறப்பட்டுப் போகும்போது அந்தப் பெண்ணின் உள்ளம் எவ்வளவு துடித்திருக்கும்?! நான் முதலியாரை ஆதரித்துப் பேசுவதாக எண்ணிவிடாதே, நடராஜன்! அவர் செய்தது அநியாயம்தான். ஆனால்? அதற்காக? அவர் பெண் என்ன குற்றம் செய்தாள்? நொண்டியாகப் பிறந்துவிட்டது அவள் குற்றமா? கால்தான் குறையேதவிர, உள்ளம் ஊனமில்லையே? அந்தப் பெண்ணுக்காகவாவது உன் உள்ளம் இரக்கப்பட்டுத்தான் இருக்கவேண்டும்!

அப்போது என் மனதில் தோன்றிய ஒரே எண்ணம் இதுதான்: நீ வாழ்வளிக்க மறுத்த அந்த நொண்டிப் பெண்ணுக்கு, நான் வாழ்வளிக்க முன்னுக்கு வருவது!

ஆனால், நானும் கொஞ்சம்-கொஞ்சம்-நொண்டியாயிற்றே? எனக்குப் பெண் கொடுக்கச் செல்வரங்க முதலியார் சம்மதிக்கவேண்டுமே? நான் ஆஸ்பத்திரியைவிட்டு வரும்போது டாக்டர் எனக்கு நன்றாக உபதேசம் செய்துவிட்டிருந்தார்; அதன்படியே டில்லியில் 'கால்பந்து,' 'கிரிக்கட்' முதலிய விளையாட்டுக்களில் அதிகமாக ஈடுபட்டதன் மூலம் என் கால் வலுப்பெற்று வெகுவாகக் குணமாகிவந்தது! "இனி நான் நொண்டியல்ல!" என்ற அந்த நிலை ஏற்பட்டதும் நான்கொண்ட சந்தோஷம் அளவற்றது!

நேரே சென்னை வந்தேன். என் தந்தை எப்போதோ காலமாகிவிட்டார். தாயைத்தான் இளம் வயதிலேயே இழந்துவிட்டேன். தந்தை வைத்துப்போன அவ்வளவுபெரிய சொத்துக்கும் நான்தான் வாரிசு.

நான் செல்வரங்க முதலியாரிடம் சென்று அவர் மூத்த பெண்ணைக் கலியாணம் செய்து கொடுக்கும்படி கேட்டதும் அவர் முதலில் நம்பவில்லை; நான் அவரைக் கேலி செய்வதாக எண்ணிவிட்டார்! ஏனெனில் கலியாணம் நின்று போய் அவமானம் நடந்ததிலிருந்து அவர் அதிகமாக மனம் நொந்துப்போயிருந்தார். பின்னர் தம் பெண்களுக்கு வரன் தேடுவதையே விட்டுவிட்டார்! "ஈசன் விட்டவழி!" என்றிருந்தவருக்கு, "ஈசன் என் மூலம் வழிவிட்டார்!" என்று இப்போது கேட்டால் சொல்லுவார்! தம்முடைய நொண்டிப் பெண்ணுக்கு வந்த அதிர்ஷ்டத்தைக் கண்டு அவர் அயர்ந்துவிட்டார். அவர் குடும்பத்தில் நான் இப்போது 'மாப்பிள்ளை' யாக இருக்கவில்லை! தங்கள் குடும்பத்தின் குறையையே தீர்க்கவந்த தெய்வம்போலத்தான் கொண்டாடுகிறார் என்னை, அவர்!

ஆம், நான் நொண்டிப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்துகொண்டேன்! இது என்னுடைய இரண்டாம் விவாகம்தான்! அதனால் நான் ஒன்றும் குறைந்துபோய்விடவில்லை. எங்கள் திருமணம் என் நண்பர்கள் ஒருவருக்குமே அறிவிக்காத வகையில் ஆடம்பரமின்றி நடந்தது.

அதற்காக என்னை நீ மன்னித்துவிடு! ஏனென்ருல், என்னுள்ளத்திலிருந்து ஏதோ அச்சுறுத்தியவண்ணம் இருந்தது, " உனக்கு இந்தக் கல்யாண சமாசாரத்தை எட்டவிடாதே!" என்று. இது 'கேப்டன்' கிருஷ்ணசாமியின் கலியாணமில்லை; வெறும் கிருஷ்ணசாமியின் இரண்டாம் விவாகந்தானே?

இன்று என் வாழ்க்கை அமைதி பெற்றுவிட்டது. என்ருல் இனி சும்மாவிருக்கமுடியாது! உன் வாழ்க்கையில் புயலும் ஓய்ந்தபின்னர்தான் எனக்கு அமைதி!

தங்களுடைய துணிச்சலான செய்கைக்காகச் செல்லரங்க முதலியார் மட்டுமல்ல, அவர் குடும்பமே எவ்வளவு வருந்தியது, தெரியுமா உனக்கு? நீ அன்று பார்த்துப்போன என் மனைவியின் தங்கை, என் மைத்துனி 'கமலம்' இன்றும் கலியாணமாகாமல்தான் நிற்கிருள்! காரணம் நீதான்! தன் வாழ்வையே பாழ்படுத்திவிட்டதாக அவள் தன் தந்தையை வார்த்தைகளாலும் கண்களாலும் இன்றும் சுட்டெரித்துக்கொண்டிருக்கிருள்!

இப்போதும் ஒன்றும் வீண்போகவில்லை! இதோ நான் தனி வீடுகட்டிவிட்டேன். இரண்டு நாட்களில் ஆடம்பரத்துடன் " கிருஹப்பிரவேசம்" செய்யப்போகிறேன் குடும்ப சகிதமாக.

" அன்று என் புது இல்லத்தின் முதல் விருந்தினனுக நீ வரவேண்டும்; வந்து இழந்த சம்பந்தத்தை மீண்டும் பெற்று கமலத்தை—அன்று உங்கள் கிராமத்தில் கண்ட கமலத்தையே—கலியாணம் செய்துகொள்ளவேண்டும்!" என்பதே என்னுடையதும், என் மனைவியினுடையதுமான பேரவா! நிறைவேற்றுவாயா?

"கிருஷ்ணசாமி"

நடராஜன் உள்ளம் கிருஷ்ணசாமியை காணத் துடித்துக்கொண்டிருந்ததுபோலவே, வெய்யிலின் கடுமையைப் பொருட்படுத்தாமல் 'எக்ஸ்பிரஸ்' வண்டி சென்னை நோக்கிப் பறந்துகொண்டிருந்தது!

இந்த ஒரு வருடத்துள் நடராஜனின் தாய் செல்லம்மாள் ஏக்கத்தினுல் இன்னும் பத்து வயது முதிர்ச்சியடைந்துவிட்டதுபோல் தோற்றமளித்தாள். தன் ஒரே மகனுடைய கலியாணத்தைத் தான் இறப்பதற்கு முன் காணப்போகிருேமா? என்ற அவ நம்பிக்கைதான் நாளுக்கு நாள் அவளிடம் வளர்ந்துகொண்டு வந்தது. கிருஷ்ணசாமியின் கடிதத்திலிருந்த சமாசாரம் தன் தாயின் காதுக்கு எட்டியதுகூடத் தவறு என்று நடராஜன் மனம் ஒரு கணம் எண்ணியது. "நண்பனுடைய யோசனையைக் கேள்! எத்தனை நாள் இப்படிக் கலியாணம் செய்துகொள்ளாமல் இருக்கப்போகிருய்" என்று அவன் தாய் அவனை வற்புறுத்த ஆரம்பித்ததுதான் அவன் பிரயாணத்திற்கு உடனடியான காரணம்!

சாயந்திரம் மணி ஐந்து இருக்கும். வெய்யிலின் கடுமை நன்ருகத் தணிந்துவிட்டிருந்தது. சுகமான குளிர்ந்த தென்றல் வீசிக்கொண்டிருந்தது.

காப்பி சாப்பிட்டுவிட்டுத் தன் பெட்டிக்குத் திரும்பிவந்த நடராஜன், தன் இடத்தை யாரோ ஒரு இளம் பெண்ணும் பெரியவர் ஒருவரும் ஆக்கிரமித்துக்கொண்டிருக்கக் கண்டான்! அவனைக் கண்டதும் அந்தப் பெண் பார்த்த பார்வை! —நடராஜனை ஒரு குலுக்குக் குலுக்கியது. தன்னையே ஒருமுறை பார்த்துக்கொண்டான். அவ்வளவு அருவருப்புடன் அந்தப்பெண் அவனைப் பார்க்கக் காரணம்? அவனுக்கு விளங்கவேயில்லை.

" அம்மா! கொஞ்சம் மனமிரங்குங்க தாயே!"

நடராஜன் திரும்பினுன். அப்பாடா! அவனுக்கு மூச்சுவந்தது. ஆம் அந்த இளம் பெண் அவனை அவ்விதம் நோக்கவில்லை. அவன் பின்ஞல் நின்று பிச்சை கேட்டுக்கொண்டிருந்த, அங்கமெல்லாம் குறைந்த குஷ்டரோகியான பிச்சைக்காரனையல்லவா!

" சகஜம்தான்! அந்தப் பிச்சைக்காரனைக் காண்பவர் யாவரும் முகத்தைச் சுளித்துக்கொள்வது சகஜம்தான்! ஆனுல், பிச்சைக்காரனின் பரிதாபமான பார்வை!" நடராஜன் மனம் திரும்பவும் தன் பழைய சம்பவங்களை நோக்கத் தாவியது. ஆம், நொண்டிப் பெண் கல்யாணி எழுந்து உள்ளே எழுந்து ஓடினபோது பார்த்த அதே பரிதாபமான பார்வைதான். அவன் உள்ளம் படபடத்தது. இப்போது பார்த்த அந்தப் பெண்ணுடைய அதே அருவருப்புக் கலந்த பார்வைதான் அன்று அவன் அந்த நொண்டிப் பெண்ணைப் பார்த்த பார்வையும்! நடராஜன் உவகையுள்ளத்தில் ஒரு விரிசல் கண்டது!

வண்டி நகர்ந்துகொண்டிருந்தது. "என்னுடைய அந்த வெறுப்பு—அருவருப்பு—மிகுந்த பார்வையை ஒரு பெண்ணுல் இந்த ஒரு வருடத்திற்குள் மறந்துவிடமுடியுமா?"

கல்யாணியின் பெற்ருேர்கள் அன்று பேசுவதறியாமல் அவமானத்தால் குன்றி நின்ற நிலை நடராஜன் கண்களுக்குமுன் ஒரு படம்போல் காட்சியளித்தது. "அவர்களா, இன்று தங்கள் பெண்ணை மனமுவந்து கலியாணம் செய்துகொடுக்கச் சம்மதித்தார்கள்? இல்லை! இருக்கவே முடியாது! என்னதான் கிருஷ்ணசாமியின் முயற்சியின்பேரில் கலியாணம் நடந்தாலும், அது மனதொப்பிய மணமாகுமா? ஆம், 'உடைந்த சட்டி' என்றுமே ஒட்டாது! நண்பன் கடிதத்தைக் கண்டு அவசரப்பட்டு ஆலோசியாமல் புறப்பட்டு வந்தது எவ்வளவு மதியீனம்?"—

நடராஜன் மனத்திடையே பெருத்த போராட்டம் நடந்தது. தன் செய்கைக்காகப் பெரிதும் வருந்தினுன். ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான் வண்டி தாம்பரத்தைவிட்டுப் புறப்பட்டுப் போய்க்கொண்டிருந்தது. சட்டென்று தன் பெட்டியைத் திறந்து காகிதம் ஒன்றையெடுத்து, கிருஷ்ணசாமிக்குக் கடிதமெழுதினுன்.

"உடைந்த சட்டி என்றுமே ஒட்டாது! அன்று அவ்வளவு தூரம் மனம் வெறுத்துப் புறப்பட்டு வந்த என்னுள்ளம் மறுபடியும் அங்கே கால் எடுத்து வைக்கத் தயங்குகிறது; உடல் கூசுகிறது. உன் முயற்சிக்கு என் நன்றி! மன்னிக்கவும்!

அன்பு! "நடராஜன்"

கடிதத்தை உறையிலிட்டு மூடினுன். இரவு மணி சரியாக ஏழடிக்கவும் திருச்சி எக்ஸ்பிரஸ் எழும்பூர் ஸ்டேஷனுள் நுழையவும் சரியாக இருந்தது.

"போர்ட்டர்! நில்! இதோ முதல் பிளாட்பாரத்திலிருக்கும் வண்டி எங்கே போகிறது"

"அது திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸுங்க! திருச்சி வளியா திருவனந்தபுரம் போவுதுங்க!"

"அது புறப்பட இன்னும் எவ்வளவுநேரம் இருக்கிறது?"

"ஏனுங்க? பத்து நிமிஷந்தான் இருக்குதுங்க!"

"சரி! முதலில் பெட்டியையும் படுக்கையையும் அந்த வண்டியில் மூன்ரும் வகுப்புப் பெட்டி ஒன்றில் கொண்டுபோய்வை! நான் இதோ வருகிறேன் டிக்கட் வாங்கிக்கொண்டு!"

போர்ட்டர் நடராஜன் சென்ற திக்கையே பார்த்துக்கொண்டு பிரமித்துப்போய் நின்றுகொண்டிருந்தான். வந்தவழியாகவே அவன் உடனே திரும்பும் காரணம் அவனுக்கு நாளது வரை விளங்கவேயில்லை!!






மௌனத் தோற்றத்தோடு காணப்பட்ட அக்கட்டடத்தினுள் அவன் நுழைந்தபோது ஏறக்குறைய இருள் சூழ்ந்து விட்டது என்றே கூறலாம். பணியாட்கள் யாவரும் ஏற்கனவே போய் விட்டிருந்தனர். மாடியில் அறையொன்றில் தனிமையில் அமர்ந்து தம் அன்றைய வேலையை ஒருவாறு முடித்துக்கொண்டு புறப்பட்டுக் கொண்டிருந்தார் அதன் நிர்வாகி.

பருத்துக் கம்பீரமாய்க் காணப்பட்ட அவர் தான் உலகம்போற்றும் 'மெழுகரசன்'. பல வர்ண மெழுகைக்கொண்டு அற்புதமான உருவங்களைத் தத்ரூபமாய்க் காட்சி அளிக்கும் வண்ணம் சமைத்து அக் கட்டிடத்தையே நிரப்பி இருந்தார். நூற்றுக்கணக்கான மக்கள் நாள்தோறும் அவருடைய கலை மண்டபத்தையடைந்து அவ்வபூர்வ சிற்பங்களைக் கண்டு அவரைப் போற்றிப் புகழ்ந்து விட்டுச் சென்றனர்.

ஆனால் அபார கைவன்மை பெற்றிருந்த அவர், தாம் அமைக்கும் உருவங்களைத் தேர்ந்தெடுப்பதில் கையாண்ட வினோதமுறை அவ்வூராருக்கு ஆச்சரியத்தை அளித்தது. தலைவர்கள், தியாகிகள் முதலியவர்களைப் போன்றோரைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் உருவத்தைச் சமைக்காமல், நாட்டில் பல பாகங்களில் பல்வேறு காலங்களில் இருந்து வந்த சட்ட விரோதிகளையும், கொலைஞர்களையுமே பொறுக்கி அவர்கள் உருவங்களை மெழுகினால் செய்து வைத்திருந்தது, அக்கட்டடத்திற்கே ஒரு பயங்கர சூழ்நிலையை உண்டு பண்ணி இருந்தது. அக்காரணம்பற்றியே அக்கட்டடத்தினுள் அஸ்தமனத்திற்குப் பின் எவரும் நுழைய முன் வராதிருந்ததோடு, அங்கே பகலில் வேலைசெய்யும் பணியாட்கள்கூட இரவில் தங்க மறுத்து விட்டிருந்தனர். சிறிது நாட்களிலேயே இந்த அச்சம் யாவர் மனத்திலும் ஆழப்பதிந்து விட்டதுடன் அக்கட்டிடம் இருந்த தெருப்பக்கமாகக் கூட இரவில் எவரும் செல்லத் துணிவற்றவராய் விட்டனர்.

தம் வேலையை முடித்துக்கொண்டு கடைசியில் எழுந்த நிர்வாகி தலை நிமிர்ந்து நோக்கியபோதுதான் தம் அறைக் கதவைத்திறந்து, கொண்டு அதில் சாய்ந்து நின்றவண்ணமிருந்த அவ்விளைஞனைப் பார்த்தார். ஏற இறங்க ஒருமுறை அவனைப் பார்த்த அவர் முகத்தில் சற்று வியப்புத் தோன்றியது. இந்த நேரத்தில் தம் கட்டிடத்தினுள் தைரியமாய் நுழையக்கூடிய ஒருவன் இருப்பது வியப்படையத் தக்கதுதானே!

தலையசைத்தவாறே அவனை வரவேற்று அங்கிருந்த நாற்காலியொன்றில் அமரச் செய்தார்.

“யாரப்பா நீ? என்ன வேண்டும்?”

“நான் ஒரு பத்திரிகை நிருபன். தங்கள் கலை மண்டபத்தைப் பார்த்து, அதைப்பற்றி விமர்சனம் எழுதலாம் என்ற உத்தேசம்!”

மறுமுறை அவனை ஏற இறங்கப் பார்த்த நிர்வாகியின் முகத்தில் மெல்லப் புன்னகை படர்ந்தது.

"ஓ! அப்படியானால் நீ நாளைக்குப் பகல் நேரத்தில் வந்து பார்த்துவிட்டுப் போக லாமே! சாதாரணமாக இரவில் இங்கு எவருமே வருவதில்லை. நான்கூட இப்போது போய்விடுவேன்!"

"இல்லையில்லை! இதற்குமுன் பகல் நேரங்களில் வந்து நானே இரண்டொருமுறை இச் சிற்பங்களைப் பார்த்துவிட்டுச் சென்றிருக்கிறேன், இப்போது நான் வந்த காரணம் சிற்பங்களைப் பார்ப்பதற்கு மட்டுமல்ல. ஓர் இரவு முழுதும் இக்கட்டிடத்தினுள் தனியாக இச்சிற்பங்களுக்கு மத்தியில் இருந்து அந்த அனுபவத்தைக் காணவேண்டும். இக் கட்டிடத்தைப் பற்றியும் சிற்பங்களைப் பற்றியும் ஊரில் பரவியுள்ள அர்த்தமற்ற கிலி மறைவதற்கு இந்த என் அனுபவம் உதவியாயிருக்குமல்லவா!"

உண்மையில் நிர்வாகி அசந்து விட்டார். பணம் அளித்தும் அங்கு இரவு நேரத்தில் காவல் புரிய எவனும் இதுவரை முன் வராமலேயே இருக்க, இந்த இளைஞன் தனிமையில் அங்கு ஓர் இரவைக் கழிப்பதாகக் கூறுகிறானே! தம் கையினாலேயே ஆக்கப்பட்டிருந்தாலும் அச்சிற்பங்களுடன் இரவு நேரத்தைக் கழிக்கத் தமக்கு இதுவரை தைரியம் வந்ததில்லை. அப்படியிருக்க இவ்விளம் பத்திரிகையாளன் உண்மையில் தைரியசாலி தானா! ஆனால் அப்படி அவன் ஓர் இரவைக் கழித்துவிட்டு மறுநாள் அந்த விவரத்தைப் பத்திரிகையில் விளம்பரப் படுத்தினால் நிச்சயம் அது மக்கள் மனத்தில் வேரூன்றி இருக்கும் பீதியை அகற்றி விடலாமல்லவா?

நீண்ட பெருமூச்சுடன் அவனை உற்று நோக்கியபடியே கூறலானார்.

"அப்பா! உன் யோஜனை சிறந்தது என்பதில் ஐயமில்லை. அவ்வளவு தைரியம் உனக்கிருக்குமானால் நான் மகிழ்ச்சி அடைவதோடுகூட உன் சிரமத்திற்கு ஈடு செய்யவும் முன் வருகிறேன். ஆனால் ஒன்று மட்டும் கூறுகிறேன். நீ நினைக்கிறபடி அவ்வளவு சுலபமாய் இருக்காது இவ்வேலை என்று தான் எனக்குத் தோன்றுகிறது. கொலைஞர்கள் மத்தியில் இரவு முழுதும் தனிமையில் தங்குவது என்பது அவ்வளவு உற்சாகம் தருவதாக இல்லை. என் வரைக்கும் என்னால் இக்காரியத்தைச் செய்யமுடியாது. இப்போது சற்று நேரம் கடந்துவிட்டது கூட எனக்கு இதை விட்டுச் சென்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தை உண்டாக்கிவிட்டது! இதோடு நாளைக் காலைதான் இங்கு வரத் தோன்றும்...!"

இளைஞனின் முகத்தில் எவ்வித மாறுதலும் தோன்றவில்லை. புன் சிரிப்புடனேயே நிர்வாகியைப் பார்த்துக் கூறினான்.

"ஓ! அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்! நான் பத்திரமாகவே இருப்பேன்! கேவலம் உயிரற்ற மெழுகு உருவங்கள் தானே அவைகள்! என்னை என்ன செய்துவிட முடியும்? அவ்வுருவங்கள் வைக்கப்பட்டிருக்கும் ஹாலுக்குள் என்னை அனுப்புங்கள். இப்போதிருந்தே நான் அங்கே தங்குகிறேன். இரவு ஆகாரத்தையும் அந்த ஹாலுக்குள்ளேயே முடித்துக் கொள்கிறேன்.

அவன் கையில் வைத்திருந்த பை முன்னேற்பாட்டுடனேயே அவன் வந்திருப்பதை நிர்வாகிக்கு அறிவுறுத்தியது. அதற்குமேல் அவர் ஆலசியம் செய்யாமல் அவனை அழைத்துக் கொண்டு மாடியை விட்டிறங்கினார்.

"அந்த ஹாலில் சாய்வு நாற்காலிகளும், மேஜையும் இருக்கின்றன! உனக்கு எப்படி இருக்கவேண்டுமோ அப்படி இருக்கலாம். நான் வந்து அந்த உருவங்களை உனக்கு அறிமுகம் செய்துவிட்டுக் கதவைப் பூட்டிக்கொண்டு செல்கிறேன். மறுபடியும் நாளைக் காலை சந்திக்கலாம்."

இருவரும் ஹாலை அடைந்தபோது சுமார் ஏழு மணி ஆகிவிட்டது. வீட்டிற்குச் செல்ல ஏற்கனவே நேரமாகி விட்டிருந்ததால் நிர்வாகி வீண் காலதாமதம் செய்யாமல் பரபரப்புடன் அவனுக்கு விஷயத்தை விளக்கிக் கொண்டிருந்தார்.

"இதுதானப்பா ஹால்! தற்சமயம் இங்கே பத்துப் பன்னிரண்டு உருவங்கள்தான் இருக்கின்றன. இதோ மேஜை, நாற்காலி, கட்டில் யாவும் போடப்பட்டிருக்கின்றன. உன் சௌகரியப்படி நீ தங்கி இருக்கலாம்."

அறையைச் சுற்றி ஒருமுறை நோக்கிய அவன் அங்கு நின்ற தோற்றங்களைப் பார்த்தான். மங்கலான விளக்கொளியில் நீண்ட நிழல்களைப் பரப்பியவாறு நின்று கொண்டிருந்தன அவ்வுருவங்கள். ஒவ்வொன்றும் நிஜத்தோற்றத்துடன் காணப்பட்டதேயன்றி, வெறும் மெழுகுப் பொம்மை யென்று கூறுவதற்கே இடமின்றி இருந்தது, சற்று நேரம் அவைகளைத் தனித்தனியே கவனித்த அவன் அந்நிர்வாகியின் கைவன்மையைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை.

இதற்கு நடுவில் நிர்வாகி அவனுக்கு ஒவ்வொரு சிற்பத்தையும் காட்டி அது யாருடைய உருவம்

என்பதையும், அவனுடைய பெயரையும், அவன் எவ்வளவு கொலைகளைச் செய்திருந்தான் என்பன போன்ற விவரங்களையும் கூறிக்கொண்டிருந்தார். மௌனமாகவே கேட்டுக் கொண்டுவந்த இளைஞன் கடைசியில், மேஜைக்கு அருகில் நின்று கொண்டிருந்த உருவம் ஒன்று தன் கவனத்தை வெகுவாய் இழுப்பதை உணர்ந்தான். பெரிய ஒரு பீடத்தின் மத்தியில் நிறுத்தப்பட்டிருந்த அவ்வுருவம் சுமார் ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒரு கனவானின் பிரதி பிம்பமாய் இருந்தது. பளிச்சென்றிருந்த அதன் முகம் கவர்ச்சிகரமாய் இருந்ததுடன் கூரிய அதன் கண்கள் அவன் மனத்தை ஊடுருவின. உயிருள்ளதுபோல் அவ்வளவு உணர்ச்சி பொங்கும் அதன் வதனத்தைக் கண்கொட்டாமல் பார்த்த அவன் கடைசியில் நிர்வாகியைப் பார்த்து அதன் விவரத்தைக் கூறும்படி கேட்டான்.

"ஓ! அதுவா? அதை நேற்றுத்தான் முடித்து வைத்தேன். நான் செய்த உருவங்களிலெல்லாம் சிறந்தது அதுதான். மூன்றுவருடங்களுக்கு முன்பு பிரபலமான டாக்டர் ஒருவர் இருந்தாரே — கருணாகரன் என்ற பெயருடன் — தெரியுமா? அவருடைய உருவம்தான் அது!"

"அதையேன் இங்கு வைத்திருக்கிறீர்! அவர் சட்ட விரோதமான காரியம் எதுவும் செய்யவில்லையே?"

நிர்வாகி மெல்லச் சிரித்தார்.

"உனக்கு விவரம் தெரியாது! அவர் பிரபல டாக்டராய் இருந்து சிறந்த சேவை செய்து வந்தாலும் அவரிடம் ஒரு பலஹீனம் இருந்தது! திடீரென்று அவருக்குப் பைத்தியம் பிடித்ததுபோல் ஆகிவிடும்! தம்மிடம் சிகிச்சைக்குவரும் நோயாளிகளில் யாரையாவது ஒருவரை இரகசியத்தில் கொன்றுவிடுவார். கூரான கத்தியைக் கொண்டு கழுத்தைத் துண்டாக அறுத்துக் கொல்வதில் தான் அவர் கைதேர்ந்தவர்! அதில் அவருக்கு அபாரதிருப்தி! வெகுகாலம் இது ஒருவருக்கும் தெரியாமல் இருந்தது. போலீசாராலும் இதைச் செய்பவர் யார் என்று கண்டு பிடிக்க முடியாதபடியே நடந்து வந்தார். ஆனால் கடைசியில் எப்படியோ உண்மை தெரிந்துவிட்டது. அவரைக் கைது செய்யப்போகும் தருணத்தில் அவர் தப்பியோடிவிட்டார். அவரைப்பற்றிப் போலீஸுக்குத் தகவலே கிடைக்கவில்லை. அவர் மறைந்து இரண்டு மாதத்தில் இதைப்போன்ற கொலை மேலும் இரண்டு நடந்தது. அப்போதும் அவர் பிடிபடவில்லை அதற்குப்பின் அவரைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை — இந்த மூன்று வருஷங்களாக. இருக்கும் நிலைமையை ஆராய்ந்து பார்த்ததில், அவர் எங்கேயோ சென்று தற்கொலை செய்து கொண்டிருக்கவேண்டும் என்றுதான் போலீஸார் நம்புகிறார்கள்......!"

இவ்விவரத்தை அறிந்த அவன் மறுபடியும் அவ்வுருவத்தை உற்றுப் பார்த்தான். பளபளத்த கண்களுடன் அது ஊடுருவிப் பார்த்தது அவன் அங்கத்தைப் புல்லரிக்கச் செய்தது. அதன் முகத்தில் வீசிய அறிவுச் சுடர் அவனைப் பிரமிக்க வைத்தது! அடாடா! இப்பேர்ப்பட்ட ஒருவனா இக்காரியங்களைச் செய்தான்!

நிர்வாகி கடைசியில் ஒருவாறு விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்.

"நான் காலையில் வந்து கதவைத் திறக்கிறேன். பத்திரமாய் இரு! இங்கு எவரும் புகமுடியாது......!" என்று கூறிவிட்டு, ஹால் கதவை வெளியில் பூட்டிக்கொண்டு சென்றுவிட்டார்.

அவர் சென்று ஐந்து நிமிஷங்கள் அவன் அவ்விடத்திலேயே நின்று மறுபடியும் அவ்வுருவங்கள் யாவையும் ஒருமுறை பார்த்தான். ஆயினும் அவன் கவனம் முழுதும் டாக்டரின் உருவத்திலேயே லயித்திருந்தது. அதன் கண்களின் பார்வை அவ்வளவு தெளிவாக எப்படி அமைந்தது!

மேஜைமீது வைத்திருந்த பையைத் திறந்து அதனுள் இருந்த ஆகாரத்தைப் புசிக்க ஆரம்பித்தான் மெதுவாக. ஒருவாறு அதை முடித்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி நிர்வாகி கூறிய விவரங்களையெல்லாம் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

நன்றாக இருள் சூழ்ந்து இரவு வந்துவிட்டதால் எங்கும் அமைதிதான் நிலவி இருந்தது. அக்கட்டிடத்தின் மோன சொரூபம் எதிர்பார்த்ததற்குமேல் உள்ளத்தில் பரபரப்பை உண்டாக்கியது. பெரிய பெரிய உருவங்கள் தன்னைச் சுற்றி நிஜ மனிதர்களைப்போலிருந்தும் அவைகள் பேசாமல் நின்றது வேதனையாகத்தான் தோன்றிற்று, சே! என்ன இருந்தாலும் பேச்சுத் துணைக்கு ஒருவர் இல்லாவிட்டால் எவ்வளவு கஷ்டமாய் இருக்கிறது!

மறுபடியும் எதற்கோ தலையைத் திருப்பியவன் கண்களில் டாக்டரின் உருவம் பட்டது. அது ஏன் அப்படித் தன்னை உற்றுப் பார்க்கவேண்டும்! மற்ற உருவங்கள் எல்லாம் எங்கெங்கேயோ பார்க்கும்போது, இதுமட்டும் தன்னையே கவனிக்கிறதே! என்ன இருந்தாலும் நிர்வாகியின் கைத்திறன் சாமானியமானதல்ல!

சட்டைப் பையிலிருந்து காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக்கொண்டு, அன்று மாலையில் தான் வந்தது முதல் நடந்தவை யாவையும் நிதானமாக எழுதத் தொடங்கினான்.

சுமார் பத்து நிமிஷம் எழுதியிருப்பான், அதற்குள் மூலையில் ஏதோ சிறிய சப்தம் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்ததில் இரண்டு மூன்று எலிகள் வேகமாய் ஓடிக்கொண்டிருந்தன. இந்த எலிகளுக்கு உலகம் பூராவும் இருப்பிடமா?

மறுபடியும் எழுதத்தொடங்கத் தலையைத் திருப்பும்போது டாக்டரின் முகம் தென்பட்டது. அதையே சற்று நேரம் பார்த்தான். அதன் உதடுகளில் சிறிய புன்னகை தவழ்ந்திருக்கிறதே! அது

முன்பே இருந்ததா? தான் அப்போது சரியாய்க் கவனிக்கவில்லையா என்ன? ஹூம்......! என்ன இருந்தாலும் அதன் கண்களில் இவ்வளவு கூர்மை வேண்டாம்! கொலைகாரனின் கண்களா இவைகள்!

திரும்பவும் எழுத ஆரம்பித்தான். ஆனால் கை ஓடவில்லை. மெல்ல எழுந்தான், நாற்காலியைச் சற்று இழுத்துத் திருப்பி, தனக்குப் பின்னால் டாக்டரின் உருவம் நிற்கும்படி அமர்ந்தான்.

ஐந்து நிமிஷங்கள் ஏதோ யோஜனை செய்தவன் சட்டெனத் திரும்பிப் பார்த்தான். ஆனால் அங்கொன்றும் விசேஷமாய் இல்லை. அதே உருவம் தான் அப்படியே நின்றுகொண்டிருந்தது!

"சீ, என்ன பைத்தியக்காரத்தனம்! மெழுகுப் பொம்மை தத்ரூபமாய் இருந்தால் அதற்காக இப்படியேன் சந்தேகப்படவேண்டும்! அது என்ன செய்யும்......!"

இவ்விதம் சமாதானப்படுத்திக்கொண்டே மறுபடியும் அமர்ந்தான். ஆனால் டாக்டரின் ஊசிக் கண்கள் அவன் பின்தலையைத் துளைத்து ஊடுருவிப் பார்ப்பதுபோல் தோன்றியது அவனுக்கு! என்னதான் ஆனாலும் சரி, இனி அதைத் திரும்பிப்பார்க்கக் கூடாது என்ற சங்கற்பத்தில் கண்களை மூடியபடி இருந்தான்.

ஆனால் அதே சமயம் அவன் மனம் இடித்துக் காட்டத் தொடங்கியது. கேவலம் ஒரு மெழுகுப் பொம்மையின் பார்வைக்குப் பயந்தா அதைப் பார்க்காமலிருப்பது! அது எவ்வளவுதான் வெறித்துப் பார்த்தாலும் வெறும் பொம்மை தானே......!

திரும்பிப் பார்க்கலாமா என்று எண்ணினான். அப்போதும் மனம் இடம் தரவில்லை. அது என்ன செய்துவிடுமோ என்ற பயத்தினால்தானே திரும்பிப் பார்க்கத் தோன்றுகிறது! கூடாது! எப்படி இருந்தாலும் சரி, அதைப் பார்ப்பதில்லை!

மேலும் பத்து நிமிஷங்கள் சென்றன. கண்களின் இமை மெல்லக் கனக்க ஆரம்பித்தன. உண்ட களை வேறு அசதியை அளித்தது. ஆனால் தூக்கம் மட்டும் வரவில்லையே! இதே நிலையில் எத்தனை நேரம் உட்கார்ந்திருப்பது! தலையைத் திருப்பினால்தான் என்ன......?

சற்று நேரம் உலாவலாம் என்றெண்ணி மெல்லத் தலையை நிமிர்ந்தவன் ஒரு துள்ளுத் துள்ளித் திரும்பினான். அந்த உருவம் அசைந்ததா என்ன......! பார்த்தால் ஒன்றும் தெரியவில்லையே! தன்னிடத்தைவிட்டு ஓர் அடி தூரம் முன்னே வந்துவிட்டுப்போனதுபோல் பட்டதே! ஒருவேளை தான் பார்க்காமலிருக்கும்போது அது முன்னே வந்துவிட்டு, தான் பார்க்கும்போது அந்த இடத்திற்கே போய் விடுகிறதா!

மறுபடியும் நாற்காலியில் அமர்ந்தான். தோள் புறமாய்ச் சிறிது தலையைத் திருப்பி ஜாடையாக அதைப் பார்த்தான். ஆனால் ஒன்றும் புரியவில்லை.

"சேச்சே! இதென்ன பிரமை! பொம்மையாவது அசைவதாவது! தூக்கக் கலக்கம்போல் இருக்கிறது......!"

என்று கூறியபடியே மறுபடியும் கண்களை மூடிக்கொண்டான். இப்படியே இரவு பூராவும் கழித்துவிட்டால் நாளைக்கு இந்த அனுபவத்தைக் கொண்டே சிறந்த கட்டுரை எழுதி விடலாம். இதுவரை நடந்த விவரங்களையே வைத்துக் கொண்டு ஆரம்பித்துவிடலாமே!

இவ்விதச் சிந்தனையுடன் மறுமுறை தலை நிமிர்ந்தவன் சரேலென எழுந்து நின்று டாக்டரை



உற்று நோக்கினான், இம்முறை அது உண்மையாகவே அசைந்ததா! அவ்வளவு தெளிவாக அது நகர்ந்ததுபோல் தோன்றிற்றே! ஒருவேளை வீண் மனத்தோற்றம்தானா! இதென்ன அவஸ்தை!

மறுகணம் நாற்காலியைத் திருப்பி அவ்வுருவத்திற்கு எதிரேயே போட்டுக்கொண்டு அதை நோக்கியபடி அமர்ந்தான்.

"டாக்டர்! இப்போது பார்க்கிறேன் உன் சாமர்த்தியத்தை! நீ மட்டும் அந்த இடத்தை விட்டு அசை......! பிறகு......!"

அதே சமயம் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டான்! அட ஈச்வரா! தன்னைப்போல முட்டாள் வேறு யார் இருக்கப் போகிறார்கள்! மெழுகுப் பொம்மையுடன் யுத்தமா......!

நாலு வரிகள்கூடக் குனிந்து எழுதியிருக்கமாட்டான், மறுபடியும் தலை தானாகவே நிமிர்ந்தது!

"இதென்ன சங்கடம்! இந்த டாக்டர் என்னை யேன் இப்படித் துளைக்கிறான், ஒருவேளை 'ஹிப்னாடிசம்' வேறு செய்து கொண்டிருந்திருப்பானா! ஏன் கூடாது? கத்தியால் கழுத்தை அறுக்குமுன் அவர்களைத் தன் கண்களாலேயே மயங்க வைத்திருக்கலாமல்லவா......! அப்பப்பா! மனிதனா இவன்......!"

ஏதோ யோஜனையுடன் மறுபடியும் அவ்வுருவத்தைப் பார்த்தவன் அப்படியே கல்லாய்ச் சமைந்து அமர்ந்துவிட்டான்! ஆம்! சந்தேகமே இல்லை! அந்த மெழுகுப் பொம்மை அசையத்தான் செய்கிறது! அத்துடனின்றி, தன்னை நோக்கி வேறு வருகிறதா? ஐயோ! பீடத்தின் மையத்தை விட்டு ஓரத்திற்கு வந்துவிட்டதே! மெழுகு டாக்டர் உயிர்பெற்று வந்துவிட்டானா...?

நாற்காலியைவிட்டுக் குதித்து எழுந்து நிற்க முயன்றான். ஏனோ கால்கள் எழும்பவில்லை! ஆணி அறைந்ததுபோல் அவ்விடத்திலேயே அமர்ந்து வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். பேசக்கூட முடியாதபடி நாக்கு மடங்கி நின்றது!

இதற்குள் பீடத்தின் ஓரத்தை நெருங்கிவிட்ட டாக்டர், சாவதானமாக அதை விட்டிறங்கி அவன் எதிரே அப் பீடத்தின் நுனியில் அமர்ந்தார்! அவன் எழுந்தாலும் அவரை மீறித்தான் செல்லும்படி அவனைத் தடுத்த வண்ணம் இருந்தது அவருடைய இடம்!

குறுகுறுத்த பார்வையுடன் அவனை உற்று நோக்கினார் ஒரு கணம், சிவந்திருந்த அவர் இதழ்கள் மெல்லப் புன்னகை புரிந்தன.

"அப்பாடா! இன்றிரவு தனியாக இங்கிருக்க வேண்டுமே என்று நினைத்தேன்...! நல்லவேளையாக நீ ஒரு துணை அகப்பட்டாய்......!"

"நீ......நீ......யார்......?"

"ஏன்! இன்னும் தெரியவில்லையா...! நான் தான் டாக்டர் கருணாகரன்! இக் கட்டிட நிர்வாகிதான் என்னைப்பற்றி முழுதும் கூறினாரே! அவர் சொன்னதெல்லாம் நிஜம்தான். ஆனால் நான் தற்கொலை செய்துகொள்ளவில்லை! போலீஸுக்குத் தப்பியோடி மூன்று வருடங்கள் எங்கெல்லாமோ சுற்றினேன். அடிக்கடி யார் கழுத்தையாவது துண்டிக்கவேண்டும் என்ற உணர்ச்சி வந்துவிடும். ஆனால் சமயம் தான் வாய்க்காது, அப்படியும் இரண்டு மூன்று நபரைத் தீர்த்துவிட்டேன்......!"



அவர் சற்று நேரம் நிறுத்தினார். அவன் மூச்சுமட்டும் துரிதமாய் வெளிப் போந்துகொண்டிருந்தது!

"இரண்டு நாளைக்கு முன்புதான் இந்த ஊருக்குவந்தேன். இன்று காலை இத் தெருக் கோடியில் வந்துகொண்டிருந்த போது எதிரே ஒரு போலீஸ்காரன் குறுக்கிட்டுவிட்டான்! அவன் என்னைப்பார்த்ததும் எப்படியோ அடையாளமும் கண்டுகொண்டுவிட்டான். ஆனால் அவன் என்னைப் பிடிக்குமுன் ஓரேஓட்டமாய்ஓடிவந்து, தற்செயலாய் இக் கட்டிடத்திற்குள் நுழைந்துவிட்டேன்! ஒருவர் கண்களிலும் படாமல் நான் இந்த ஹாலுக்குள் வந்த போது இங்கு எவரும் இல்லை.

"ஆனால் இங்கேதான் இவ் வியப்பு, காத்திருந்தது! பல உருவங்களுக்கு மத்தியில் என்னைப்போலவே தத்ரூபமாய் மெழுகு உருவம் ஒன்று நின்றுகொண்டிருந்தது ஆச்சரியமான விஷயம்தானே! அதை வெகுநேரம் உற்றுப் பார்த்தேன். அவ்வளவு நேர்த்தியாக அதைச் செய்த

சிற்பியின் கைத்திறனைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை!

"இதற்குள் வெளியே யாரோ வரும் ஓசை கேட்டது! இன்னது செய்வது என்று தெரியாமல் ஒரே தாவில் இப் பீடத்தின்மீது ஏறி அம் மெழுகு உருவத்தைத் தூக்கிப் பீடத்தின் அடியில் போட்டுவிட்டு, அது நின்ற இடத்தில் நான் நின்றுகொண்டுவிட்டேன்!

"கதவு திறந்ததும் யார்யாரோ வந்து என்னையும் மற்ற உருவங்களையும் பார்த்துவிட்டுச் சென்றனர். அப்போதிலிருந்து அசையாமல் இப்படித்தான் பகல் முழுதும் நின்றுகொண்டிருந்தேன். நூற்றுக்கணக்கானவர்கள் வந்து என்னைப் பார்த்து, தத்ரூபமாய் இருப்பதாகக்கூறிக்கொண்டு சென்றனர்! என் களைப்பும், பசியும் அவர்களுக்கு எங்கே தெரிந்தது! அவர்கள் ஒவ்வொருவருடைய கழுத்தையும் நாசூக்காய் நறுக்கி எறிய வேண்டும் என்று எனக்கு எப்படித் துடித்தது தெரியுமா! இரவு நேரம் எப்போது வரும் என்று காத்துக்கொண்டிருந்த எனக்கு, கடைசியில் மாலை ஆறு மணிக்கு யாவரும் சென்றுவிட்டபோதுதான் 'அப்பாடா' வென்றிருந்தது.

"ஆனால் எதிர்பாராதவகையில் நிர்வாகியும் நீயும் உள்ளேவந்தபோது உண்மையில் நான் பயந்துவிட்டேன். இது ஏதேனும் புதுத் தொல்லையில் வந்துவிடப்போகிறதே என்று எண்ணினேன். ஆனால் உங்கள் சம்பாஷணையிலிருந்து ஒருவாறு விவரம் புரிந்தது. கொலையாளிகள் நிறைந்த இந்த இடத்தில் நீ ஓர் இரவைக் கழிக்க வந்திருக்கிறாய் என்பதைக் கேட்ட எனக்குச் சந்தோஷமாய்த்தான் இருந்தது! எனக்கும் ஒரு துணை அகப்பட்டதே என்ற திருப்தி. அதோடு என் வெகு நாளைய ஆசை நிறைவேற மற்றொரு சந்தர்ப்பம் கிட்டியதே என்ற மகிழ்ச்சி!"



மறுபடியும் அவர் நிறுத்தினார். ஹீனஸ்வரத்தில் அவன் வாயினின்றும் 'ஆ' என்ற ஒலி எழுந்தது!

டாக்டரின் கை அவர் சட்டைப் பையினுள் சென்று திரும்பியது, மறு விநாடி பளபள வென்று மின்னிய கத்தி அவர் கரத்திற்கே தனி அழகைக் கொடுத்தது! மெல்ல எழுந்து அவனை நெருங்கினார்.

இளைஞனின் வாயினின்றும் இப்போது எந்தச் சப்தமும் வெளிவரவில்லை! அகல விரிந்திருந்த அவன் கண்கள் டாக்டரையே பார்த்துக்கொண்டிருந்தன!

"ஆமாம் அப்பா! உலகில் எனக்கு இந்த ஒரே ஆசைதான்! யார் கழுத்தைப் பார்த்தாலும் அதைத் துண்டிப்பதில் எவ்வளவோ இன்பம்! உன் கழுத்துச் சற்று சிறியதுதான்! இருந்தாலும் பாதகமில்லை! இந்தக் காரியத்தை முடித்துவிட்டு நான் உடனே போகவேண்டும்! இந்த ஊரில் நான் எங்குமே தங்க முடியாதுபோல் இருக்கிறது......! சரி...! கொஞ்சம் தலையை நிமிர்ந்துகொள்......! பரவாயில்லை......! ஹூம்...! இன்னும் கொஞ்சம்......! சரி......! போதும்......! உனக்காக மிகவும் வருந்துகிறேன் அப்பா! நாளைக்கு நீ கட்டுரை எழுதமுடியாது, பாவம்...!"

மறுகணம் அவன் கழுத்தில் ஜில்லென்று அக் கத்தி பட்டதுதான் தெரியும்!

* * *

மறுநாட் காலை சரியாக ஏழு மணிக்கு நிர்வாகி கட்டிடத்தை அடைந்து கதவைத் திறந்து உள்ளே சென்றபோது அவர் கண்களில் முதலில் பட்டது, சாய்வு நாற்காலியில் படுத்திருந்த இளைஞனின் உருவம்தான். அண்ணாந்தவாறு இருந்த அவன் தலை தொங்கி இருந்தது! மூச்சு நின்றுவிட்டிருந்த அவன் சடலம் கட்டைபோல் கிடந்தது! ஆயினும் அவன்மீது எவ்விதக் காயமும் காணப்படவில்லை!

அவனுக்கெதிரே பீடத்தின் மத்தியில் டாக்டரின் உருவம் அப்படியேதான் நின்றுகொண்டிருந்தது! ஜன்னல் மூலம் பாய்ந்தோடிவந்த சூரிய கிரணங்களில் அதன் மெழுகு மேனி பளபளத்தது! ●

# லண்டன் - கடிதம்

லீலா கோபாலன்

எல்லோருக்குமே புது ஆண்டு, 1951. லண்டனில், ஏன் மேல் நாடுகள் எங்குமே புது வருஷம் விடாப் பனி மழையுடன் ஆரம்பமாயிற்று. எப்பொழுதும் நான் எழுதுவது போல் இங்கு குளிர் நன்றாக நடுங்கிக்கொண்டுதான் இருக்கிறது. இந்த வருஷம் மழை வேறு சதா நசநசவென்று ஜனங்கள் பிராணனை வாங்குகிறது.

உயிரை வாங்குகிறது என்று நான் எழுதுகிறேனே, அது வெறும் எழுத்திற்காக மட்டும் அல்ல. இந்த வருஷ குளிர் காலம் இங்கிலாந்திற்கு அதிகச் சாவையும் உண்டு பண்ணி இருக்கிறது. ஒரு மாத காலமாக எங்கும் இன்பிளுயன்ஸா காய்ச்சல் மிகக் கடுமையாக இருக்கிறது. யாரைப் பார்த்தாலும் தும்மலும் இருமலும் தான். ஒவ்வொரு தொழிற்சாலையிலும் முக்கால்வாசிப் பேர்கள் காய்ச்சலினால் கஷ்டப்பட்டுக் கொண்டு வேலைக்கும் வரவில்லையாம். ஆஸ்பத்திரிகள் எல்லாம் ஓயாது வேலைசெய்கினறன. ஜ்வரத்தோடும் தொல்லையோடும் விட்டால் போதாதா? அதுதான் இல்லை. போன வாரத்திற்கு முன் வாரம் 590 பேர் இந்தக் காய்ச்சலினால் இறந்து போய் இருக்கிறார்கள். "பிணக்குழி தயார் செய்வதற்காக வேலைக்காரர்கள் எல்லாம் இரவில்கூட விளக்குப் போட்டுக்கொண்டு பூமியை வெட்டுகிறார்கள்" என்று எல்லாப் பத்திரிகைகளும் தலையங்கம் எழுதியதைப் படிக்கும்போது ஜனங்கள் மனதில் பீதிவராமல் என்ன செய்யும்? சாதாரண ஜலதோஷம் தலைவலி வந்தால்கூட "நமக்கும் இனபிளுயன்ஸா காய்ச்சல்தானோ, நாம் செத்துப் போய் விடுவோமோ" என்று பயப்படாமல் இருக்கமுடியுமா? "சாதாரண ஜலதோஷத்தைப் பெரிய ஜ்வரமாக்காதீர்கள். அசல் இன்பிளுயன்ஸா ஜ்வரத்தின் சின்னங்களை நன்கு படித்து மனதில் பதிய வைத்துக்கொள்ளுங்கள். அனாவசியமாகக் கலவரப் பட்டுக்கொண்டு டாக்டர்களையும் இரவு பகல் என்று பாராமல் ஆட்டி வைக்காதீர்கள்" என்று அநேகம் ஹார்லி வீதி நிபுணர்கள் பத்திரிகைகளில் பிளு ஜ்வரத்தின் அறிகுறிகள் என்று கட்டுரைகளை எழுதித் தள்ளுகிறார்கள். இந்த வாரம் கொஞ்சம் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும்.

காய்ச்சல் போதாதென்று பெரிய அம்மை வேறு கொஞ்சம் உலாவி வருகிறது. கராச்சியிலிருந்து வந்த ஒரு நண்பர் அதை இங்கிலாந்திற்கு அழைத்து வந்தாராம். குளிரில் அம்மை நோய்க்கு வேகம் அவ்வளவு குறைவு என்றும் நம்மால் நினைக்க முடிகிறதா? இந்த நோயாலும் கிட்டத்தட்ட 20, 25 பேர் இறந்ததாகச் சொல்லப்படுகிறது. தொத்து வியாதி பரவாமல் இருக்க ஜனங்கள் அம்மை குத்தப்பட்டு, எங்கெந்த வழி எல்லாம் நோய் பரவக்கூடுமோ அதெல்லாம் கண்டு பிடிக்கப்பட்டுத் தடுப்பதற்கு ஏற்பாடுகளும் கவனத்துடன் செய்யப்படுகின்றன. ஒரு மளிகைக் கடையில் அம்மைநோய்ச் சின்னத்துடன் ஒரு வேலைக்காரர் இருந்தாராம். அதற்காக அந்தக் கடையில் உள்ள சாப்பாட்டுச் சாமான்கள் பூராவும் தீயிட்டு எரிக்கப்பட்டதாம்.

இந்தக் கவலை எல்லாம் போதாதென்று இன்னொரு ஓயாத கவலை "நிலக்கரி". நிலக்கரிக்காக ஜனங்கள் கவலைப்படுவானேன் என்று நீங்கள் சிரிக்கிறீர்கள் அல்லவா? மேலே படித்துப் பார்த்தால் எங்கள்மீது நீங்கள் இரக்கப்படுவீர்கள், கட்டாயமாக. 1947 ஆம் வருஷம் இங்கிலாந்தில் குளிர் காலம் அதிகக்கடுமை என்றும், நிலக்கரி தட்டுப்பாடு வந்து ஜனங்கள் வேலை, சாப்பாடு, கணப்பு எல்லாம் இல்லாமல் திண்டாடினார்கள் என்றும் நாம் படித்து இருக்கிறோம். ஆனால்

ஒருவர் அதை நேரில் அனுபவித்தால்தானே நன்ருகத் தெரியும். இந்த 1951ஆம் வருஷமும் அதே ஸ்திதிக்கு வரும்போல் இருக்கிறதாம். நிலக்கரி தோண்டி எடுப்பதோ இப்பொழுது $1\frac{1}{2}$கோடி டன் அதிகமாகவே இருக்கிறதாம். ஆனல் செலவு $4\frac{1}{2}$ கோடி டன் அதிகரித்து இருக்கிறது. இன்னும் 3 மாதத்திற்குள் 3 கோடி டன் நிலக்கரி தோண்டி எடுக்காவிட்டால் நிலக்கரிப் பஞ்சம்தான் வருமாம். கீழ் நாடுகளில் வசிக்கும் நீங்கள் எல்லோரும் அரிசிப் பஞ்சம், வெல்லப் பஞ்சம், இந்த வருஷப் பொங்கலுக்குச் சர்க்கரைப் பொங்கல் அசல் சர்க்கரையில்தான் செய்யப்பட்டது என்றெல்லாம் பேசிக் கொள்கிறீர்களே, இங்கே பாருங்கள் நிலக்கரிக்குப் பஞ்சம் வந்திருக்கிறது. இந்தக் கரிப் பஞ்சம் உங்களை அதிகம் பாதிக்குமோ என்று நீங்கள் கேட்கும் முன்பே நான் அதையும் எழுதிவிடுகிறேன்.

சாதாரணமாக, நிலக்கரி சில வீடுகளில் தான் அதிகமாக உபயோகப்படுத்தப்படுகிறது. கணப்புப்போட முதலில் தேவை, மிகவும் அவசியமாக வேண்டியது வீட்டுப் பாயிலர்தான். குளிருக்காக வெந்நீர் எப்பொழுதும் குழாயில் வந்தால்தானே நமக்கு வேலை செய்ய முடியும். அதற்காக ஒவ்வொரு வீட்டிலும் நிலக்கரி போட்டு எரிக்கும் இந்தப் பாயிலர் உண்டு. மின்சாரம், காஸ் இவைகள் உற்பத்திக்கும் ஏகப்பட்ட நிலக்கரி தேவை. அதனல் இவைகள் உபயோகத்தையும் வீட்டில் குறையுங்கள் என்று அரசாங்கம் பொது ஜனங்களை வேண்டிக் கொள்கிறது. ஒவ்வொரு மனைவியும், வேலைக்காரரும், எஜமானரும் தங்களால் இயன்றதைச் செய்தால், இந்த இக்கட்டான நிலைமையிலிருந்து கரை ஏறலாம் என்று வேண்டிக் கேட்கிருர்கள். ஒரு உதாரணம் கொடுக்கட்டுமா — 10,000 ஜனங்கள் ஒரு நாளைக்கு ஒருஅரைப்படி ஜலம் குறைவாகத்தேத்தண்ணீருக்குக்காய்ச்சினல் வருஷத்தில் 1000டன் நிலக்கரி மீதி. 20 நிமிஷ நேரம் காஸில் சமைக்கும்போது 1 நிமிஷம் அடுப்பை ஒவ்வொருவரும் நிறுத்தினல் 4,00,000 டன்நிலக்கரி 1 வருஷத்தில் மீதி — இதெல்லாம் பாமர ஜனங்களுக்குத் தெரியுமா? — அரசாங்கத்தார் இதை எல்லாம் விளம்பரப்படுத்தி ஒவ்வொருவரையும் இந்த இக்கட்டைத் தவிர்க்குமாறு கேட்கிருர்கள். எல்லா முன்னேற்பாடுகளினலும் நிலக்கரிப் பஞ்சமும் அதனல் ஜனங்களுக்குக் கஷ்டமும் வராது என்றே எதிர்பார்க்கப்படுகிறது.

க்ரிஸ்மஸ் தினத்திற்கு முதல் நாள் இரவு லண்டனில் ஒரு பெரிய திருட்டு நடந்தது. அதற்காக லண்டன் போலீஸ் புலிகளும் துப்பறியும் நிபுணர்களான ஸ்காட்லண்ட் யார்ட் உத்தியோகஸ்தர்களும் இரவு என்றும் பகல் என்றும் பாராமல் மூலை முடுக்குகள் எல்லாம் ஓடியும், ஒவ்வொரு சந்து பொந்து எல்லாம் சுற்றியும் தேம்ஸ் நதியை அலசி அலசிப் பார்த்துக்கொண்டும் இருந்தார்கள். இவ்வளவு ஆடம்பரத்துடன் எழுதுகிறீர்களே திருட்டுப்போன சாமான் என்ன என்று கேட்கிறீர்களோ, ஒன்றும் பிரமாதம் இல்லை. ஒரு பெரிய பாராங்கல் தான். பாராங்கல்லுக்கு இவ்வளவு அலைச்சலா? அது வெறும் பாராங்கல் அல்ல. ஸ்டோன் ஆப் டெஸ்டினி என்றுபெயரிட்டு அழைக்கப்படும் இந்தக் கல் லண்டன் வெஸ்ட் மின்ஸ்டர் மாதா கோவிலில் இருந்து வந்தது. இங்கிலாந்து மன்னர்கள் முடி சூட்டப்படும் சிம்மாசனத்தின் அடியில் போடப்பட்டிருந்த கல்லுக்கு ஏதோ அபூர்வ சக்திகள் உண்டாம். ஏதோ பழையகால நம்பிக்கை என்றுதான் வைத்துக்கொள்ளுங்களேன். இக் கல் முதல் எட்வர்ட் அரசாட்சி செய்யும் சமயத்தில் ஸ்காட்லண்டு தேசத்திலிருந்து இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்டதாம். ஸ்காட்லந்துதேசத்தார் சுதந்திர தாகத்தால் நன்கு பிடிக்கப்பட்டிருக்கிருர்கள் என்பதெல்லாம் நீங்கள் படித்திருப்பீர்கள். இப்படிபட்ட ஒரு சிறு கோஷ்டியினர்தான் இந்தக் கல்லை எப்படியோ கோவிலில் இருந்து கிளப்பிக் கொண்டுபோய் விட்டார்கள். இத் திருட்டைக் கண்டு பிடிக்க8000போலீஸ்காரர்கள்முனைந்துவேலை செய்தனர். 200 மோட்டார் வண்டிகள் பெட்ரோலைக் காலன் காலனகக் குடித்ததாம். மிகவும் மும்முரமாக நடக்கும் இந்தச் சோதனைக்காக 1 மணி நேரத்திற்கு 2,000 பவுன் செலவாயிற்றும். கடைசியில் ஏதாவது பிரயோஜனம் உண்டா? இல்லை. கல் சென்ற இடம் மர்மமாகவே இருக்கிறது. ஒரு வாரம் லண்டன் பத்திரிகைகள் எல்லாவற்றிலும் காலை மாலை, பகல் எப்பொழுதும் தலையங்கம் வகித்து ஜனங்களைக் கலக்கிய இத்திருட்டு, கிணற்றில் கல்லைப்போட்டாற் போல் திடீரென்று அடங்கிவிட்டது. விபரம் ஏதும் தெரிந்தால் அடுத்த மாதம் கட்டாயம் உங்களுக்கு எழுதுகிறேன். மற்ருெரு விஷயம் மறந்துவிட்டேனே. இந்தக் கல்லைக் கண்டு பிடித்துத்தருபவருக்கு 1,000 பவுன் இனம். கண்டு பிடிக்கும் வழியைச் சொல்லி, சமா

சாரங்களும் சொன்னால் போதுமாம், எவ்வளவோ போலிக் கற்களும் காண்பிக்கப்பட்டனவாம். ஆனால் அரசாங்கத்தார் ஏமாறப் போவதில்லை என்று திடமாகக் கூறுகிறுகள்.

ஒரு குழந்தைக்குத் தாயார் எவ்வளவு அவசியம்? இந்தக் கேள்வி எதற்காகக் கேட்கப்படுகிறது? இதை எல்லாம் லண்டன் ஸண்டே பிச்சோரியல் என்ற பத்திரிகை பிரசுரித்து இருந்தது. இங்கிலாந்து இளவரசி எலிசபெத்திற்கு இரண்டாவது குழந்தை பிறந்து 5 மாதங்கள் தான் ஆகின்றன என்றெல்லாம் உங்களுக்குத் தெரியுமல்லவா? இரண்டாவது குழந்தை பிறந்து 2 மாதங்கள் சென்றதும், இளவரசி எலிஸபெத் தம் கணவனுடன் கொஞ்ச காலம் தங்குவதற்காக மால்டாவிற்குப் போய் இருக்கிருர். முதல் குழந்தை இளவரசன் சார்லஸும் இரண்டாவது குழந்தை இளவரசி அன்னியும் தங்கள் ஆயாவுடன் லண்டனிலேயே இருக்கிருர்கள். முதலில் சில நாட்களுக்காகத்தான் என்று இளவரசி புறப்பட்டுச் சென்ருர். ஆனல் அங்கே சென்றதும் லண்டனுக்குத் திரும்புவது மாதக் கணக்கில் ஒத்தி வைக்கப்பட்டது. இதனல் பொது ஜனங்களில் சிலர், "தாயார் இளம் குழந்தையை விட்டுச் சென்றிருப்பது நல்லதா? தாயார் ஏன் குழந்தைகள் செளக்யத்தை முதலில் கவனிக்கக் கூடாது?" என்றெல்லாம் கசமுசவென்று பேசிக்கொள்ள ஆரம்பித்தனர். ராணியாக இருந்தாலும் ஜனங்கள் வம்பு பேசுவதை விடுகிருர்களா பாருங்களேன். இந்தப் பேச்சுக்களை எல்லாம் கண்டித்துத்தான் நான் முதலில் சொன்ன தலையங்கம் இட்டு இந்தப் பத்திரிகை எழுதி இருந்தது. "பெரிய தத்வ ஞானிகள் எல்லாம் குழந்தைகளை மிகவும் அன்பு காட்டும் தாயாரிடமிருந்து சிறு குழந்தைப் பருவத்திலேயே பிரித்து வைப்பது நல்லது என்கின்றனர். வருங்காலத்தில் தேசத்தை ஆளப்போகும் குழந்தை இப்பொழுதிலிருந்தே சுயேச்சையாக வளர்க்கப்பட்டால்தான், பின்பும் நல்ல தைரியமும் தன்னம்பிக்கையும் வரும். ஆகையால் இளவரசி எலிஸபெத் தம் குழந்தைகளுக்கு நன்மை தான் செய்திருக்கிருர்" என்று பத்திரிகாசிரியர் மன்னர் குடும்பத்தைப் போற்றி எழுதித் தள்ளி விட்டார். ஜனங்களுக்குத் தான் பேசுவதற்கு ஒன்று அகப்பட்டால் விட்டு விடுவார்களா என்ன?

நான் இந்தக் கடிதத்துடன் அனுப்பி இருக்கும் படத்தில் இருப்பவர் யார் என்று உங்களால் ஊகிக்க முடியுமோ? நெற்றியில் விபூதி குங்குமத்துடனும் கழுத்தைச் சுற்றி அங்க வஸ்திரத்துடனும் காட்சி அளிக்கும் இவர்தான் எங்கள் ஆங்கில நண்பர் ஜான் மார். இவரைப்பற்றியும் இவர் நம் தென் இந்திய கர்நாடக சங்கீதம் பாடுவது பற்றியும் நான் முன்பு உங்களுக்கு எழுதி இருக்கிறேன். இவர் சென்ற மாதம் தான் இந்தியா, சிலோன் எல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு லண்டன் திரும்பினுர். அண்ணுமலை நகர் சர்வ கலாசாலையில் மூன்று மாதகாலம் தங்கி இருந்து கொஞ்சம் தம் சங்கீத ஞானத்தையும் விருத்தி செய்து கொண்டு இருக்கிருர். தாம் அண்ணுமலையில் மிகவும் அற்புதமாக நேரத்தைப் போக்கினதாகவும், எனக்குத் திரும்பவும் அங்கே போகத்தான் ஆவல் என்று சொல்லும் ஒரு ஆங்கிலேயரை உங்களுக்கு அறிமுகப்படுத்தாமல் இருக்க முடியுமா? அங்கே தம் நண்பர்கள் செய்த உதவிகளையும், சங்கீத ஆசிரியர்கள் சிலர் வெகு சிரத்தையுடன் பாடம் கற்பித்ததைப்பற்றியும் தினம் விடாது பேசி வருகிருர். கர்நடக சங்கீதம் என்ருல் வெறும் பாட்டுத் தெரிந்ததுமட்டுமல்ல; சங்



கீத சாஸ்திரங்கள், மேளகர்த்தா, ராக வரிசைகள் என்றெல்லாம் படித்து வருகிறார். ஏதாவது ஒரு ராகம் கேட்டு ஆரோஹணம் அவரோஹணம் கேட்டால் அதைமட்டும் சொல்லாமல் அந்த ராகம் எந்தக் கன ராகத்தின் ஜன்யம், வக்ர ராகமா அல்லது எந்த மேளகர்த்தா என்றெல்லாம் விடுவிடென்று சொல்ல ஆரம்பித்துவிடுகிறார். என்னைப் பற்றியும் உங்கள் லண்டன் கடிதத்தை வாசிக்கும் நேயர்களுக்குச் சொல்வீர்களா? என்று கேட்டார். ஆகையால் சகோதரிகள் அனைவருக்கும் ஜான் மார் என்பவரை அறிமுகப்படுத்துகிறேன். அண்ணாமலையில் அவர் நண்பர் ஒருவர் அவருக்கு ஜானகிராமன் என்று பெயர் வைத்தாராம். அதனால் இப்பொழுது எங்கள் எல்லோருக்கும் அவர் ஜானகிராமனாகவே விளங்குகிறார். கடவுள் அவர் சங்கீத ஞானத்தை வளர்க்குமாறு வேண்டுவோம்.

என்னுடைய கடிதங்களை விடாது படித்து வரும் சிநேகிதி ஒருவர் மணப்பாறையிலிருந்து ஒரு கேள்வி கேட்கிறார். "டர்மிக்ஸ் என்ற அரைக்கும் மிஷினைப்பற்றி எழுதி இருந்தீர்களே, அது நிஜமாகவே உபயோகப்படுகிறதா? நாங்கள் இன்னும் கல்லுரலைக் கட்டித்தானே இழுக்கிறோம்?" என்று எழுதினதற்கு நான் கட்டாயம் இந்தக் கடிதத்தில் பதில் விபரமாகச் கொடுப்பதாகச் சொல்லி இருந்தேன். டர்மிக்ஸ் என்ற இந்த இயந்திரத்தின் விலை இப்போது மிகவும் குறைக்கப்பட்டிருக்கிறது. முன்பு 27 பவுன் உள்ளூர் விலையும் 22 பவுன் ஏற்றுமதி விலையாகவும் இருந்தது. இப்போது 16 பவுன் உள்ளூர் விலையும், 12 பவுன் வெளி ஏற்றுமதி விலையாகவும் ஆக்கப்பட்டிருக்கிறது. விலை குறைந்ததால் பெயரும் மாகிமிக்ஸ் என்று மாற்றப்பட்டிருக்கிறது. விலை குறைந்ததும் என் சிநேகிதிகள் சிலரும் நானும் இதை வாங்கி இருக்கிறோம். நாம் கல்லுரலில் என்னவெல்லாம் அரைக்க வேணுமோ அதெல்லாம் இந்த மெஷின் அரைக்கிறது. இட்லி, தோசை, அடை, வடை, சட்னி எல்லாவற்றையும் அரைக்கலாம். சாதாரணமாக 2 ஆழாக்கு அரிசி ஊறப்பேட்டால் 2 தடவையாகப் போட்டு அரைக்கலாம். அரிசியைப்போட்டு, கொஞ்சம் ஜலமும் விட்டு ஸ்விட்சைப் போட்டால் 1நிமிஷ நேரம்தான்—அரிசி மாவாகிவிடுகிறது. உளுந்து ஊறவைத்து அரைத்தால் நல்ல மையாக அரைத்து எடுக்கலாம். எனக்கு மிகவும் உபயோகப்படுவதால் நம் நாட்டுச் சகோதரிகள் யாவருக்கும் உபயோகப்படும் என்பது நிச்சயம்தான். மற்றப்படி பழங்கள் எதை வேண்டுமானாலும் நல்ல பானமாகத் தயார் செய்யலாம். ஐஸ் க்ரீமிற்காகப் பால் தயார் செய்யலாம், காப்பிப் பொடி அரைக்கலாம். சாதாரணமாக நம்முடைய சமையலுக்காகத் தேங்காய் மசாலா எல்லாம்கூட அரைக்கலாம். கவனமாகப் பார்த்துக் கொண்டால் நீண்ட காலமும் இருக்குமென்று தான் கடைக்காரர்கள் சொல்லுகிறார்கள். விலையைப்பற்றி ஒரு வேளை நீங்கள் யோஜனை செய்யலாம். ஒரு புடவையைத் தியாகம் செய்துவிட்டு இதை வாங்கிக்கொண்டால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்?

இந்த Magimix போலவே பிரஷர் குக்கரும் நம் சகோதரிகள் யாவருக்கும் மிகவும் உபயோகமாக இருக்கும். இதில் காய்கறிகள், பருப்பு, சாதம் எல்லாம் சில நிமிஷ நேரங்களில் வெந்து விடுகிறது. சாதாரணமாகச் சில இடங்களில் பருப்பு வேக வைப்பதற்கே ½ மணி நேரம் பிடிக்கும். இந்தப் பிரஷர் குக்கரை நம் கரி, விறகு அடுப்புக்களில் உபயோகப்படுத்த முடியாதோ என்றுதான் நான் உங்களுக்கு எழுதவில்லை. ஆனால் போன மாதம் இங்கு வந்து திரும்பிய என் சென்னை சிநேகிதி ஒருத்தி "இதை நன்றாக எந்த அடுப்பிலும் வைக்க முடிகிறது; பாத்திரம் கரி பிடிக்காமல் இருக்க மாவு அல்லது மண் பூசி அடுப்பில் வைக்கிறேன்" என்று எனக்கு எழுதி இருந்தாள். இந்தப் பிரஷர் குக்கர் ஒரு பெரிய கைப்பிடி வைத்த பாத்திரம். அதற்குள் கொஞ்சம் ஜலம் விட்டு எதை வேக வைக்கவேண்டுமோ அதையும் போட்டு மூடியைப்போட்டு இறுக மூடி அடுப்பில் வைக்கவேண்டும். சூடு ஏறியதும் மூடிமேல் உள்ள ஒரு சிறு துவாரத்தில் நீராவி வரும். உடனே அதை Indicator Weight என்று அழைக்கப்படும் ஒரு சிறு குமிழினால் மூடவேண்டும். 1 நிமிஷ நேரத்தில் மூன்று வளையங்கள் தோன்றும் இந்தக் குமிழின்மேல். காய் கறிக்குத் தக்கவாறு 1 நிமிஷமோ 2 நிமிஷமோ கழித்து, குக்கரை இறக்கிவிடலாம். பருப்பு வேக வைக்க 4 அல்லது 5 நிமிஷம் பிடிக்கிறது. நல்ல மாவு போல் வெந்துவிடுகிறது. இதையும் கட்டாயம் சகோதரிகள் உபயோகித்துப் பார்ப்பார்களென்று நம்புகிறேன். விலை ரூ. 50. எல்லாம் பெரிய விலையிலேயே எழுதுகிறேனே என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் நம் இதர செலவுகளை எல்லாம் குறைத்து இந்த உபயோகமான சாமான்களை வாங்கினால் நம்முடைய ஓய்வு நேரம் சற்று வளரும். வேலையும் குறையும். மற்றவை அடுத்த கடிதத்தில்.

# மணல் மேடு

**மாரார்**

குருதாஸ் நாயுடு : பால்காரர் எல்லாம் சேர்ந்து மறியல் செய்யப்போகிருர்களாமே. சர்க்கார் உத்தரவு ஆழாக்கு இரண்டு அணுவுக்குமேல் விற்கக்கூடாது என்று போட்டதற்காக இரண்டு நாளுக்கு ஒருவனும் மாடுகொண்டுவந்து கறக்கமாட்டானும்—கைப்பாலும் விற்க மாட்டானும். காபிக்கும் தயிர் மோருக்கும் என்ன செய்கிறது தெரியவில்லே.

ஜாபாலிரத்தினம் ஐயர் : மறியல் செய்யட்டுமே—என்ன—குடிமுழுகிப் போகுமோ? பால் பவுடர் விற்கிறதோ இல்லேயோ—அதை இரண்டு நாளைக்கு வாங்கிக்கொள்வோம்—எத்தனை நாளைக்கு அவர்கள் பால் விற்காமல் இருக்கமுடியும்? பாலே நாலு நாள் வைத்துக்கொள்ள முடியுமா? அவர்களுக்குத்தான் நஷ்டமுண்டாகும்.

வியாஸாசார் : என்னமோ பால் மரம் என்று அமெரிக்காவில் ஒன்று இருக்கிறதாமே. ஆணியால் அதைக் குத்திஞல் பால் வடிகிறதாம். அதை ஒரு கூஜாவில் எடுத்துக் கொள்ளலாம் என்கிருர்களே. அந்த மரங்களை நம் நாட்டில் எங்கும் பயிர்செய்து விட்டால் போதும். பசுவோ எருமையோ வேண்டியதில்லே. வைக்கோல், பிண்ணுக்கு, புல், கீரை ஒன்றும் பணம் கொடுத்து வாங்கவேண்டாம்.

சுதரிசனம் ஐயங்கார் : செடிநட்டுப் பயிராகிப் பால் கொடுக்க எத்தனை வருஷமாகுமையா? அதுவரை பாலுக்கு வழி என்ன?

ஜாபாலி : தானியப் பஞ்சம் தேசத்தில் வந்ததோ இல்லேயோ. அதைத் தீர்ப்பதற்கு ஒவ்வொரு மேதாவியும் ஒரு புது உபாயம் கூறுகிருர். இதெல்லாம் நடக்கிற சமாசாரமா என்ன? பால் மரமாம் பால்மரம்?

சுதரிசனம் : அதென்ன நம்பத்தகாததா? ரப்பர் மரத்தில் குத்திப் பால் வடிய வைக்கவில்லேயா? அதுபோல் இது உண்ணக்கூடிய பால் கொடுக்கும் ஒரு மரம்போலிருக்கிறது. இரண்டு வருஷத்துக்குமுன் நான் நேரில் பார்த்தேன். ஒரு முதிர்ந்த வேப்ப மரத்தின் கிளை ஒன்றிலிருந்து வெளுப்பான பால் பத்துப் பதினைந்து நாள் வடிந்துகொண்டிருந்தது. பிறகு நின்றுவிட்டது. அதற்குள் கலயத்தில் அந்தப் பாலே, சிலர் வடித்துக் கொண்டு போனுர்கள். ஆயுர்வேதத்தில் வேப்பமரத்தின் பால் குடித்தால் தேகத்துக்குச் சிறந்த மருந்து என்று சொல்லியிருக்கிறதாம். என் சிநேகிதர் ஒருவர் அந்த வடிகிற பாலேக் கையில் ஏந்திக் குடித்தார்.

ஜாபாலி : பால்மரம் அப்படியில்லேயே. எப்போதும் பால் தருமாம். ஒருநாளும் வற்ருதாம். நம் நாட்டில் எதையும் ஜனங்கள் உடனே நம்புவார்கள். அதற்குத் தகுந்தபடி யாராவது படித்த புத்திமான்களும் ஏதாவது புது வழக்கத்தை உபதேசிக்கின்றனர். அதையெல்லாம் உண்மை என்று பிடித்துக்கொள்வது மூடத்தனம்தான்.

சுதரிசனம் : காங்கிரஸ் ப்ரஸிடெண்ட் ஸ்ரீமான் தண்டன் சில நாட்களுக்குமுன் அபூர்வமான ஒரு உபதேசம் செய்தாராமே, அது ஞாபகமிருக்கிறதா? உணவுப் பொருள்களை அடுப்பில் வைத்துச் சமைத்துச் சாப்பிடுவதனுல்தான் வியாதிகள் உண்டாகிறதாம். காய், கறி, கிழங்கு, கடலே, கீரை முதலிய பதார்த்தங்களைச் சமையல் செய்யாமல் பச்சையாகவே தின்பதுதான் யுக்திக்கும் அனுபவத்துக்கும் ஒத்தவழி என்றுராம்.

வியாஸாசார் : பத்திரிகைகளில் சுருக்கமாகத் தெரிவித்திருப்பது எல்லாம் நிஜம் என்று எண்ணுவது சரியல்ல. மாடுகள் புல், பூண்டுகளைப் பச்சையாகத் தின்னவில்லேயா? வைக்கோல், தவிடு எதையும் அவைகள் தின்கின்றன. எப்படியோ அவைகளை ஜீரணம் செய்துகொண்டு வயிற்றுநோய் முதலியன இல்லாமல் சௌஸ்தமாக இருக்கவில்லேயா? தீயில்

சமைத்து உண்பதே ஒரு செயற்கையான முறை. அது இயற்கைக்கு விரோதமல்லவா? அதனால்தான் மனுஷியனுக்கு வியாதி பிடுங்குகிறது. ஸ்ரீமான் தண்டன் வயது முதிர்ந்தவராயினும் திடகாத்திரராக இருக்கிறார். அதனால் அவர் சொல்வதில் ஓரளவு உண்மையிருக்கிறது.

ஜாபாலி: இயற்கை, இயற்கை, நேச்சர், இப்படியெல்லாம் உம்மைப்போன்றவர் சொல்லுவது என்னவென்று அறியமுடியவில்லை. இயற்கைக்கு விரோதமாக ஒன்றும் செய்யலாகாது என்கிறீர்களே. அதற்கு என்ன ஐயா அர்த்தம்? வஸ்திரம் உடுத்திக்கொள்வதே இயற்கைக்கு விரோதமல்லவா? ஆடு, மாடுபோல் ஆடையில்லாமல் அம்மணமாய் மனித ஜன்மம் எடுத்தவர் திரியவேண்டும் என்கிறீர்களா? நாகரிகம் என்று சொல்வது பெரும்பான்மை இயற்கைக்கு மாறி நடப்பதேயாகும். மதராஸில் உள்ள ஆண் மக்கள், பெண் மக்கள் எல்லோரும் இயற்கை முறையை அனுசரிக்கத் தீர்மானித்து உடைகளைக் கழற்றி எறிந்தால் என்னவாகும் யோசித்துப் பாருங்கள். நகர சபை, லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி, காலேஜ்கள். ஆபீஸ்கள், ரெயில் வண்டிப் பிரயாணிகள், ஸினிமா, ஸங்கீதக் கச்சேரி இவைகளெல்லாம் எவ்வாறு விளங்கும் என்று கொஞ்சம் ஊகித்துப்பார்க்க வேண்டும். காட்டு மனிதர்களுக்கும் நமக்கும் ஒருவித பேதமும் இராது.

வியாஸாசார்: அவதூத ஸன்யாஸிகள், ஜைனர்களில் திகம்பர ஸன்யாசிகள் இவர்கள் அம்மணமாகச் சஞ்சரிக்க வில்லையா? அவர்கள் எல்லாம் காட்டு மிராண்டிகளா?

ஜாபாலி: ஒருவர் இரண்டு பேர் உலகத்தை வெறுத்து, நமக்குப் பொருள் ஒன்றும் வேண்டாம்—உடுக்கும் ஆடைகூட நமக்குத் தேவையில்லை என்று நினைக்கிறவர்களைப் பற்றி நாம் இப்போது பேசவில்லை. பொது ஜனங்கள் இயற்கை என்று பிதற்றிக்கொண்டு உடுத்துவதை விட்டால் என்ன ஆகும் என்று கேட்டேன். இயற்கை என்ற சொல்லுக்கு என்ன ஐயா அர்த்தம்? மலை, செடி, மரம், மிருகம், பறவை, மீன், நதி, கடல், மனிதன், நட்சத்திரம், காற்று எல்லாவற்றையும் பொதுவாக இயற்கை என்கிறதுண்டு. தண்டன் அவர்கள் சமையல் செய்யாத உணவை உண்பதே இயற்கை முறை என்னும்போது இந்த அர்த்தம் இருக்கவே முடியாது. உணவு விஷயத்தில் மீனின் இயற்கை வேறு, மானின் இயற்கை வேறு, மயிலின் இயற்கை வேறு. மனிதன் எந்த இயற்கையை அனுசரிக்கிறது சொல்லட்டும். மான், மாடு, ஆடு இவைகளுக்கு வயிறுகள் நாலு இருக்கின்றன. அதனால் அவை புல், இலை, காய் வைக்கோல் முதலிய தீனியை முதலில் மேய்ந்தோ, தின்றோ, முதல் இரு வயிற்றுக்குள் தள்ளிக்கொள்ளுகின்றன. அங்கே எச்சில் முதலிய ஜீரணத்திரவங்களோடு உணவு கலக்கப்படுகிறது. பிறகு படுத்துக்கொண்டு, சும்மா இருக்கும்போது அந்த வயிற்றிலிருந்து முன் தின்ற உணவை எக்கி வாயில் மறுபடி தருவித்துக்கொள்ளும். அசைபோட்டு நன்றாக அரைத்து மெதுவாக்கிப் பிறகு வேறொரு வயிற்றுக்குத் தள்ளிக்கொள்ளுகின்றன. அவைகளுக்குப் பல வயிறு இருப்பதால் ஜெரிக்கும் சக்தி அதிகம். நாமும் அது மாதிரி பச்சைக் காய்கறி கீரை தின்றால் ஜீர்ணம் ஆவது கஷ்டம். அதனால் மனிதன் இயற்கை வேறென்றே சொல்லவேண்டும். நமக்கு வயிறு ஒன்றுதான் இருக்கிறது. பட்சிகள் சிறு கற்களை மூக்கால் கொத்தி விழுங்குகின்றன. வயிற்றில் காய், கனி கொட்டை முதலியன கற்களின் ஊடே அரைக்கப்படுகின்றன. இப்படி அவைகளின் இயற்கை வேறு. நம் இயற்கை வேறு.

வியாஸாசார்: வாழைப்பழம், மாம்பழம், ஆரஞ்சு முதலிய பழங்கள் ஜெரிப்பது சுலபந்தானே. ஏன் அதை மாத்திரம் தின்னக்கூடாது என்கிறார்போலிருக்கிறது தண்டன் அவர்கள்.

சுதரிசனம்: ஏழு, எட்டுப் பேருள்ள குடும்பத்தில் எல்லோரும் பழம் மாத்திரம் சாப்பிடுவதென்றால் நம்போல் அன்றாடம் ஜீவனம் செய்பவர்களுக்கு முடியுமா? செலவு என்ன ஆகும் யோசித்துப் பாருங்கள்.

ஜாபாலி: அது மாத்திரம் இல்லை. நம் உணவில் நமக்குப் புரோடீன் ஒரு அவசியமான பதார்த்தம். அது பழங்களில் கம்மி. பருப்பு, கடலை, உளுந்து முதலியன புரோடீன் மிகுந்தவை. அவைகளை அடுப்பில், வைத்து, சமைக்காமல் சாப்பிட்டால் ஜெரிப்பது கஷ்டம். பதினாயிரம் வருஷமாக மனுஷ்யன் பச்சைக் காய்கறி

மாமிசம் உண்பது சரியல்ல, சமைத்தே தின்பது முறை என்று அனுபவத்தில் தெரிந்துகொண்டிருக்கிறான். தாடகை நரமாமிசத்தை அப்படியே கடித்துத் தின்றதாக ராமாயணத்தில் சொல்லியிருக்கிறது. ஆனால் நாம் எல்லாம் காட்டில் திரியும் அரக்கர் அல்லவே. நமக்குக் கோரப்பற்களுங் கிடையாதே.

குருதாஸ் : உணவு ஆராய்ச்சி செய்யும் அறிஞரும், அரிசி, கோதுமையை நீர் விட்டுச் சமைப்பதால் அவைகளிலுள்ள சத்துகளில் முக்கியமானவை வீணாகப் போகின்றன என்று சொல்லுகிறார்களே. தண்டன் அவர்கள் கூறுவதும் அதை ஒத்திருக்கிறதல்லவா?

ஜாபாலி : உணவு ஆராய்ச்சிக்காரர், 'அரிசியை மில்லில் வெண்மையாக அரைப்பதினால் சத்துகள் போய்விடுகின்றன. அரிசி சமைக்கும்போது கஞ்சியை வடிக்கக்கூடாது. கஞ்சியில் சில முக்கியமான சத்துகள் இருக்கின்றன' என்கிறார்கள். ஒன்றையும் சமைக்கக்கூடாதென்று சொல்லவில்லையே.

சுதரிசனம் : வெள்ளரிக்காய், மாங்காய், தக்காளிக்காய், சர்க்கரைவள்ளிக் கிழங்கு இவைகளைப் பச்சையாகத் தின்பதில் பற்களுக்கு உறுதியென்கிறார்கள்.

ஜாபாலி : அது சரி—சிறிதளவு பச்சையாகத் தின்னக்கூடாது என்று ஒருவரும் மறுக்கவில்லை. இயற்கையென்று சொல்லும் முறைகள் எல்லாம் நல்லதாகாது என்பது மாத்திரந்தான் நான் சொல்லுகிறேன். இயற்கை தூண்டுகிறபடி நடந்தால் எல்லோரும் சுய நலனையே கருத வேண்டிவரும். மனிதன் சுயநலனைக் கருதாமல் பிறர் நலனையே கவனிக்கவேண்டும் என்று சாஸ்திரங்கள் சொல்லவில்லையா? இயற்கை முறையை அனுசரிப்பது சரியென்றால், மாடுகள்போல வர்ஜா வர்ஜமில்லாமல் ஆண்பெண்கள் கட்டுப்பாடு ஒன்றுமில்லாமல் இருக்கவேண்டியதாகும்.

வியாஸாசார் : தண்டன் அவர்கள் பால், வெண்ணெய், நெய் சாப்பிடுவதையும் தவறு என்கிறாரே. நம் சாஸ்திரங்களில் இவை உயர்ந்த உணவு என்று விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆயுர் கிருதம் நெய் ஆயுள் விருத்திக்கு அவசியம் எனப்படுகிறது. ஏன் இதை அவர் கண்டிக்கிறார்? தெரியவில்லை.

சுதரிசனம் : மாமிசம் உண்பதை விலக்கினவர்களுக்குப் பால் வகையரா அவசியம். உணவு ஆராய்ச்சிக்காரரும் பால் உயர்ந்த உணவு. அதில் நமக்கு வேண்டிய சத்துகள் எல்லாம் தகுந்த அளவு கலந்து நிற்கின்றன என்கிறார்கள்.

குருதாஸ் : ஒருகால் கன்றுக்குட்டியை வஞ்சித்து அதன் தாயின் பாலைக் குடிப்பது அதருமம் என்று எண்ணலாம்.

ஜாபாலி : பசுவுக்கு வேண்டிய அளவு பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை, கீரை, புல் போட்டால் பால் ஜாஸ்தியாகக் கொடுக்கிறது. கன்றுக்கு வேண்டியதை விட்டு விட்டு நமக்கு வேண்டியதைக் கறந்து கொள்வதில் என்ன தப்பு? கன்றும் நன்றாக வளரும். பருத்திக்கொட்டை, பிண்ணாக்கு, தானாகப் பசு எங்கிருந்து தின்ன முடியும்? நம் தேசத்தில் பிராமணரும் வெகு காலத்துக்குமுந்தி மாமிசம் உபயோகித்ததாகத் தெரிகிறது. அப்போது அவர்கள் தேகபலம், மனோபலம், ஆத்மபலம் எல்லாம் மிகுந்து இருந்ததாகத் தெரிகிறது. அதை விட்டபிறகு பலக் குறைவும், புத்திக் குறைவும் அவர்களுக்கு வந்துவிட்டன. பால் வெண்ணெய் நெய்யையும் விட்டுவிட்டால் கேட்கவேண்டியதில்லை அவர்கள் கதி.

வியாஸாசார் : மறுபடியும் பிராமணர் மாமிசம் சாப்பிடவேண்டும் என்கிறீரா என்ன? மாமிசத்தினால் புத்திக் கூர்மை உண்டாகிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? ஜார்ஜ் பர்னாட்ஷா சீமையில் பிறந்து வளர்ந்தவராகவிருந்தும் மாமிசத்தை வெறுத்தார். மற்ற இங்கிலீஷ்காரரை விட அவர் புத்திக் கூர்மையில் எத்தனையோ படி மேலானவராக விளங்கவில்லையா?

ஜாபாலி : நான் நாளைக்கே பிராமணர் எல்லாம் மாமிசம் தின்னவேண்டும் என்று சொல்லவில்லை. பால், வெண்ணெய், நெய்யைத் தள்ளக்கூடாது என்பதுதான் நான் சொல்லவந்தேன். பர்னாட்ஷா மகா புத்திமான்தான், சந்தேகம் இல்லை. ஆனால் சில விஷயங்களில் அவர் குயுக்தியாக ஏதேனும் கூறுவதுண்டு. வைசூரிக்குத் தடையாக அம்மைக் குத்திக்கொள்வது, காலரா வராதபடி ஊசி குத்திக்கொள்வது மூடத்தனம் என்று சொல்லிக்கொண்டிருந்தார். சீமையில் இப்போது இந்தக் கொடிய வியாதிகள் காண்பதில்லை. எங்கே

யாவது உண்டானாலும் பதினைந்து நாளைக்குள் வியாதி இருந்தவிடம் தெரியாதபடி நிறுத்தி விடுகிறார்கள். அதெல்லாம் ஊசி குத்து முறையை எல்லா ஜனங்களும் நம்பிச் செய்து கொள்வதினால்தான். வியாதியில்லாத ஊரில் பர்னாட்ஷா ஊசி குத்திக்கொள்ளாமலிருந்தால் அவருக்குப் பயம் ஒன்றுமில்லை. நம்மூர்களிலோ வருஷந்தோறும் இந்த வியாதிகள் உண்டாகி, பலர் மரணமடைகிறார்கள்.

சுதரிசனம்: ஊசி குத்திக் கொண்டவருக்கு இந்த வியாதிகள் கண்டிப்பாக வருவதில்லை என்று சொல்லமுடியுமா? அம்மை குத்திக்கொண்டவருக்கும் பிந்தி அம்மை காண்கிறதே.

ஜாபாலி: பிறந்து ஒரு வருஷத்திலோ இரண்டு வருஷத்துக்குப் பிறகோ ஒரு தரம் அம்மை வைக்கிறார்கள். ஆனால் ஐந்து வருஷத்திற்குத்தான் தடை செய்யுமாம். ஊரில் பக்கத்து வீடுகளில் எங்கேயாவது அம்மை வந்தால், மறுபடியும் குத்திக்கொள்ளவேண்டும். இந்த விஷயங்களில் ஆராய்ச்சி செய்துவரும் டாக்டர்களை நம்புகிறதா, ஆராய்ச்சி ஒன்றும் செய்யாமல் கேவலம் தம் யுக்தியினால் மாத்திரம் மறுக்கும் பர்னாட்ஷாவின் உபதேசத்தைக் கேட்கிறதா!

சுதரிசனம்: அப்படி என்ன ஆராய்ச்சி செய்துவிட்டார்கள், இவர்களை நம்புவதற்கு?

ஜாபாலி: இரண்டு வருஷத்துக்கு முன் என் கிராமத்தில் மார்கழி மாதத்தில் காலரா தோன்றி குடியானத் தெருவில் படபடவென்று முப்பத்திரண்டு பேர் இறந்தார்கள். தை மாத முதலில் தாலூகாவிலிருந்து ஒரு உத்தியோகஸ்தர் போய் ஆண், பெண் அடங்கலாக எல்லாருக்கும் அந்தக் கிராமத்தில் ஊசி குத்தினார்கள். பிறகு வியாதி நின்றுவிட்டது. இதற்கு என்ன சொல்லுகிறீர்!

வியாஸாசார்: வியாதி அதுவாகவே ஒரு மாதமானவுடன் நின்றிருக்கலாம். ஊசியினால்தான் நின்றது என்று எப்படித் தெயும்?

ஜாபாலி: ஆராய்ச்சிக்காரர் தீர்மானமாகச் சொல்வதை நம்பாமல் இருக்கலாமா? சேனைகளில் ஆட்களைச் சேர்க்கும் போது ஒவ்வொருவனுக்கும் வைசூரி—காலரா, டைபாயிட் ஜ்வரம்—பிளேக் இந்த நோய்களுக்கெல்லாம் தடையாக ஊசி குத்தின பிறகுதான் சேர்த்துக்கொள்கிறார்கள், அங்கே லட்சக்கணக்காகச் சிப்பாய்கள் இருக்கிறார்கள். அடிக்கடி ஊசி குத்துகிறார்கள். சேனையில் இந்தக் காலத்தில் இந்த வியாதிகளால் சாவது மிகவும் கம்மி. முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன் இந்த ஊசி குத்தித் தடை செய்வது தெரியாது. அக்காலங்களில் சேனையில் யாராவது ஒருவனுக்கு டைபாயிட் ஜ்வரமோ, காலராவோ கண்டால் போதும், ஒரு வாரத்துக்குள் ஆயிரக்கணக்காக நோய் தொத்தும். இப்போது அதெல்லாம் நின்றுவிட்டது. இந்த விஷயத்தில் பரீட்சை செய்து தீர்மானம் செய்வது சைனியங்களில்தான் சரியாக நடைபெறும். இப்படிப் பல விஷயங்களில் பரீட்சை செய்து சொல்லும் விஞ்ஞானிகள் சொல்வதை நம்புவதில்லை. ஆனால் ஆடு மேய்க்கும் ஓர் இடையன் ஒரு மரப்பட்டையை அரைத்துப் பொடி பண்ணிக்கொடுக்கிறான். அந்தப் பொடி குஷ்டம், காசம், குல்மம், காலரா, ஜ்வரம்—பித்து எந்த வியாதியானாலும் சரி ஒரே நாளில் சொஸ்தம் செய்கிறது என்று சொன்னால் அதை வேத வாக்காக நம்பிக் கொண்டு ஆயிரக் கணக்காக் ஜனங்கள் அங்கே ஓடுகிறார்கள். டாக்டர்கள் பல வருஷங்கள் படித்துப் பரீட்சை செய்து சொல்லும் உபதேசத்தில் நம்பிக்கை வர மாட்டேன் என்கிறது. நம்மவர் மூடத்தனத்துக்கு அளவு இல்லை. பர்னாட்ஷா அணுக்குண்டு போட்டாற்போல் கிண்டலாகச் சில சொல்லுவது உண்டு. இதுவும் அதே மாதிரிதான்.

சுதரிசனம்: டைபாயிட் ஜ்வரம், காலரா, பிளேக் இவைகள் வராதிருக்க ஊசி குத்திச் செலுத்தும் மருந்து, இந்த நோய்கள் உள்ளவர் இரத்தத்தில் இருந்தோ, மலத்தில் இருந்தோ, தயார் செய்யப்படுகிறதாமே. அப்படியானால் ஷா சொல்வதில் தப்பு என்ன? ஒரு வியாதியுமில்லாமல் ஆரோக்கியமாய் இருப்பவன் இரத்தத்திற்குள் விஷத்தைச் செலுத்துவதால் தற்காலத்தில் இல்லாமல் போனாலும், பிற்பாடு ஏதேனும் கெடுதல் உண்டாகலாம் அல்லவா?

ஜாபாலி: வருஷாவருஷம் நானும் என் வீட்டிலுள்ள அனைவரும் காலரா மாதங்களில் ஊசி குத்திக்கொண்டு வருகிறோம். அத

னுல் ஒருவித கேடும் உண்டாகவில்லை. சேனைகளில் லட்சக்கணக்காகக் குத்துகிருர்கள். தற்போதும் ஒன்றும் கெடுதல் வருகிறதில்லை. பத்து இருபது வருஷத்துக்குள்ளும் ஒன்றும் வந்ததாகத் தெரியவில்லை. மற்றவர்கள் சொல்வதில் ஏதாவது ஒரு தூஷணம் பர்ஞட்ஷா காட்டாமலிருப்பதில்லை.

வியாஸாசார்: ஸயன்ஸ் ஸயன்ஸ் என்று சொல்வதை எல்லாம் நீர் நம்புகிறீரே. நம் யோக சாஸ்திரத்திலும், மற்றச் சாஸ்திரங்களிலும், இந்த இந்தக் கருமானுஷ்டானமோ, பயிற்சிகளோ, ஸாதனங்களோ செய்தால் இன்னின்ன பலன் ஸித்திக்கும் என்று கூறியிருப்பதை மாத்திரம் ஏன் நம்பமாட்டேன் என்கிறீர்?

ஜாபாலி: பிரத்யட்சமாகவும் அனுமானத்திலும் எது ஒப்புக்கொள்ளலாம் என்று தோன்றுகிறதோ அதைக் கட்டாயம் நம்பலாம். அவைகளுக்கு விரோதமானதை எப்படி ஐயா நம்புகிறது?

வியாஸாசார்: வீட்டுக்குப் போகலாம்— பொழுதாய்விட்டது.

குருதாஸ்: இன்னும் சற்றுநேரம் கழித்துப் போகலாமே. நிலவு வெகு ரம்யமாக விருக்கிறது. தென்றலும் வீசுகிறது. இவ்விடத்தை விட்டுப்போக மனம் வரவில்லையே.

வியாஸாசார்: என் மூத்தபையன் பூனுவுக்கு இன்று ராத்திரி ஒன்பது மணி வண்டிக்குப் புறப்படுகிருன். சற்று முந்தியே போகவேண்டும்.

குருதாஸ்: சரி, அப்படியே. யார் ராகவேந்திராசாரோ?

# புத்தக விமர்சனம்

## திருக்குறள்

ஒரு மொழியின் திட்ப நுட்பங்களை அறிய விழைபவர் வேறு ஒரு மொழியையாவது அறிந்திருக்கவேண்டும். சமீபகாலம்வரையில் தமிழில் பாண்டித்யம் படைத்தவர்கள் வடமொழியிலும் வல்லுநர்களாகவிருந்து வந்ததும் இதனால் தான். பாரதியின் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க ஏற்பட்டிருக்கும் ஆவலும் இயக்கமும் இதனின்று தோன்றுபவையே. பாரதியை மொழி பெயர்க்குமுன் திருவள்ளுவரது நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வைத்துவிட வேண்டியது அவசியம். இதை அனேகர் செய்திருக்கலாம். ஆயினும் இப்பொழுது வெளிவந்துள்ள இந்நூல் சென்னைக் கல்வி இலாகாவில் திறம்பட வேலைபார்த்து ஓய்வு எய்தியிருக்கும் Prof. M. R. ராஜகோபால அய்யங்காரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. விலை ரூ. 3-0-0 தான். கைக்கும் பைக்கும் அடங்கியது. தெளிவாகவும் முதல் நூலின் நுணுக்கங்களையும் த்வனிகளையும் எடுத்துக்காட்டும் முறையிலும் அமைந்தது. கடினம் எனக் கருதப்படும் காமத்துப்பாலும் திறம்பட மொழிபெயர்க்கப்பட்டு முதல் நூலுக்கு ஏற்ப, தனிப்படவும் படித்து மகிழற்பாலது. கல்லூரி மாணவர் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது. கலை நுகர்ச்சியும் ஆக்க ஆற்றலும் உடைய இப்பெரியார் இத்தகைய தொண்டில் பல்காலம் ஈடுபட்டு இலக்கிய உலகத்துக்குத் தொண்டு புரிவாராக.

கிடைக்குமிடம்: S. விசுவநாதன்
56 பிராட்வே, சென்னை 1.

## ஸ்ரீபாகவதக் கதைகள்

பிரசுரிப்பவர் நே. ஈ. வேங்கடேச சர்மா. கிடைக்குமிடம்: நே. ஈ. துரைசாமி ஐயங்கார், தக்ஷிணதேச கிரந்தாலயம், தற்போது 23, நடு அக்ரஹாரம் மேலச்சிந்தாமணி, தெப்பகுளம் போஸ்ட் திருச்சி. 356 பக்கங்கள் விலை ரூ. 3-0-0

நாத்திகம் வலுத்த இக்காலத்தில், பள்ளிப் பிள்ளைகளுக்கு ஆஸ்திக போதனையின் அவச்யத்தை அரசாங்கமும் உணரும் இச்சமயத்தில், இப்பிரசுரம் மிகவும் வரவேற்கத்தக்கது. எளிய நடையில் சுவை குன்றாமல் ஸ்ரீமத் பாகவதம் கதைகளாக நமக்குத் தரப்பட்டிருக்கிறது. தத்துவோபதேசப் பகுதிகளையும் விட்டுவிடவில்லை. கதைகள் தடங்கலின்றி ஓடுகின்றன, ஸ்ரீபாகவதத்தின் 12 ஸ்கந்தங்களின் விஷயச் சுருக்கப் பகுதியும், கதைகளில் வரும் முக்ய புருஷர்களின் பெயர் அட்டவணையும் சேர்க்கப்பட்டிருப்பதுடன் புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும் அப்பக்கத்தின் விஷயம் இன்னதென்று எழுதப்பட்டிருக்கிறது. புஸ்தகம் உபயோகப்படும் முறையில் அமைந்திருக்கிறது. பள்ளிப் பிள்ளைகள் யாவருக்கும் பயன்படவேண்டின் மறுபதிப்பிலாவது "அவன் பெரிய லுப்தனாய் தன் தேஹத்தையும்கூட போகங்களால் உபாஸனம் செய்வதில்லை" [பக்கம் 334] போன்ற வடமொழி சொல் தொடர்ச்சிகள் நீக்கப்பட்டு எளிய தமிழ்நடை கையாளப்படவேண்டும்.

## தாய்தந்த செல்வம் [முதலிய கட்டுரைகள்]

[முதல் தொகுப்பு] திருப்புகழ்மணி ஸ்ரீ T. M. கிருஷ்ணசாமி அய்யர் ஆக்கியது. கிடைக்குமிடம் 'குங்குமம்' காரியாலயம், மதராஸ் 10. விலை ரூ. 1—0—0.

பக்தி பரவசராகும் அய்யரவர்கள் ஸ்ரீ அருணகிரி, தாயுமானவர், பட்டினத்தார், சிவவாக்கியர், திருமூலர், சித்தர், நாயன்மார்கள், ஆழ்வார்கள், கம்பர் முதலிய பக்திக் கவிகளின் பாடல்களைத் தாம் உய்த்துணர்ந்ததோடு நில்லாமல் நமக்கும் பக்தி பெருகும்வண்ணம் கற்பனைச் சித்திரங்களாகச் சில கட்டுரைகள் இந்நூல் வாயிலாகத் தந்துள்ளார். இது முதல் தொகுப்பு. மற்றத் தொகுப்புகளும் விரைவில் வெளிவரும் என எதிர்பார்க்கிறோம்.

## திருவிண்ணகர்த் தலமான்மியம்.

வ. ந. ஸ்ரீ ராமதேசிகாசாரியார் ஸ்வாமி. கிடைக்கும் இடம்: N. T. கண்ணன் பட்டாச்சாரியார், ஒப்பிலியப்பன் ஸந்நிதி, திருநாகேசுவரம், போஸ்ட். விலை 0—8—0.

ஒப்பிலியப்பன் ஸந்நிதி ஸ்தல புராணமிது. இனிய தமிழ் நடையிலானது. இத்தலத்து எம் பெருமான் விஷயமாய் ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்த திவ்ய பிரபந்தப் பாசுரங்களும் அவைகளின் பொழிப்புரையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஒப்பிலியப்பன் பூமி நாச்சியார் திருவுருவப் படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## கலைமகள் பிரசுரங்கள்.

1. ஸ்வப்ன வாசவதத்தம். மகாகவி பாஸன் எழுதிய ஸம்ஸ்கிருத நாடகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு. மொழிபெயர்த்தவர் ஜி. ஹரிஹர சாஸ்திரி. விலை 0—12—0.

உலகத்தின் முதல் நாடகம், உயர்ந்த நாடகம். உலக மொழிகள் பலவற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டது, தமிழில் இப்பொழுது வெளிவந்திருக்கிறது. மாணவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன்படக்கூடியது. பல சுவைகளும் கொண்ட இனிய நூல். அதற்கேற்ற தமிழ் நடை.

2. மானபங்கம், ரவீந்திரநாத் டாகுர் எழுதிய கதைகள். த. நா. குமாரஸ்வாமி. த. நா. ஸேநாதிபதி மொழிபெயர்ப்பு, விலை 2—8—0.

180 பக்கங்கள். ஆபத்து, மானபங்கம், தாலியா, புதையல், ஓய்வு, கண் கொடு, விடுதலைக்கு வழி, கெட்ட புத்தி, அண்டை வீட்டுக்காரி, மாதிரி நாவல், சுபதிருஷ்டி, ஆகப் பதினொரு கதைகள் கொண்டது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவை. உயர்ந்த கற்பனாசிரியர் எழுதியவைகளைத் திறம்படத் தமிழாக்கியுள்ளார்கள்,

## புகழ் பூத்த தமிழர்

இரண்டாம் தொகுதி. வே. ரா, சுந்தர ராமன் எழுதியது. விலை 1—0—0.

இத்தொகுதியில் பூ மகளைக் கைவிட்ட பௌதிக சாஸ்திரி (ஸர். ஸி. வி. ராமன்). சுதேச மன்னர்களின் சூத்ரதாரி (ஸர். ஸி பி. ராமசுவாமி ஐயர்) அமெரிக்கர் அழைத்த இந்தியக் கணித ஆராய்ச்சிக்காரர் (டாக்டர் தி. விஜயராகவன்), சாது முதலியார் (திரு வி கல்யாணசுந்தர முதலியார்) தமிழ் நவீனத்தின் தாய் (பி. ஆர். ராஜமையர்), ஆராய்ச்சி மனப்பண்பு வாய்ந்த ஆதீன கர்த்தர் (ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்], தேசாந்திரியான டெபுடி கலெக்டர் (ஸர். டி. விஜயராகவாச்சாரியார்), தமிழின் முதல் மறுமலர்ச்சி எழுத்தாளர் (வ. ரா.), கவி மணி (தேசிக விநாயகம் பிள்ளை), சபாநாயகர் (ஜ. சிவஷண்முகம் பிள்ளை) ஆகப் பதின்மர் வரலாறுகள் படிக்கச் சலிக்காத முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பெரியவர்களைப்பற்றிய பல புது விஷயங்களை இந்நூல் வாயிலாக நாம் அறிகிறோம்.

## வம்புப் பேச்சு.

கி. சாவித்திரி அம்மாள். விலை 1—4—0.

, சிறு துரும்பைப்பற்றி வேண்டுமானாலும் சிறப்பாக எழுதி விடலாம்' என்கிறார் ஆசிரியை. தம் முகவுரையில். அப்படியே செய்தும் காட்டிவிட்டார். பல மொழிகளையும் பல விஷயங்களையும் கற்றவருக்குக் கற்பனா சக்தியும் அமைந்துவிடின் சுவையான கட்டுரைகளுக்குக் குறைவென்ன? ராஜாஜி அவர்களும் தமது வழக்கம்போல் "நான் சொல்லவேண்டிய அவசியமே இல்லையே" என்ற பீடிகையுடன் "முகவுரை வேண்டியதே இல்லையே" என்று சொல்லிக்கொண்ட ஒரு முன்னுரையும் எழுதியுள்ளார்.

---

## சிங்காரத்தோட்டம்.

ஆசிரியர்: ச. கு. கணபதி ஐயர், பி. ஓ. எல். விலை. ரூ. 2—0—0.

தமிழனுக்குத் தோட்டம் போடக் கற்றுக் கொடுக்க வேண்டியதில்லைதான். ஆயினும் இந் நூலைப் படித்து, தமிழன் பயன்பெறலாம். முக்ய மாகத் தரையைப் பண்படுத்தும்போது கார்பன் டி ஸல்பைட்ஐ ஊற்றி, கரையானை ஒழித்துவிட்டு, பிறகு தோட்டத்தை அமைப்பான்.

கலைமகள் பிரசுரங்கள் கிடைக்குமிடம்:

கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர். சென்னை.

## ஹமாரி ராஷ்ட்ரீய ஸ்மஸ்யாரம்

நமது தேசிய பிரச்னைகள். பகவான்தாஸ் கேலா எழுதியது.

அலகபாத் தாராகஞ் பாரதிய கிரந்தமாலா பிர சுரம் விலை ரூ. 2—12—0.

இது பதினோராவது பதிப்பு என்பதிலிருந்தே இந்நூலின் விசேஷ பிரயோஜனம் புலனுகிறது. இந்தியில் எழுதப்பட்ட இப்புத்தகத்தில் தேசி யம் என்ருல் என்ன என்பதை நன்ருக விளக்கி விட்டு அதாவது எப்படி ஒரு மனிதனுக்குக் காலில் முள் தைத்தால் அதன் வலியை அவன் உச்சந்தலையும் உணருமோ அப்படி ஒருவருக்கு ஏற்படும் சுக துக்கத்தை அந்நாட்டவர் யாவரும் பகிர்ந்து பண்படும் பான்மையை அடிப்படை யாகக்கொண்டு நாட்டுப் பற்று, ஒற்றுமை, நாக ரிக வாழ்வு, கலைச் சிறப்பு, பொது மொழி, தேசப் பாதுகாப்பு, அந்நிய நாட்டில் வசிக்கும் இந்தியர் கடமை, அகதிகளின் புனருத்தாரணம் முதலிய பிரச்னைகளைத் தீர்க்கும் வழிகளை ஆசிரியர் விளக்கி விட்டு, அகண்டபாரதத்தைக் கோருபவர் கவனிக்க வேண்டிய விஷயங்களையும் பாகிஸ்தானுடன் உறவு முறையையும் விவரிக்கிருர். அரசியல் துறையில் நுழைபவருக்கு இது ஒரு Handbook ஆக உதவும்.

## ஹமாரி ஆதிம ஜாதியாம்

அதாவது நமது பூர்வீக குடிகள்.

பகவான்தாஸ் கேலா எழுதியது. விலை 3-8-0

அலஹாபாத் தாராகஞ் பாரதிய கிரந்தமாலா பிரசுரம்.

இந்தியாவின் $2\frac{1}{2}$ கோடி ஆதிவாஸி மக்களைக் குறித்து நாம் அறிந்திருப்பது மிகவும் குறைவு. ஸ்ரீ டக்கர் பாப்பாவின் அரிய தொண்டின் பயனுக நமக்கு அவர்களைக் குறித்துச் சற்று விழிப்பு ஏற் பட்டிருப்பினும் அவர்களுடன் நாம் இன்றும் தொடர்புகொள்ளவில்லை. சர்க்கார் அவர்களுக் காகச் செய்யும் சேவையையும் நாம் பொதுவாக உணரவில்லை. இருளர்கள் புனருத்தாரணத்துக் காக கோயமுத்தூரில் நடக்கும் வேலையைக்கூட நாம் அறிந்துகொள்ளவில்லை. ஐரோப்பியர் இத் துறையில் எடுத்துக்கொண்ட முயற்சிகளை யும் முடிவுகளையும்கூட நாம் பாராட்டவில்லை. இவ்வறிவீனத்தைப் போக்கவென்றே ஸ்ரீ பக வான்தாஸ் கேலாவும் அகில்வினய்யும் சேர்ந்து இந்தி மொழியில் ஓர் சிறந்த நூலை வெளியிட்டி ருக்கின்றனர். 355 பக்கங்கள் கொண்ட இந் நூலில் ஆதிவாஸிகளைக் குறித்துச் சர்வ விஷயங் களும் விளக்கப்படுவதுடன் அவர்கள் நமது உடன் பிறந்த சகோதரர்கள் எனும் உணர்ச்சி உண்டாகும் முறையில் ரக்தபரிசோதனையி லிருந்து நாட்டுப் பாடல்கள் வரையிலுள்ள சம்பந்தம் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.

## S. S. L. C. மாணவர்களுக்கானது.

**1951 ஞு மார்ச்சு தேர்வுக்கு ஆன புஸ்தகங்கள்.**

மாணவர்கள் தங்களுக்கு வரப்போகும் வினுக் களுக்கு மிகச்சுலபமாக விடைகள் எழுதி இறு தித் தேர்வில் வெற்றி அடையச் செய்யப் பிரசுரித் துள்ளார்கள்.

### சமூகக்கல்வி

S. S. L. C. 1951 New Model Question Papers with Answers on SOCIAL STUDIES by V. Pichumani B. A., L. T. விலை அணு 0—15—0.

SSLC 1951 New Model Question Papers with Solutions Mathematics Genaral by P. Velayutham Pillai B. A., L. T. விலை அணு 1—4—0,

கிடைக்குமிடம்:

**ஜெனரல் புக் கம்பெனி**
கும்பகோணம்

LIFCO New Model Test Papers for SSLC.

| | |
|---|---|
| Social Studies, | விலை அணு 0–10–0 |
| General Science | ,, ,, |
| English I & II Papers | ,, ,, |
| General Mathematics | ,, ,, |

கிடைக்குமிடம்:—

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
விழுப்புரம்.




தொடர் கதை

கே. எம். முன்ஷி — ஸுரேந்திரநாத் சாஸ்திரி

மொழி பெயர்ப்பு—கீழையூர் தி. சேஷாத்திரி

3

குருதேவர் பூஜை செய்யப்போகும்போது அவர் மனதில் கொஞ்சம் அமைதி இருந்தது, பீமதேவனுடைய வீரத்தின் கதைகளை அவர் எவ்வளவோ கேட்டிருந்தார், ஆனால், அவைகள் உண்மை என்பதை இன்று நேரில் கண்ணால் பார்த்து விட்டார். ஆனால் அவர் வீரம் இவ்வளவு இருக்கும் என்று அவர் கற்பனைகூடச் செய்ததில்லை. பிறகு அவர் இரு சேனைகளின் தராதரத்தையும் எண்ணிப் பார்த்தார். மகமூத் சேனை அவர் எண்ணியிருந்ததைவிடக் கொஞ்சமே அதிகம் இருந்தது. ஆனால் பீமதேவனுடைய பலமோ அவர் எண்ணியிருந்ததைவிட மிக அதிகமாக இருந்தது. போலாநாதருடைய கிருபையால் அவருக்கு இந்த நம்பிக்கையும் அது தந்த அமைதியும் அவர் மனதில் ஏற்பட்டிருந்தது.

அவர் திரிபுரசுந்தரியின் கோயிலுக்குச் சென்றார். அங்கே அவருக்கு ஒரு பெரிய ஆச்சர்யம் காத்திருந்தது. யாரோ வெளிக் கதவுப் பூட்டை உடைத்தெறிந்திருந்தனர். இது ஹரதத்தனுடைய வேலையாகத்தான் இருக்கவேண்டும் என்று எண்ணினார். கர்ப்பத்துவாரத்தின் வாசலும் திறந்திருந்தது. யாரோ வேண்டுமென்றே அவர் உத்தரவை மீறியிருந்தனர்.

இன்னும் மேலே சென்றார். அங்கே திரிபுரசுந்தரியின் பூஜை முடிக்கப்பட்டிருந்தது. எதிரே மாமிசத்தையும், கள்ளையும் வைத்துக்கொண்டு சிவராசி தியானத்தில் அமர்ந்திருந்தான். குருதேவர் தயங்கினார். அவர் பேச்சுக்கு இவ்வளவு அவமரியாதையா? அதுவும் பட்டத்துச் சிஷ்யனே செய்வதா? அவர் வாசலிலேயே சற்று

நேரம் நின்ருர், சிவராசனுக்கு என்ன பைத்தியம் பிடித்து விட்டதா?

அவருக்குச் சற்று நேரம் பேசவே தோன்றவில்லை. கல்லாய்ச் சமைந்து நின்ருர். சிவராசி கண்ணைத் திறந்து குருவை ஒரு பார்வை பார்த்தான். சிவராசியும் இப்படி ஒரு பார்வை பார்த்து, அவமரியாதையையும் ஆத்திரத்தையும் சிதறும் என்று குருதேவர் அறிந்ததில்லை. சர்வக்ஞர் மனம் வருந்தி, சிரித்துக்கொண்டே பார்த்து நின்ருர். வாழ்நாள் முழுவதும் குரு வசன பாலனம் செய்தவன் இன்று இப்படி செய்கிருன். அவனை என்ன சொல்வது? இது என்ன மிருகத்தனமல்லவா?

சிவராசியே ஆரம்பித்தான், "சொல்லுங்களேன்! என்ன சொல்லவேண்டும்?"

"என்ன அப்பா சொல்லுகிறது? சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை."

"நான் தான் இந்தப் பூட்டை உடைத்தேன்; பூஜை செய்தேன்."

"நல்லது செய்தாய்! என் உழைப்பைக் குறைத்தாய்."

குருவின் சாந்தத்தைக் கண்டு சிவராசியின் கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது.

"நான் நேற்றிலிருந்து தங்களைக் குரு என்று எண்ணுவதை மறந்து விட்டேன்."

"உனக்கேற்ற குரு நான் அல்ல என்று என்றே அறிந்து கொண்டு விட்டேனே!"

சிவராசி எழுந்தான். "இன்று முதல் நான் தான் பாசுபத மதத்தின் குரு. நானே அந்தப் பதவியை எடுத்துக் கொண்டேன்."

"குரு பதவி எடுத்துக்கொள்வதனுல் கிடைப்பதில்லையே. தந்து அல்லவா கிடைக்கிற வழக்கம்?"

இவ்வளவில் ஹரதத்தன் மற்றும் இரண்டு சாதுக்களுடன் சித்தேசுவரன் வந்துசேர்ந்தான். குரு சிஷ்யர் பேசிக்கொள்வதைக் காதுகொடுத்துக் கேட்டான். சிவராசிக்கும் அவர்களைப் பார்த்துத் தைரியம் ஏற்பட்டது.

"உங்களை நான் குரு என்று எண்ணினுல் தானே நீங்கள் தந்து நான் வாங்கிக்கொள்வேன்! பாசுபத மதத்தின் விதிகளை உடைத்து, மஹா



மாயையின் பூஜைக்கு இடையூறு செய்தவரல்லவா நீங்கள்?''

''பிறகு?''

''மஹாமாயையின் கோயிலையும் மூடினீர்கள், அதன் பூஜையைச் சரியான முறையில் செய்வதில்லை. திரிபுர சுந்தரியின் உருவத்தை உங்கள் பேராவல் உண்மையாகப் பீமதேவனுக்குக் கொடுத்துவிட்டீர்கள்,''

''பிறகு?''

''நீங்கள் கொடுத்த இடம், அந்தத் துஷ்டன் மஹாமாயையுடன் சேர்ந்து கெடுக்கிறான். பவித்திர பூமி கெட்டு அழிகிறது. அட, கிழமே! உனக்கு உயிருடன் இருக்கக்கூட உரிமையுண்டா?''

குருதேவர் பேசாமல் நிற்க நிற்க, சிவராசியின் பித்தம் தலைக்கேறிவந்தது. சாக்ஷாத் தூர்வாச முனிவரைப்போல் உரு எடுத்தான்.

''பையா! நீ பேசுவதைக் கேட்டால் நான் உயிருடன் இருக்கத் தகுதியற்றவனல்லதான். ஆனால் ஒன்று; நான் உயிருடன் இருக்கும்வரை முப்பத்து முக்கோடி தேவதைகள்கூட இந்தக் குரு பதவியை என்னிடமிருந்து பிடுங்கி உனக்குக் கொடுத்துவிட முடியாது.''

''அட, கிழப்பெருமானே! குரு பதவியை இழந்து எவ்வளவோ நாள் ஆயிற்றே!''

''உன்னைப்போலத் தவத்தின் கர்வமும் ஞானத்தின் ஆடம்பரமும் காட்ட ஆரப்பித்த அன்றே நானும் குரு பதவியை இழப்பேன்.''

''நீ இழந்துவிட்டாய் இழந்துவிட்டாய், இனி இந்த ஊரில் நான்தான் குரு. இனி சுவாமி எழுந்தருளலாம். உங்கள் அரசாங்கம் முற்றுப்பெற்றுவிட்டது''

''அட அசடே, என் குருபதவி போய்விட்டால்கூட உனக்கு அது கிடைத்துவிடாது. எனக்குப் பின் பட்டம் பெறுபவன் கம்பாதத்தில் இருக்கிறான்—கனகராசி! அவனை அனுப்பும்போதே எல்லா அரசர்களுக்கும் எதிரில் அவனுக்கு அபிஷேகம் செய்து அனுப்பிவிட்டேன், லகுலேசனுடைய பாதுகைகளும் லிங்கமும்கூட அவனிடந்தான் இருக்கின்றன.''

என்ன? சிவராசி ஏமாந்துவிட்டானே! அவனை ஆச்சரியம் அப்படியே கல்லாக்கி நிறுத்திற்று. வாய் பேச மறுத்தது.

''சிவராசி. பாசுபத மதத்தின் குருபதவி எளிதல்ல. அது பரந்த உலகத்துக்கே குருபதவியாகும். ஞானம், தவம், பக்தி இருக்கிற இடத்தில்தான் அந்தப் பதம் இருக்கமுடியும். அது கர்வம் கொண்டவனிடமும் உடல் வேட்கையைக் கடவுள் இச்சை என்று எண்ணுபவனிடமும் தங்காது.''

''அடே கிழவா? வேண்டாம் தொலை. உன் பீமதேவனை மஹாமாயை விடப்போவதில்லை. உன் பிடரியிலும் யமன் வந்து உட்கார்ந்துவிட்டான்,'' என்று சாபம் கொடுத்தான் சிவராசி.

''நான் சாவதற்கு அஞ்சவில்லை. ஆனால் பாசுபத மதத்திற்கு உன்னிடமிருந்து விடுதலை கிடைத்ததே,'' என்று சொல்லிக்கொண்டே குருதேவர் மெதுவாகத் திரிபுர சுந்தரியின் கோயிலை விட்டு வெளியேறினார்.

ஹரதத்தன் அவர் முதுகு திரும்பியதும் காறி உமிழ்ந்தான். குருதேவர் திரும்பி, ''அட அசடுகளே, என்னைக் கோபமூட்ட முயலுகிறீர்களா? நீங்கள் குழந்தைகள்'' என்று சொல்லி, கருணை நிறைந்த கண்களால் ஒரு முறை பார்த்துவிட்டு, பளுவடைந்த இதயத்துடன் அவர் போய்விட்டார். ஹரதத்தனும் சாதுக்களும் தங்கள் வாயிலிருந்து கெட்ட சொற்களை எல்லாம் கக்கிக் கொண்டிருந்தனர்.

4

ஜூனாகட் பக்கம் இருக்கும் வாயிலில் நிலைமை கொஞ்சம் மோசமாயிருந்தது. ஆபூதேச இளைஞன் பரமார் பீமதேவன் உத்தரவுப்படி பாலைவனத்தில் நின்ற சில குதிரைகளைக் காயப்படுத்தினான். ஆனால் அங்கே கவசமணிந்த வீரர்கள் குறைவு, அதனால் எதிரிகள் அடியினால் அதிக சேதம் ஏற்பட ஆரம்பித்தது. தவிர, பீமதேவனுடைய முன் யோசனை அங்கு ஒருவரிடமும் இல்லை, அதனால் ஒருவரும் கல் சேர்த்துவைக்கவில்லை. அதனால் எதிரிகள் தாங்கள் திட்டம் போட்டபடி காரியத்தில் வெற்றி பெற்று முன்னேறினர். அகழிலும் குதித்து நீந்திவரத் தொடங்கிவிட்டனர், சில ஆமைகள் கையில் ஏணிகளும் கிடைத்துவிட்டன. வில் வீரர்கள் முழங்கால் மடியிட்டு அமர்ந்து, 'ஜிவ்; ஜிவ்,' என்று அம்பு விட்டு, அவர்களைக் கொல்ல முயன்றனர். ஆனால் ஒரு அம்பாவது வீரனைக் காயம் செய்யமுடியவில்லை. அந்த இரும்பு மூடியிலே பட்டு, கூர் மழுங்கிக் கீழே விழுந்துவிட்டது.

பரமாரும் தன் கடமையில் தவறவில்லை. அவன் சௌரியமும் குறையவில்லை. அவன் தலைமையில் வீரர்களும் களைக்காமல் வீரம் காட்டினர். அநேக வீரர்கள் கடவுளை எண்ணி உயிரையும் ஈடு செய்தனர். அப்படியும் ஆமை வீரர்கள் அகழ் தாண்டி சுவரிலும் ஏணியைச் சார்த்த ஆரம்பித்துவிட்டனர். குதிரை வீரர்களும் அகழில் இறங்கி, அவர்களுக்கு உதவி அளிக்க ஓட்டம் போட்டனர். நல்ல காலமாக முக்கியமான சண்டை நடு வாசலுக்கு எதிரேதான் நடந்தது. ஆதலால் மஹமூத் மற்றப் பெரிய சேனாதிபதிகள் எல்லாரும் அங்கேயே தங்கிவிட்டனர். அதனால் தான் ஜூனாகட் வாசலில் கிடைத்த சந்தர்ப்

பத்தை அவர்கள் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை.

பரமார் பார்த்தான். நிலைமை கட்டு மீறிவிட்டது. உடனே நம்பிக்கையுள்ள நாயக் ஒருவனிடம், "போ, போ, உடனே ஓடு, இன்னும் கொஞ்சம் வீரர்கள் உடனே வராவிட்டால், ஜானகைட் வாசல் விழுந்துவிடும், என்று சொல்லி வா" என்று உத்தரவிட்டான்,

"சரி, பாபு" என்று சொல்லிவிட்டு, நாயக் மகாராஜாவிடமும் ராயினிடமும் சமாசாரம் சொல்லக் கிளம்பினான்.

பீமதேவன் இந்தச் சமாசாரத்தைக் கேட்ட சமயம் இரு புறத்து வீரர்களும் களைப்படைந்திருந்தனர். சண்டை வேகம் குறைந்திருந்தது. பட்டண் வீரர்களின் ஆக்குரோஷமும் கொஞ்சம் சாந்தமடைய ஆரம்பித்திருந்தது.

அங்கேயும் ஆமை வீரர்கள், குதிரை வீரர்கள் இரு பகுதியுமே இருக்கிறவர்கள் மட்டும் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். கிட்டத்தட்ட முந்நூறு வீரர்கள் அகழைக் கடைந்தெடுத்துக் கொண்டிருந்தனர். ஆனால் ஒருவராவது ஏணி வைத்து ஒரு படி ஏற முடியாமல் செய்துகொண்டிருந்தனர் பட்டண் வீரர்கள்,

பீமதேவன் நிலைமையைப் பார்த்தார், விமலனை அழைத்தார். 'விமலா, நீ இங்கே பார்த்துக்கொள். பரமார் சங்கடமான நிலைமையில் இருக்கிறான். நான் பாதிச் சேனையை அழைத்துச் செல்கிறேன். இதை எதிரிகள் தெரிந்துகொள்ளாத வண்ணம் சண்டையை நடத்து' என்று சொல்லித் தம் தலைப்பாகையைக் கழற்றி விமலன் தலையில் வைத்துவிட்டு, அவர் பரமார் இருக்கும் இடம் சென்றார்.

அங்கே நிலைமை மிகவும் மோசமாகப் போய்விட்டது. நீந்துவதில் வல்லவரான பல வீரர்கள் அகழிக்குள்ளேயே அணி வகுத்து நீந்தினர். அகழின் மற்றப் பக்கத்தில் நின்ற யானைமேலே இருந்து வீரர்கள் பாணம் விட்டுக்கொண்டே இருந்தனர். மேலே இருந்து வரும் அம்புகளைக் கூட லக்ஷியம் செய்யாமல் ஆமை வீரர்களும் குதிரை வீரர்களும் பலகைகளைக் கட்டி நீந்துவதற்குத் தயார் செய்துவிட்டார்கள். பார்த்துக் கொண்டிருக்கும்போதே அகழியில் ஒரு மிதக்கும் பாலம் தயாராகிவிட்டது. புது ஆமைகள் வந்தன, அவர்களும் வாசலிலுள்ள வளையங்களில் கயிற்றைக் கட்டிப் பாலத்தைப் பலம் பொருத்தினர், ஏணிகள் சார்த்தப்பட்டன, வீரர்கள் தங்கள் ஆமைப் போர்வையைத் தள்ளி உயர ஏற ஆரம்பித்து விட்டனர். எதிரிகளுக்குச் சந்தோஷமும் உற்சாகமும் ஏற்பட்டு விட்டன. கோட்டையின்மேல் அநேகம் வீரர்கள் உயிரிழந்து விழுந்தனர்.

பரமார் எவ்வளவோ முயன்று பார்த்தான். அநேக ஆமை வீரர்களையும் ஒருவனாகவே கொன்று வீழ்த்தினான். ஆனால் எண்ணிக்கை குறைந்து வரும் அவன் சேனை ஒன்றும் செய்ய இயலாமல் போய்விட்டது சற்று நேரத்தில் எல்லோரும், 'பீமதேவ மகாராஜர் எங்கே' என்று கேட்க ஆரம்பித்துவிட்டனர், அவர்கள் வரும்வரை எப்படியாவது காப்பாற்றி விட்டால் போதும் என்று ஆகிவிட்டது அவர்களுக்கு. சுவரின் முனையில் மேலே நின்று அவர்களால் முடிந்தவரை ஆமை வீரர்களைக் கொன்றோ காயப்படுத்தியோ தடுக்க முயன்றனர். ஆனால் ஒருவனைக்கொன்ற இடத்தில் நால்வர் முளைத்து நின்றனர். கடைசியில் அவர்கள் தங்கள் உயிர்களையும் மறந்து கையிலே கதை எடுத்து ஏறி வருபவர்களை எல்லாம் அடித்து வீழ்த்த ஆரம்பித்தனர்.

சோதனையான சமயம், நூறு ஆமைகள் ஏணி ஏறிக்கொண்டிருந்தன. மேலே வாசலின் முனையில் இருபத்தைந்து வீரர்களுடன் நின்று அவர்களை அடித்து வீழ்த்திக் கொண்டிருந்தான் பரமார். அங்கேதான் எதிரிகளும் தங்கள் அம்பு



களுக்கு இலக்கு வைத்துக்கொண்டிருந்தனர். பரமார் அங்கொருவனை வீழ்த்தினால் இங்கேயும் அவன் வீரர்களில் ஒருவன் அம்படியுண்டு விழுந்து கொண்டிருந்தான். 'பீமதேவன் எப்பொழுது வருவார்?' என்று அவன் அங்கலாய்க்க ஆரம் பித்துவிட்டான்.

ஏணியிலே ஒரு காகேசியா தேசவீரன் தன் உடலைக் கேடயத்தால் காப்பாற்றிகொண்டுமேலே ஏறிவந்து கொண்டிருந்தான். ஒரே நிமிஷநேரம் தான் பாக்கி. ஒரு குதி குதித்து அவன் சுவர்மேல் ஏறத் தயாராய்விட்டான். அவனுக்குக் கீழே மற்றொரு ஆளும் தயாராகிக் கொண்டிருந்தான். மற்ற ஏணிகளும் வைக்கப்படத் தயாராகிக் கொண்டிருந்தன. இன்னம் பல ஆமைகள் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தன. பரமார் ஜய் ஸோம்நாத் என்ற முழக்கத்துடன் கோட்டைமேல் ஏறத் தயாராயிருந்தவனை அடித்து வீழ்த்த முயன்றுகொண்டிருந்தான். பின்னால் வருகிறவர்கள் அவனைக் காப்பாற்ற முயன்றனர்.

அதே சமயத்தில் பறந்துவந்த ஓர் அம்பு அவன் கழுத்தில் பாய்ந்து தைத்தது. பரமாருக்கு இது தெரிந்தவுடன் 'சரி இனி சாவுதான்' என்று நிச்சயம் செய்துகொண்டான். அப்படியே அந்த யவன வீரனைக் கையில் தாங்கிப் பிடித்துக் கட்டிக்கொண்டான். 'மகாராஜா' என்று ஒரு சத்தத்துடன் கீழே விழுவதற்கு முயன்றான். அவனுடைய பலத்துக்கெதிர் யவனனால் தங்கி நிற்க முடியவில்லை. அவன் கால்கள் பறிந்தன. இருவரும் ஒரு கணநேரம் ஆதரவற்ற ஆகாயத்திலேயே தொங்கினர். பிறகு இருவரும் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு 'தொப்' என்று அந்தப் பாலத்தின் நடுவிலே விழுந்தனர். அந்த வேகத்தில் பாலத்தின் சில பலகைகள் நகர்ந்து, வீரர்களும் முழுகிவிட்டனர். நீந்துவதற்கான சாதனம் தொலையவே சில ஆமைகள் கையைக் காலை அடித்துக்கொண்டவாறே உள்ளே சென்று அமுங்கினர். ஆதாரம் அற்றதனால் ஏணியில் ஏறின வீரர்களும் விழுந்து ஏணிகளும் விழுந்துவிட்டன. பரமார் பிராணனைப் பணயம் வைத்து ஜானகைட் வாசலைக் காப்பாற்றித் தந்தான்.

பரமார் விழுந்ததும் சேனையில் ஆரவாரமும் பரபரப்பும் ஏற்பட ஆரம்பித்தன. அதேசமயத்தில் பீமராஜனும் அவருடைய வில்வீரர்களும் வந்து சேர்ந்துவிட்டனர். மகாராஜா பரமார் விழுவதையும், ஏணி சறுக்குவதையும் பார்த்தார். கீழே ஜலத்தில் நீந்தும் ஆமை வீரர்களையும் குதிரை வீரர்களையும் அவர்கள் வைத்திருக்கும் சாதனங்களையும் பார்த்தார். பரமாரைப்பற்றிய கவலை ஏற்பட்டது. பரமார் அவருடைய சிஷ்யன். புத்திரனைவிட அவனிடத்தில் அதிகப் பிரியம் வைத்திருந்தார். நண்பனைவிட அதிக நம்பிக்கையும் வைத்திருந்தார். அவர் சொல்லுக்கு மரியாதை வைத்துத்தான் அவன் தன் கிழத் தாய் தந்தையர், புதிதாக மணந்த மனைவி இவர்களை விட்டுச் சண்டைக்கு வந்திருந்தான். அவன் சாவின் வாயில் இறங்கும்போதும் பீமதேவன் பேரைச் சொல்லிக்கொண்டுதான் குதித்தான். பட்டண், அதன் அரசன், அவர்கள் இஷ்ட தெய்வம் இவைகளுக்காகத்தான் அவன் உயிர் கொடுக்கத் துணிந்தான். மகாராஜனுக்கு மற்றொன்றும் ஞாபகம் இல்லை. திரிலோசன் பாலனைப் பற்றிய எண்ணம் தான். அவர் கீழே பார்த்தார். காயமடைந்த பரமார் தனியாகவே புலிபோல் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தான், 'பரமார் பயப்படாதே!' என்று குரல் கொடுத்தார் பீமதேவன். ஒரே சத்தத்துடன் பீமதேவர் பரமார் சண்டைசெய்யுமிடத்தில் குதித்தார். இது கொஞ்சம் யோசனையற்ற செயல்தான். வீரர்கள் எல்லாம் நடுங்கிவிட்டனர். ஆனால் பட்டண் வீரர்கள் பீமதேவனைக் காத்து நிற்க, சாவையும் விளையாட்டாய் எண்ணக்கூடியவர்கள். ஒருவர்பின் ஒருவராக இருபத்தைந்து வீரர்கள் மகாராஜாவின் பின்னால் குதித்தனர். மற்றவர்கள் அம்புவிட்டுக் கரையில் நின்ற குதிரைகளையும் யானைகளையும் துளைக்க ஆரம்பித்தனர். கீழே அகழில் பெரிய சண்டை ஆரம்பமாயிற்று. விழும்போதே மகாராஜா ஒரு குதிரை வீரன் தலையை வாங்கிக்கொண்டே குதித்தார். பிறகு அங்கே தனியாய் நீந்திய குதிரை மேல் ஏறி அமர்ந்துகொண்டார். "பரமார், வா. நீயும் குதிரைமேல் ஏறிக்கொள்' என்றார்.

பரமார் கண்கள் இருண்டு வந்தன. அவன் குதிரையைத் தேட ஆரம்பித்தான். யவன வீரர்கள் அவதிப்பட்டனர். ஒவ்வொருமுறையும் மேலிருந்து ஒரு வீரன் குதித்தான். குதித்து ஓரிருவரை மூழ்கவைத்தான். தண்ணீரிலேயே கைகலப்பு ஏற்பட்டுவிட்டது. கத்திகளும் வாட்களும் மின்னி இடித்துப் பொறி பறந்தன. பட்டண் வீரர்கள் இருபத்தைந்து பேர்தான். எதிரிகள் எண்ணோ கணக்கிலடங்காது.

ராயும் வந்துவிட்டான். பீமதேவனுடைய தைரியத்தைப் பார்த்ததும் அவன் உடலிலும் சூடு ஏறிப்பாய ஆரம்பித்தது. அவன் கெட்டிக்காரனும் கூட. யுத்த சமயத்தில் எதிர்பாராத தாக்குதல் தான் எதிர்பாராத வெற்றியைக் கொடுக்கிற வழக்கம். அதனால் அவன் தன்னுடைய சில வீரர்களுடன் கீழிறங்கி வந்து கதவைத் திறந்துவிட்டான். யாருக்கும் இதைப்பற்றி ஒன்றும் தெரியாது. அம்பு விடுகிறவர்கள் விட்டுக்கொண்டேயிருந்தனர். ஆகவே அவர்களுக்கும் தெரியாது. ராய் ரத்னாதித்யனும் அவனும் சௌராஷ்டிர வீரர்களும் கதவைத் திறந்து பாலத்தின் கயிறுகளை அறுத்து, பாலத்தின்மேல் உட்கார்ந்திருந்த வீரர்களையும் கொன்று தள்ளினான். பிறகு நீந்தி நீந்தி மகாராஜாவின் உதவிக்குப் போய்ச் சேர்ந்தனர் வீரரும் அவனும். "ஜய் ஸோம்நாத்!"

மகாராஜா இந்த முழக்கத்தைக் கேட்டுத் தாமும் முழக்கினார். பரமாரும் கடைசி முறையாக 'ஜய் ஸோம்நாத்' என்றான்.

கால் மணி நேரம் இரு தரப்பிலும் கோர யுத்தம் நடந்தது. அஸ்திரங்கள் விடுபட்டன.

சஸ்திரங்கள் மின்னின. பீமதேவனும் மற்ற வீரர்களும் கதவருகில் வந்து சேர்ந்தனர்.

கதவு திறந்தவண்ணமே மீண்டும் மூடிக்கொண்டது. கோட்டைமேலிருந்த வீரர்கள் தத்தனுடைய தலைமையில் எதிரிகளைச் சின்னபின்னப் படுத்திக்கொண்டிருந்தனர். பீமதேவ மகாராஜா ரத்தம் கக்கும் பரமாரைத் தம் மடியிலிட்டுக் கொண்டு தண்ணீர் ஊற்றினர். அந்தச் சிறு வயதுள்ள வீரன் கண்களைத் திறந்து பீமதேவனைப் பார்த்தான். "பீமதேவ மகாராஜா" என்று ஒரு முறை அழைத்தான்.

"பரமார், பரமார்" என்றழைத்த பீமதேவனுடைய வார்த்தைகள் கண்ணீரில் கரைந்து வந்தன. "நீ இன்று அழியா நிலையை எய்துவிட்டாயா?"

"மகாராஜா. ஜய் ஸோமநாத்...' என்றவாறே பரமார் வீரன் தலையைக் கீழே தொங்கவிட்டான்.

அவனுடைய மார்பிலே முகத்தைப் புதைத்துப் பீமதேவன் குழந்தைபோல அழ ஆரம்பித்தார். பின்னால் வந்த குருதேவர் பரமாருடைய கழுத்தில் கையை வைத்தார். 'அப்பா பீமா, எழுந்திரு. பரமார் கடமைக்குக் கழுத்தைக் கொடுத்து விட்டான். அவனைக் கைலாசவாசி ஏற்றுக் கொண்டுவிட்டார். இனி நாம் நம் கடமையைச் செய்தாகவேண்டும். நில். நான் உன்னுடைய புண்களைக் கட்டிவிடுகிறேன்," என்றார். பிறகு பீமதேவன் கைப்புண்ணுக்கு மருந்து வைத்து, தாமே பட்டியும் கட்டிவிட்டார்.

"குரு தேவா, சரிதான். உண்மைதான். நீங்கள் சொல்லுவது!" என்று சொல்லிக்கொண்டே தம் வீர அன்பனின் விரிந்த கண்களை மூடிவிட்டு, சவத்தைக் குருநாதரிடம் ஒப்படைத்துவிட்டு அவர் மறுபடி கோட்டைக்குள் சென்றார்.



## அத்தியாயம் 15.

# அதே இரவு.

1

பீமதேவ மகாராஜா வீராவை உடனழைத்துக் கொண்டு எல்லாவற்றையும் பார்த்துவிட்டு வரக் கிளம்பினர். முக்கியமான வாசலுக்கெதிரே சண்டை நின்றுவிட்டது. எதிரிகளும் விட்டுப் பின்னடைந்து விட்டனர். யானைமேல் உட்கார்ந்திருந்த வீரர்களும் முணுமுணுத்துக்கொண்டிருந்தனர். குதிரை வீரர்கள் மட்டும் தங்கியிருந்து அம்பு விட்டுக் கொண்டிருந்தனர். பட்டண் வீரர்களும் அதற்குச் சரியான பதில் தந்து கொண்டிருந்தனர். பீமதேவன் அந்த இடத்தைப் பலப்படுத்திவிட்டு விமலனிடம் ஒப்படைத்து, துவாரகா வாசலுக்குச் சென்றார், அங்கேதான் அகழியும் சமுத்திரமும் சேருமிடம். அதனால் அதைக் காப்பாற்றுவது அவ்வளவு கடினமாக இல்லை. யுத்தம் சுமாராக நடந்து கொண்டிருந்தது. ராய் என்னவோ நின்று கொண்டிருந்தான். மகாராஜா சென்றதும் அவனைத் தாவி அணைத்துக் கொண்டார்.

"ராய், நீர் இன்று என் உயிரைக் காப்பாற்றினீர்."

"உங்களைக் காப்பாற்றுவது எங்களுடைய கடமையல்லவா!"

"ஆனல் கதவைத் திறந்துவிட மற்றெவருக்கும் தோன்றியிராதல்லவா? அதற்குத் தைரியம் வேண்டாமா?" என்றார் பீமதேவன்.

ராய் பேசுவதிலும் சமர்த்தன். "அட, அவ்வளவு உயரக் கோட்டையிலிருந்து குதிக்க எனக்குத் தைரியம் இல்லை!" என்று சொல்லிச் சிரித்தான். மீண்டும் இருவரும் கட்டிக் கொண்டனர்,

"அது சரி. அந்த ஜனங்கள் அங்கே என்ன ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்." என்று கேட்டார் பீமதேவன்.

"அது தானே நானும் பார்த்துக்கொண்டிருக்கிறேன். இவர்கள் சந்தோஷத்துக்கு ஒரு ஆதாரம் கூடத் தேவையில்லை போலிருக்கிறது. இருந்தாலும் இரவில் இங்கே கொஞ்சம் வீரர்களை நிறுத்தியாக வேண்டும் போலிருக்கிறது!" என்றான் ராய் ரத்னாதித்யன்.

பீமதேவன் கோட்டையிலிருந்து கீழே இறங்கினர். ஒரு இடத்தில் சில சாதுக்கள் செத்த சில வீரர்களை ஒன்ருகச் சேர்த்துக் கொண்டிருந்தனர். குருதேவர் உள் கோட்டையில் கோயிலைச் சுற்றிக்கொண்டு அங்கங்கே அடிபட்டுக் கிடக்கும் வீரர்களைக் கவனித்து, தகுந்த சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்து கொண்டு இருந்தார். அந்தக் குருவினுடைய பாததூளியை மகாராஜாக்கள்கூடத் தலையில் தாங்கிப் பெருமை அடைவர். அந்தக் கங்க சர்வஞர் இன்று ஒரு சாதாரண வைத்தியர்போல் அங்குமிங்கும் திரிந்து காயமடைந்தவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து தந்து கொண்டிருந்தார். தீபா கோட்டாரியும் வந்தவர் போகிறவர்களுக்கு ஆகார வசதியைச் செய்து தந்து கொண்டிருந்தார். மகாராஜா இதையெல்லாம் பார்த்துக்கொண்டு அங்கங்கே சந்தித்த வீரர்களுக்கு ஆறுதல் சொல்லி, அவர்கள் வணக்கத்தை ஏற்றுக்கொண்டவாறே தம் இருக்கைக்குச் சென்றார்.

அங்கே உள் கோட்டையில் கோவிலுக்கருகே ஹரதத்தன் வந்துகொண்டிருந்தான். அவன் பீமதேவ மகாராஜாவின் எதிரே நின்று கொறடாவைத் தலைமேல் வைத்து, 'அடே, உன் தலையில் சாவு சுற்றுகிறது. மகாமாயையைக் கெடுத்தவன் நீ!' என்று கத்தினன். பீமதேவன் வாளை அநேகமாக உருவிவிட்டார். பிறகு, வீரரானபடியால், உதவியில்லாத சாதுவை வதைப்பது சரியல்ல என்று எண்ணி, சிரித்தவாறே நகர்ந்துவிட்டார். ஹரதத்தனும் தன்வழி சென்றுவிட்டான்.

மகாராஜா தம் அறைக்குச் சென்று நாலாபக்கமும் பார்க்க ஆரம்பித்தார். வீரா புரிந்துகொண்டான். "மகாராஜா! அந்தப் பித்துக்கொள்ளிப் பெண்ணைப் பார்த்தீர்களா! நாள் முழுவதும் அந்த உயரத்தில் உட்கார்ந்துகொண்டு உங்களையே பார்த்துக்கொண்டிருக்கிருள்" என்ருன்.

"வீரா, உலகம் முழுவதும் இப்படிப் பித்துக்கொண்டால் என்ன ஆகும்? நானும் ஒருமுறை அவளைப் பார்த்தேன்" என்றார்.

வீராவும் பீமதேவனுடைய உள்ள அன்புக்குக் கொஞ்சம் தூபம்போட எண்ணினன். "எங்கே மகாராஜா, அவளுக்குத்தான் உங்களைத் தவிர வேறே எண்ணமே கிடையாதே!" என்ருன் பரிகாசக் குரலில்.

"நில்லு நில்லு; உனக்கு மட்டும் வேறு நினைவிருக்கிறதோ?"

மகாராஜா கவசம் கழற்றிக் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டுத் தூங்கச் சென்றுவிட்டார். ஆனல் தூங்க முயன்ற அவர் காதுகளுக்கு ஒரு இளமான்குட்டி ஓடுவதுபோல் சத்தம் கேட்டது. கண் திறந்து பார்த்தார். ரோஜாப்பூக் கால்கள் நடந்து வந்தன. பறக்கிற வஸ்திரங்களுக்குள் ஒரு ஒளியுடல் மனதைக் கசக்கித் திருகிற்று. பரவிப் பறக்கும் மயிர்க்கிடையே சிவந்த அழகிய முகம். வாய், "அம்மா, அம்மா! மகாராஜா இன்று சொல்ல முடியாது போ!" என்று சொல்லிக்கொண்டிருந்தது.

பீமதேவன் சிரித்தார். "இன்னம் பாக்கியிருக்கிறது!" என்று சொன்னர். சௌளா மகாராஜாவைப் பார்த்தாள். அவளுக்கு வெட்கம் வந்து அடைத்துக் கொண்டது.

பிறகு தன் உடையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு அவள் கீழே பார்த்தாள். பிறகு சிரித்துக்கொண்டு கீழே இறங்கிப்போனுள். ஓடும் ரோஜாக் கால்கள், இரைக்கும் முகம், அழகிய மருள் விழிகளின் வெட்கம் நிறைந்த வரவேற்பு எல்லாம் அவரைக் கனவிலும் தொடர்ந்தன.

மகாராஜா கிட்டத்தட்ட ஒரு மணி ஒன்றரை மணி நேரம்தான் தூங்கியிருப்பார். அதற்குள் ஏற்பட்ட பெரிய ஆரவாரத் அவரை எழுப்பி விட்டது. அவர் திடுக்கிட்டு எழுந்தார். ஆயுதங்களை வாரி எடுத்துக்கொண்டு வெளியே வந்து பார்த்தார். சேனை ஆடிப்பாடிக் குதித்துக் கொண்டு வந்தது. 'ஜய் ஸோம்நாத்' என்ற முழக்கத்துடன் அது அவருடைய விடுதியை நோக்கித்தான் வந்துகொண்டிருந்தது. எல்லோருக்கும் முன்னுல் குருதேவர், ராய், தத்தா சாளுக்யின் எல்லோரும் தீவட்டி எடுத்துக் கொண்டுவந்து கொண்டிருந்தனர், விமலன் எல்லோருக்கும் முன்னுல் வந்து கொண்டிருந்தான். மகாராஜா கீழே பார்த்தார். அங்கே மறு பக்கத்திலிருந்து கங்காவும் சௌளாவும் குனிந்து குனிந்து கீழே பார்த்துக் கொண்டிருந்தனர் இந்த அதிசயக் கூட்டத்தை.

மகாராஜன் சிரித்துக்கொண்டே, என்ன விமலா இது? என்று கேட்டார்.

"யவனனுடைய சேனை பின் வாங்கிவிட்டது!"

"என்ன ! உண்மையிலேயே முற்றுகையை வாபஸ் பெற்றுவிட்டா?"

"முற்றுகையாவது? மூன்று பக்கமும் சேனை அரை யோஜனை தூரம் பின் வாங்கி விட்டது மகாராஜா. தங்களுக்கு வெற்றி."

ஆயுதங்களை அணிந்து மகாராஜா கீழே இறங்கி வந்தார். முழுச்சேனையும் ஒரே குரலில் 'ஜய் ஸோம்நாத்!' என்று முழங்கிற்று.

மகாராஜர் அப்படியே குருதேவர் காலில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். "குருதேவா! தங்கள் ஆசீர்வாதம்தானே எங்கள் சக்தி"

"குழந்தாய், சிரஞ்சீவியாயிரு, போலாநாதனுடைய கிருபை, நான் அவருடைய அடிமை. ஆனுல் உன் வீரத்தனம் அனந்த காலத்துக்கும் உவமையாயிருக்கும். எழப்பா. என் காலில் விழாதே, என்னைக் கட்டிக்கொள்." என்று குருதேவர் அவரை எழுப்பிக் கழுத்துடன் சேர்த்துக் கட்டிக் கொண்டார். பிறகு முறையே ராய், தத்தன், விமலன் மற்றச் சேனுதிபதிகளையும் தழுவிக் கொண்டார், வீரர்கள் 'ஜய் ஸோம்நாத்' என்றும், மகாராஜா பீமதேவருக்கு ஜய் என்றும் சத்தம் போட்டுக் கொண்டே இருந்தனர். சங்கம், பேரி, மிருதங்கம், நகரா முதலியனவும் ஒலி எழும்பின. எவ்வளவோ வீரர்கள் ஆவேசத்தில் எழும்பிக் குதித்து ஆராவாரம் செய்தனர்,

"மகாராஜா, மாலை வேளையாயிற்று. வாருங்கள். எல்லாக் கீர்த்திக்கும் பொறுப்பாளியான பகவானுடைய பாதங்களுக்குப் போகலாம்."

எல்லோரும் ஆடிப்பாடிக் குதித்துக்கொண்டு பகவானுடைய கோயிலுக்குள் சென்றனர். கோட்டை முழுவதும் வீரர்கள் நிரம்பியிருந்தனர். குருதேவர் தியானம் செய்துவிட்டு, பகவானுக்கு ஆரத்தி எடுத்தார். மக்கள் சாந்தமாய் நின்றனர். பிறகு நந்திக்கெதிரே ஆரத்தியை வைத்துவிட்டு ஆசி வசனங்கள் கூறினுர் குருதேவர். எல்லோரும் கவனமாய்க் கேட்டனர்,

"குழந்தைகளே, ஸோமநாதருடைய புகழைக் காக்கக் கூடியிருக்கும் வீரர்களுக்கெல்லாம் என்னுடைய வாழ்த்துக்கள், ஆசீர்வாதங்கள் நீங்கள் வெகு நாள் வாழ்ந்து அதர்மசக்திகளை வெற்றிகொண்டு இந்த உலகில் புகழையும் பரலோகத்தில் கைலாச வாசத்தையும் அடைவீர்களாக! மகாராஜா உங்களுடைய ராஜ்யம் அழியாமல் இருக்கட்டும். தங்களுடைய இந்த யவனர்களை வெற்றிகொண்ட கீர்த்தி சூரியன் உள்ள வரை மற்றவர்களுக்கு வழிகாட்டியாய் இருக்கட்டும். யுகயுகமாக வாழ்ந்திருப்பாய் மகாராஜாதி ராஜ, பரம பட்டாரக ஸ்ரீ பீமதேவ சாளுக்கியனே!"

அங்கே சற்று நேரம் அசைவற்ற அமைதி நிலவி நின்றது.

ஒரு இருட்டுத் தூணுக்கருகே நின்ற சடைமுடி தாங்கிய ஓர் பயங்கரமான உருவம் வெளியேறிற்று. குருதேவர் நின்றிருந்தார். அந்த உருவம் அவருக்கெதிர்சென்று நின்றுகொண்டு கொறடாவைத் தலையில் தாங்கி, அமைதி அதிரப் பின் வருமாறு சொல்ல ஆரம்பித்தது:—

"அட தர்மதுரோகியே! உன் கர்வம் கொண்டு கட்டப்பட்ட இந்தக் கோட்டைகள் எல்லாம் இடிந்து விழப்போகிறது. மகாமாயையைப் பாழ் செய்த நீ, ஏ பீமா, உன் குருவான இவன் இருவருமே அழியப் போகிறீர்கள். நீங்கள் அக்ரமங்கள் புரியும் இதே இடத்தில் கழுகுகள் பறக்கப் போகின்றன. நாய்கள் அழப்போகின்றன."

குரல் பயங்கரமான ஆழம் கொண்டு அதிர்ந்தது ஓராயிரம் வீரர்களின் உருவிய வாட்கள் அவன் உடலைத் துண்டமாடத் தயாராயின. பீமதேவனும் வாளை உருவினுர். ராயும் தன் இடைவாளை எடுத்தான். ஒரு கணத்தில் பயங்கரமான கசகசப்பு ஏற்பட்டது.

குருதேவர் முன்னேறினுர். மீறமுடியாத குரலில், "அமருங்கள் என் வீரர்களே" என்று அமர்த்தினுர். தீவட்டியின் வெளிச்சத்தில் வெண்மை நிறம் கொண்ட தாடிக்கும் சடைமுடிக்கும் இடையேயுள்ள அவர் முகம் எல்லாரையும் தன் வசப்படுத்தி நிறுத்திவிட்டு, "சரி சும்மா இரு. பேசாதே," என்ற ஆரம்பித்த சப்தம் குறைந்து

குறைந்து மௌனத்தோடு மௌனமாய்க் கலந்து மறைந்தது.

"என் வீரர்களே! தவத்தினாலும், இந்தச் சண்டையினால் ஏற்பட்ட பளுவினாலும் சிவராசியினுடைய மூளை புரண்டு இருக்கிறது. நீங்கள் அவன் பசுவதைக் கவனிக்க வேண்டாம் வீரர்களுக்குப் பொறுமைதான் பூஷணமாகும்." என்று சொல்லி அவர் சிவராசியிடம் சென்றார். ருத்ரனும் சம்புவும் சேர்ந்ததுபோல் இருந்தது அந்தத்தோற்றம். இருவரும் உயரம், தேஜஸ் பொருந்தியவர்கள். ஆனால் ஒருவர் நிலைதடுமாறி, லவரமடைந்து ஆனால் கடோரமாக இருந்தார். மற்றவர் அமைதியுடன் தைரியமும் தயவும் கொண்டு நின்றார். கொஞ்சநேரம்வரை குருவும் சிஷ்யனும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். பிறகு தாய்மையையும் தோற்கடிக்கும் குரலில் குருநாதர் சொல்ல ஆம்பித்தார் "சிவராசி அடக்கத்தை விட்டவன் கீழ்நிலையை அடைவான். போ, உன் மனது நிலையில் இல்லை. போ" என்று உத்தரவிட்டார்.

சிவராசி ஏதோ பேச வீண் முயற்சி செய்தான்.

"போ குழந்தாய். போ." சிவராசியின் உள்ளே, தீ சுடர்விட்டு எரிந்தது. அவன் தொண்டையை அடைத்துவந்தது. அவன் மண்டை நெருப்புச் சட்டியாயிருந்தது. அவன் தலைசுற்றக் கண்கள் இருண்டுவந்தன. அந்தக் கிழவர் முகத்தில் ஓர் அறை விட அவன் கைகள் ஆசை கொண்டன. ஆனால் பலமற்று நின்றன.

குருதேவர் பாம்பையடக்க மந்திரிப்பவர்போல, "போ, மகனே போ." என்றார்.

சிவராசியும் எவ்வளவோ முயன்றான். ஆனால் பல வருஷங்களாக அவனை ஆட்டி வைத்திருக்கும் அந்த ஈரக்குரலின் மோஹினி சக்தியை அவனால் மீறமுடியவில்லை. அவன் ஒருமுறை ஆயுதத்தைத் தாங்கிநிற்கும் ஆயிரக்கணக்கான வீரர்களையும் பார்த்தான். குருதேவருடைய கண்களை மீண்டும் ஒரு முறைபார்த்தான். அவன் மனதுள் ஏதோ ஒன்று 'இந்த மோஹினி சக்தி சுலபமாய்ச் சேகரித்ததன்று!' என்று சொல்லிற்று.

'போ' என்று சொல்லியவாறே குருதேவர் சிவராசியின் தோளின்மேல் கையை வைத்தார். சிவராசியின் உள்ளம் குமுறிற்று. ஆனால் அடங்கிய காட்டு மிருகம்போல அவரைப் பின்தொடர்ந்தான்.

இருவரும் மறைந்தனர். ராய், 'பீமதேவ மகாராஜனுக்கு ஜய்!' என்று முழக்கம் கிளப்பினான். எல்லோரும் கனவிலிருந்து விழித்தவர்போல் உடன் முழக்கம் செய்தனர். சங்கமும் மிருதங்கமும் சத்தம் போட ஆரம்பித்தன.

பீமதேவன் சொன்னார்:

"என் வீரர்களே, சந்தோஷத்தில் நம்மை மறந்து இருக்கக்கூடாது. இன்னம் நமக்கு அநேக வேலைகள் இருக்கின்றன. பரலோகம் சென்றவர்களின் உடல்களைத் தகனம் செய்தாக வேண்டும். பிறகு உண்டு களித்து, தூங்கி எழுந்தாக வேண்டும். எதிரிகள் என்ன வஞ்சகம் செய்யத் துணிந்திருக்கிறார்களோ, யார் கண்டது?"

எல்லோரும் அங்கிருந்து துவாரகைப்புற வாசலுக்குச் சென்றனர். அங்கே சென்று தம் தோழர்களை அக்னியிலிட்டனர். மூவாயிரத்து இருநூறு வீரர்கள் இறந்துபட்டிருந்தனர். ஆயிரத்தைந்நூறு ஜனங்கள்வரை காயம்பட்டுக் கிடந்தனர். ஆனால் ஒவ்வொருவருக்கும் வருத்தத்துக்கும் இடையே ஒரு பெரிய சந்தோஷம். ஒவ்வொரு குஜராத்திய வீரனும் குறைந்தது ஐந்து அல்லது ஏழு யவன வீரர்களுக்கு யமனுலகுவழி காட்டிவிட்டுத்தான் காயம்பட்டு வீழ்ந்திருந்தான், அல்லது உயிர் விட்டிருந்தான். இரவில் மீண்டும் ராயும் பீமதேவனும் கோட்டைமேல் வந்து பார்த்தார்கள். எல்லாம் சரியாய் இருந்தன. மீண்டும் இருக்கைக்குத் திரும்பினார்கள்.

ராய் சொன்னான்: "மகாராஜா! நான் கொஞ்ச நாழிகை களைப்பாறிவிட்டுத் திரும்பிவருகிறேன். அமீர் சும்மா திரும்புபவனல்ல. ஏதோ காரணம் இருக்கவேண்டும்."

"ஆம், அவசியம் வந்து என்னையும் எழுப்பு." என்று சொல்லி, பீமதேவன் இருப்பிடம் சென்றார்.

3

மகாராஜா பீமதேவன் தம்முடைய இருப்பிடத்துக்கு வந்தபோது அவர் இதயம் மிகவும் உல்லாசமாயிருந்தது. அவர் இன்று பெரிய பெரிய வேலைகளைச் செய்திருந்தார். மகமுத்தைப் பின்னடையச் செய்வது சுலபமான வேலை அல்ல. சேனை வீரர்கள் அவரை மிகவும் கொண்டாடினார்கள், அவரைப் புகழ்மங்கை அணைந்துகொண்டாள். இப்பொழுது வில் வீரன் பீமதேவனுடைய பெயர் பஞ்ச பாண்டவருள் பீமனுடைய பெயருடன் சேர்ந்து அவரை உலக வீரர்களுள் ஒருவராக்கிவிடும். பகவானுடைய கிருபையால் அவர் கொடுத்த சக்தியையும் திறமையையும் அவருக்கே செலவழித்து, பீமதேவன் கைலாசத்திலும் தமக்கு ஓர் இடம் தேடிக் கொண்டு விட்டார். இதனிடையே மலையிலிருந்து இறங்கி ஓடிவரும் நதியைப் போன்ற சௌளாவின் ஞாபகமும் வந்தது.

வேறொரு விதமான ஆனந்தத்துடன் அவர் மனது சௌளாவைப் பற்றி எண்ண ஆரம்பித்தது. அவளைக் குருதேவருடைய பெண் என்றார்கள் அனைவரும். அவள் தன்னைப் பார்வதி என்று சொல்லிக்கொண்டிருந்தாள். அவள் ஒரு அற்புதப் பெண்ணாயிருந்தாள். அவள் பாதங்கள் பூமியில் படுவதே இல்லை. கோயிலில் கடவுள் எதிரே ஆடுவதுபோல் அவள் வாழ்க்கையிலும் அழகடி வைத்து ஆடிக் கொண்டிருந்தாள். நில வொளி கொண்டு பாயும் ஜலத்தின் தாரைபோல் அவள்

கல்லின்மேல் பாய்ந்துகொண்டிருந்தாள். அவள் சிரிப்பில், கண்ணீரில், பயத்தில், எதிலும் மனத் தத்துவமோ, மனித தத்துவமோ இருந்ததாகத் தெரியவில்லை; ரச தத்துவத்தின் பல உருக்களா கவே இருந்தன.

பீமதேவனுக்கு இரு ராணிகள் உண்டு. இருவ ரும் அழகிகள், கெட்டிக்காரிகள், அவர்கள் பீம தேவன் சுமையைக் குறைத்து வாழ்க்கையை இன்பமாக்கி வந்தார்கள், பீமதேவன் இச்சைக்கு மாறாக அவர்கள் நடந்து அறிந்திலர், அந்த ராணிகளின் சேர்கையால் பீமதேவன் வாழ்க்கை நிறைவும் சுகமும் கொண்டிருந்தது. ஆனால் சௌளாவின் சேர்க்கை சுகத்தையும் நிறைவை யும் மட்டும் எல்லையாகக் கொண்டதாயில்லை. அவளுடன் அவர் குடும்பப் பேச்சோ, ராஜ்ய காரி யங்களைப் பற்றிய பேச்சோ பேசுவதில்லை. பேச மனமும் வராது. யார்தான் ரோஜா மலரின்மேல் கருங்கல்லை எடுத்து வைப்பார்கள்? அவள் சந்தி ரன் ஒளி, புஷ்பங்களின் மணம், ஜலதரங்கத்தின் நர்த்தனம் இவைகளால் ஆக்கப்பட்டிருந்தாள். அவளுடன் இந்த மண்ணுலகின் இன்பம் கிட் டாது. உலகிலிருந்து வெகு தூரத்தில்தான் எங்கோ, ஆகாயத்திலோ, அல்லது பனி நிறைந்த மலையின் உஷ்ணம்தரும் ஒரு குகையிலோதான் இன்பம் அனுபவிக்க முடியும். அவள் எண்ணங் களும் நிமிஷத்துக்கொரு நூதனமான புது அவ தாரம் எடுத்தன. அவள் ஆற்றல் அகாதமாக, அவள் உல்லாசம் ஆயிரம் தாரையுடையதாக இருந்தது.

இப்படி எல்லாம் எண்ணிக்கொண்டு அவர் தம் இருக்கையை அடைந்தார். ஆயுதங்களை எடுத்து விட்டுச் சாப்பிட்டுவிட்டு மேல் வெளிக்குச் சென் றார். கிருஷ்ண பக்ஷத்துப் பிரதமைச் சந்திரன் உதித்திருந்தான். நாலுபக்கமும் ஏற்படும் சத் தம் அமைதியில் தலை சாய்க்க ஆரம்பித்தி ருந்தது. அமைதியும் அன்று நடந்த ரத்த ஓட் டத்தை மறக்க ஆரம்பித்திருந்தது. மகாராஜா அங்குமிங்கும் அலைய ஆரம்பித்தார். சௌளா வின் ரோஜாக் காலடியையும் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அவள் நடந்தாளா என்ன அடிச் சத்தம் கேட்க? அவள் எங்கோ ஒரு மூலையில் ஒளிந்துஉட்கார்ந்து, துடி நடை போடும் அரசனைச் சிரிக்கும் கண் களால் அல்லவா பார்த்துக்கொண்டிருந்தாள்!

அன்று பகல் முழுவதும் அவள் உள்ளம் மிரு தங்கம் அடித்துக்கொண்டிருந்தது. கோயில் சிகரத் தின் அறை கைலாசமாயிருந்தது. மகாராஜா வினுடைய மஞ்சள் தலைப்பாகை தலைச் சடை யாயிருந்தது. அவர் தலையிலிருந்த தோகை சந் திர கலையாகத் தோற்றம் அளித்தது. அவள் பீமனைப் பட்டண அரசன் சண்டை போடுவதாக எண்ணவில்லை. சாக்ஷாத் சம்புவே திரிபுராசுர னுடன் சண்டை போட்டுக்கொண்டிருப்பதாக எண்ணினாள். பிர்ம்மாவே கங்கசர்வக்ஞராக மாறி அவருக்குத் தேர் ஓட்டுவதாக நினைத்தாள். விஷ்ணு அவருடைய அம்புகளாக மாறியிருந்தார். வேதங்கள் குதிரை உரு எடுத்திருந்தன. துரு வம் முதலிய ஜோதிகணங்கள் அவருடைய ஆபர ணங்களாகியிருந்தன.

தேவதேவனான சிவன் அங்குமிங்கும் அலைந்து உலகத்தையே நடுங்கவைத்துக்கொண்டிருந்தார். ஆகாயத்தில் நின்று அப்சரசுகள் அவருக்குத் துதி பாடினர். முனிவர் தேவரும் நின்று துதி செய்த னர். தண்டங்களைக் கையில் எடுத்து நாட்டிய மாடும் சடை முடியர்களையும் அவள் பார்த்தாள்.

அவள் எல்லாவற்றையும் பார்த்தாள். 'வீரா சாவடா' [மெய்காவலின் பெயர்] நந்தி என்றே எண்ணினாள். விமலன் கணபதியானான். ராய் ரத்னாதித்யன் தேவேந்திரன் இடத்தைப் பிடித் துக்கொண்டான்.

கைலாசத்தில் அவள்—பார்வதி, ஹிமவா னுடைய குமாரி—உட்கார்ந்துகொண்டு தன் கணவனுடைய வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். 'இதோ வருவார். வந்து உடனழைத்துச் செல்வார். இருவரும் சேர்ந்து திரிபுர விஜயம் செய்யலாம்' என்று எண்ணிக் கொண்டிருந்தாள்.

எதிரே திரிபுர நகரம் பரந்துகிடந்தது. அவள் திரிபுர அரசனையும் கண்ணால் பார்த்தாள். பசும் பாகை அணிந்து சிகப்புத் தாடி பறக்க, எவ்வளவு பயங்கரமான தோற்றம்! அவள் தன்னுடைய சம்பு பாசுபதாஸ்திரம் விடுவதையும் பார்த்திருந்தாள். எவ்வளவு தைத்தியர்கள் பாணம் பட்டு வீழ்ந் தனர்!

அவள் மகாதேவன் கோபிப்பதையும் பார்த்தி ருந்தாள். பயம் அடைந்த தேவ சேனை நாலா பக்கங்களிலும் அவருக்கு வணங்கி எழுவதை அவள் பார்த்தாள். கடைசியில் திரிபுர வெற்றி யும் கிடைத்துவிட்டது. மனம் மகிழ்ந்த தேவ கணங்கள், பிர்ம்மா இந்திரனை முன்னிட்டுக் கொண்டு வந்து அவளுடைய சம்புவுக்கு வந்தன மும் வாழ்த்தும் செலுத்திப் போவதையும் பார்த் திருந்தாள். ஆகா! சம்புதான் எவ்வளவு அழகா யிருந்தார்! அவர் ஒளி! அவர் ஆபரணங்கள்; கிரீ டம், அழகு, பெருமை! அவள் அந்தச் சமயத்தில் சிவ புராணத்திலிருந்து தெரிந்த சுலோகங்களைச் சொல்ல ஆரம்பித்தாள்.

இங்கே பீமதேவன் மனம் கடல் குமுறிற்று. சௌளா இன்னும் ஏன் வரவில்லை?

அவள் அடி எடுத்து வைத்தாள். பீமதேவன் காதுகள் பதிவு செய்தன,

அவளுக்கும் தன் சம்பு அவசரப்படுவதை, எதிர்பார்த்து ஏமாந்து ஆத்திரப்படுவதைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை. ஆனால் சிரிப்பு வந்துவிட்டது. அவள் சிரிப்பைக் கேட்டுவிட்டார். ஓரே பாய்ச்சலில் பாய்ந்து அவளைக் கையைப் பிடித்தார்......

"அம்மாடி! நான் நொறுங்கியே போய்விட்டேன்!"

"போ, போ, எவ்வளவு நேரம் காத்துநிற்க வைத்தாய்?"

"நீங்களா என்னை எதிர்பார்த்திர்கள் மகாராஜ்! நானல்லவா வெகுநேரமாகத் தங்களுக்கு மரியாதை செய்ய இங்கே உட்கார்ந்திருக்கிறேன்."

"ஆமாம் தேடித் தேடி என் கண்கள் களைத்தது, அதனுல்தானே!"

"நில்லுங்கள் பெருமானே! பூஜை செய்யப் புஷ்பமும் சந்தனமும் கொண்டுவருகிறேன். திரிபுரம் வெற்றிபெற்று வந்தவர் நீங்கள்......" என்று சொல்லிக்கொண்டே அவள் அவர் கையை விட்டு வெளியே பாய்ந்தாள். கீழே போய் கொண்டுவந்து உபசரித்தாள்.

"சௌளா, இந்த மாலை எனக்கு மட்டுமல்ல. இரண்டு பேருக்கும்தான்" என்று சொல்லி அரசர் அந்த மாலையைக் கழற்றி அவள் கழுத்தில் சூட்டினுர், இருவரும் நன்ருய்ச் சிரித்தார்கள்.

"என் தெய்வமே, நன்ருய்ச் சந்தோஷப்படுங்கள். இப்படியே எப்பொழுதும் இருப்பீர்களா, அதையும் சொல்லுங்கள்."

சௌளா—பார்வதி பரமேசுவரன் என்று சொல்லிக் கொண்டாள். பிறகு சௌளா பீமதேவனுடைய புஜங்களுள் மறைந்துகொள்ள முயன்ருள்.

அழகான இரவு, சந்திரன் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். கண்களை மூடி, ஏன் உடலின் உயிர்ப்பையே அவித்து, சௌளா தன் நாதனுடன் கலந்தாள். இந்த மானஸச் சுகத்தை அவள் என்றுமே கற்பனை கூடச் செய்து பார்த்ததில்லை, பிறவியிலேயே நர்த்தகியாகப் பிறந்தவள். பக்தி பாவத்திலேயே பெரியவளானவள். இரண்டு கைகளையும் பீமதேவன் கழுத்தில் கட்டி அவள் தொங்கிக்கொண்டிருந்தாள். பீமதேவன் நரம்புக்குள்ளும் புயல் சீறி வீசிற்று. அவளை அப்படியே வாரி எடுத்துக்கொண்டு அறைக்குள் சென்ருர்.

கையிலே உருவிய வாளை வைத்துக்கொண்டிருந்த நந்தி சந்திரனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான்.

4

ராய் கவலைப் பட்டது வீண் போகவில்லை. மகாராஜா விட்டுச் சென்ற பிறகு அவனுடைய காதில் ஏதோ சப்தம் கேட்டது. பார்க்க



முடியாத தொலைவில் ஏதோ தண்ணீரில் விழுவது போலவும் தட்டுவது போலவும் அடிப்பது போலவும் தோன்றிற்று. படகுதான் செல்கிறதா அல்லது யாராவது நீந்தி வருகிறுரோ ?

சந்திரன் தன்னால் இயன்றவரை உதவிதான் செய்தான். ஆனாலும் ராய்க்கு நன்ருகத் தெரியவில்லை. என்ருலும் அவன் முன் எச்சரிக்கையாக அங்கங்கே இருக்கிற சேனாதிபதிகளிடம் சொல்லி, ஆயிரம் வீரர்களை இரண்டாம் பேருக்குத் தெரியாமல் சேர ஏற்பாடு செய்தான்.

சமுத்திரம் அகழுடன் சேரும் இடத்தில் ஒரு மாந்தோப்பு இருந்தது. அதில் மனிதர்கள் குழுமி இருந்தது தெரிந்தது. அந்தச் சமயத்தில் கோட்டையை எதிர்ப்பார்கள் என்று நம்பமுடியவில்லை. ஏன் என்ருல் சேனை அகழிலிருந்து வெகுதூரம் பின்னடைந்திருந்தது. ஆகவே அவர்கள் வேறு ஏதோ செய்துகொண்டிருக்கிருர்கள் என்பது மட்டும் நிச்சயம்.

சமுத்திரத்தில் வெகு தூரத்தில் ராவ் கமாலாக்காணியினுடைய படகுகள் இருந்தன. அவைகளில் சில பிரபாசி பக்கம் வந்துகொண்டிருந்தன போலத் தோன்றின. இவர்கள் அதைத் தடுத்து நிறுத்தத்தான் முயலுகிருர்களா? அல்லது இந்த முயற்சி யவன சேனையினுடையதேயல்லவா ?

இப்பொழுது என்ன செய்வது ? பிறர் அறியும் வண்ணம் சப்தம் செய்கிறதா ? தீவட்டியைக் காட்டியே வரும் படகுகளை நிறுத்த முயல்வதும் சரியல்ல. எதிரிகள் அதை அறிந்தால் உண்மையிலே ஆபத்தாய்விடும்.

இப்படி எல்லாம் யோசித்த ராய் 'சரி, இனி பயத்துடன் போராடவேண்டியதுதான்' என்று முடிவுசெய்து காரா, நீரா என்ற இரு வீரர்களை அழைத்தான். அவர்கள் நீந்துவதில் மிகவும் வல்லவர்கள். அவர்கள் இருவரையும் சுவரின் மேலிருந்து கயிற்றைக் கட்டி அதன் வழியாகக் கீழே அகழியில் இறக்கிவிட்டான். அவர்களைப் பிரபாசி வரும் கமாலாக்காணியிடம் சென்று சமாசாரத்தைச் சொல்லிவர அனுப்பினுன்.

காராவும், நீராவும் கிட்டத்தட்ட ஐம்பது கஜ தூரம் சென்றபிறகு ராய்க்கு மாந்தோப்பு விஷயம் என்ன என்று தெரிந்துவிட்டது. வீரர்கள் நீந்தும் சாதனங்களை ஒரு வரிசையில் சேர்த்து வைத்துக்கொண்டிருந்தனர்; ஒரு பாலம் தயாராகிக் கொண்டிருந்தது.

ராய்க்கு ஒரே கவலையாய்ப் போயிற்று. வாசல் வழியாக மனிதர்களை அனுப்பலாம் என்ருல் அவர்கள் அங்கே போய்ச் சேருவதற்குள் அழிக்கப்பட்டுவிடுவர். எதிரிகள் பாலம் தயார்செய்து அதற்கிடையில் அந்தப்படகும் வந்து மாட்டிக்கொண்டால் பிரபாசிக்கு வரும் கேட்டைப்பற்றிக் கேட்கவேண்டாம்.

ராய், அந்த வீரர்கள் அந்தப்பாலத்தை ஒருவாறு முடித்துவிட்டுப் போகும்வரை காத்திருப்பது தான் நல்லது என்று முடிவு செய்தான். எதிரிகள் பல பலகைகளையும் கட்டு மரங்களையும் சேர்த்து ஒரு பெரிய பாலம் அமைத்து, அதன் முனையை அகழின் மறுகரையில் பூமியில் பெரிய முளைகள் அடித்து அவைகளுடன் கட்டிவிட்டனர். யுத்தம் ஆரம்பித்தவுடன் அந்த மிதக்கும் பாலத்தை வேண்டிய இடத்துக்கு இழுத்து வருவதாக அவர்கள் முடிவு செய்திருந்தனர் என்றும் தெரிய வந்தது. அதை முழுக்கிவிடவேண்டும். ஆனால் எப்படிச் செய்வது ? அதை எண்ணி ராய் மிகவும் கவலைப்பட ஆரம்பித்தான்.

பிரபாசி வந்த படகு வெகு தூரத்திலேயே வந்து நின்றுவிட்டது. அதிலிருந்து இருவர் கீழே இறங்குவதை ராய் பார்க்கமுடிந்தது. அவனுக்குக் கொஞ்சம் கவலை நீங்கிற்று. காராவும் நீராவும் போய்ச் சேர்ந்து சமாசாரம் சொல்லிவிட்டனர். நல்ல வேளையாக அந்தப் படகு தப்பி விட்டது.

வீரர்கள் முளை அடித்துக்கொண்டிருக்கும் போதே தொலைவில் வரும் படகின் துடுப்புச் சத்தம் கேட்டது. ராய் கண்களை வருத்திக் கவனித்தான். ஆனால், ஒன்றும் தெரியவில்லை. சற்று நேரம் கழிந்து அந்தச் சத்தம் நின்றுவிட்டது. எதிரிகள் மிதக்கும் பாலத்தைக் கட்டிவிட்டு அப்பால் போனதும், 'என்ன ஆனாலும் சரி' என்று தீர்மானித்து ராய் ஐம்பது வீரர்களை அழைத்து அகழில் இறக்கிவிட ஏற்பாடு செய்தான்.

கயிறுகளைக் கட்டி, கோட்டை மேலிருந்து இறக்கி வீரர்களும் இறங்க ஆரம்பிக்கும்பொழுது சேஷநாகம்போல் நீண்டு கிடந்த அந்தப் பாலம் அசைய ஆரம்பித்தது. பகுதிகள் பிரிய ஆரம்பித்தன. எல்லாம் ஒன்றன்பின் ஒன்ருய் வரிசை வைத்து, ஓடும் அகழ் நீருடன் சென்று சமுத்திரத்தை அடைந்து மறைந்தன.

ராய்க்கு இதெல்லாம் என்ன கனவா என்று தோன்றிற்று. கண்களைக் கசக்கிக் கசக்கிப் பார்த்தான்.

பாலம் வீணய்ப்போனதைப் பார்த்ததும் மாந்தோட்டம் சலசலப்புக் கொடுத்தது. ராய் சிரித்துக்கொண்டான். போலாநாதன் கிருபை என்னென்ன அற்புதச் செயல்களைச் செய்து காட்டுகிறது !

இவ்வளவில் கோட்டையின் கீழே மூன்று மனிதர்கள் நீந்தி வந்து, கரையேறிப் படியேறி வர ஆரம்பித்தனர்.

"பாபூ !" என்றழைத்தான் காரா. மற்ற வீரர்கள் அந்தக் குரலைப் புரிந்துகொண்டனர். மேலிருந்து கயிறுகள் தொங்கவிடப்பட்டன. இருவருக்குப் பதில் மூவர் ஏறிவந்தனர்.

ராய் காராவை இது யார் என்று கேட்டான்.

"என்னைத் தெரியவில்லையா?" என்று கேட்டான் சாமந்த சௌஹான். ராய் இறுகத் தழுவிக் கொண்டான்.

"சௌஹான் அரசே! நீங்கள்தான் இந்தப் பாலத்துக்கு வெடி வைத்தீர்களா? சௌஹான்! நீங்கள் இன்று பிரபாசிக் கோட்டையைக் காப்பாற்றிவிட்டீர்கள்."

"நான் நீந்தி வரும்போது இந்த மிதக்கும் பாலத்தைப் பார்த்தேன். விஷயம் ஒருவாறு விளங்கிவிட்டது. பிறகு நாங்கள் மூவரும் பிணைத்திருந்த அதன் கயிறுகளை அறுத்துவிட்டோம்."

"சௌஹான் வீரா, நல்லது செய்தீர்; நான் என்ன செய்வது என்று பயந்துகொண்டேயிருந்தேன்."

"என்னை வாழ்த்துகிறீர்களே. உங்களை எல்லாம் என்னசொல்லி வாழ்த்துவது? இன்று பகலில் நடந்தது முழுவதும் கேட்டேன். பீமதேவ மகாராஜா எங்கே?"

"அவர் இன்று மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறார். இந்தச் சமயம் கஷ்டப்படுத்தக்கூடாது. அது இருக்கட்டும். நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?"

"ராய்! நீங்கள் எல்லோரும் பட்டண் விட்டு வந்தபிறகு நான் குரு நந்திதத்தன் மற்ற மூன்



நூறு வீரர்கள் எல்லோரும் காட்டில் நுழைந்து உட்கார்ந்திருந்தோம். மகமூத் அங்கே வந்தான், பட்டண் காலியாயிருப்பதைப் பார்த்து மனம் ஒடிந்தான். பிறகு நான் கோகாபாபாவின் பூதக் கதையைச் சேனைகளிடையே பரப்ப ஏற்பாடு செய்தேன். மகமூத் பிறகுதான் இங்கே வந்தான்."

"பட்டண் என்ன ஆயிற்று?"

"அவன் போகும்போது பீமதேவருடைய சகோதரன் துர்லபசேன் வந்தான். மகமூத் காலில் விழுந்தான். மகமூத் அவனைப் பட்டண் அரசனுக்கிவிட்டு ஐந்நூறு ராஜபுத்திர வீரர்களை யும் உதவிக்குத் தந்தான். திரும்பி வரும்வரை பட்டணைப் பார்த்துக்கொள் என்று உத்தரவிட்டு வந்துசேர்ந்தான்"

"அப்படியா, பிறகு என்ன ஆயிற்று?"

"பிறகு என்ன? என்பாடு சுலபமாயிற்று. துர்லபசேன் காலைமுதல் மிகவும் சந்தோஷமாய் ராஜ்யபாரம் செலுத்த ஆரம்பித்தான். நடுப் பகலில் நந்திதத்தன் கோகாபாபாவின் பூதத் திடம் பயந்து துர்லபசேன் காலில் விழுந்தான். மறுநாள் அருகேயுள்ள கிராம மக்கள் எல்லோ ரும் அதே அழுகையை அழுதுகொண்டு வந்து சேர்ந்தனர். பூதத்தின் கதையைக் கேட்டு, பட்டண் வீரர்கள் பயந்தழிய ஆரம்பித்தனர். மகாராஜா துர்லபசேனன் கோட்டைக் கதவை மூடித் தாளிட்டு உள்ளே உட்கார்ந்து கொண்டான்."

"ஆஹா-ஹா ஹா.........பிறகு"

"மூன்றும் இரவு நந்திதத்தன் கண்ணுக்குப் பூதம் தோன்ற ஆரம்பித்தது. வீரர்கள் பயந்து கொண்டு வீடுகளில் நுழைந்துகொண்டனர். கோட்டை வாயிலில் நந்திதத்தன் பூதத்தை விரட்ட யக்ஞம் செய்ய ஆரம்பித்தான். அனை வரும் அங்கே கூடினர்.

"ஊம். அப்புறம்?"

"பிறகு நடு ராத்திரியில்—யாரோ கதவைத் தட்டினர். எல்லோரும் நடுங்க ஆரம்பித்தனர். கோகாபாபாவின் பூதமே உள்ளே வர ஆசைப் பட்டது. தடுக்கவும் யாருக்கும் தைரியம் இல்லை. பூதம் உள்ளே வந்தது. நந்திதத்தன் வரவேற் ருன். கிராமத்து ஜனங்கள் எலாம் வீரர்களாக மாறினார்கள். கோட்டை பூதத்தின் கையில் வந்துவிட்டது. பிறகு கோகாபாபா தண்டோரா போட்டுவிட்டார். 'கோட்டை என் கைவசம் வந்துவிட்டது. பூதங்கள் மட்டும்தான் இங்கே தங்கலாம்!' என்று. சில யவன வீரர்கள் இருந்தனர். அவர்களையும், எதிர்த்த ராஜ புத்திர வீரர்களையும் ஒழித்துக் கட்டிவிட்டு மற்றவர்களையும் நம் கட்சியில் சேர்த்துக் கொண்டுவிட்டோம்."

"துர்லபசேனன்?"

"அவன் கோகாபாபாவின் காலடியில் விழுந்து விட்டான். இனி எந்தக் காலத்திலும் ராஜ்ய ஆசைப்படுவதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்தான். பிறகு அவனையும் அவனுடைய தோழர்களையும் காட்டுக்கே விட்டுவிட்டோம்."

"சபாஷ். சபாஷ். சௌஹான்! பிறகு?"

"ஹாலா மேதாவிடம் பட்டணை ஒப்புவித்து, பீமதேவன் பெயரால் சேனை சேகரித்திருக் கிருேம். மேதாவும் கம்பாதத்திலிருந்து சேனை சேர்த்துக்கொண்டு வந்திருக்கிருர். கோகாபாபா வின் பேச்சைக் கேட்டுக்கொண்டு காட்டில் பதுங்கியிருந்த வீரர்களும் வெளியேறி வந்துவிட் டனர். மேதா உஜ்ஜயினிக்கும் சொல்லி அனுப்பி யிருக்கிருர். உதவி கிடைத்துவிடும் என்ற நம் பிக்கையும் இருக்கிறது. மகமூத் இங்கே வருவ தற்கு முன்ஞலேயே உஜ்ஜயினி சேனை அவனைத் தொடர ஆரம்பித்திருக்கும்."

"அந்தச் சேனைக்குச் சேனுதிபதி யார்?"

"தாமோதர மேதா முதலில் முடியாது என்ருர். பிறகு ஒப்புக்கொண்டுவிட்டார்."

"நீங்கள் ஏன் ஆகவில்லை?"

"மகமூத்திடம் என் தந்தை அவர் தந்தை எல் லோரும் சண்டையிட்டு விட்டனர். என்முறை இன்னும் வரவில்லை. நான் அங்கிருந்து கம் பாதம் சென்றேன்."

"பிறகு கோகாபாபா இங்கே வந்தாராக்கும்" என்று சொல்லி ராய் சிரித்தான்.

சாமந்தன் மனம் கொஞ்சம் அழுந்திற்று. "ஆம் வீரமும் பெருமையும் எங்கிருக்கிறதோ அங் கெல்லாம் கோகாபாபாவும் இருக்கிருர். உங்க ளுக்கு வேண்டிய பொருள்களை எடுத்துக்கொண்டு இங்கே வந்துசேர்ந்தேன்." என்று சொல்லி, சாமந்தன் சமுத்திரத்தில் சுட்டிக் காட்டினுன். பிறகு மீண்டும் தொடர்ந்து, "நான் ராவ் கமா லாக்காணியைப் பார்த்தேன். அவர் அங்கேயே உட்கார்ந்திருக்கிருர்..........."

"சரி, வாரும் போலாநாதன் நான்கு பக்கமும் நமக்கு உதவி செய்கிருர். இந்தக் கஜினி அமீருக் கும் நம்முடைய குஜராத்திக் கைத்திறனைக் காட்டிவிடலாம்,"

"சரி, வாருங்கள் போகலாம். காலை ஆவதற் குள் கப்பலுக்குப் போய்ச் சேர்ந்தாகவேண்டும். அரசரை எழுப்பியாவது பார்த்துவிட்டுப் போகி றேன்."

இரு வீரர்களும் மீண்டும் தழுவிக்கொண்டனர். ஒரு வீரனை வழிகாட்ட அழைத்துக்கொண்டு

சாமந்தன் அரசன் இருக்கைக்குச் செல்ல ஆரம்பித்தான்.

உள் கோட்டையில் வந்தபோது சாமந்தனுடைய பழைய எண்ணங்கள் உயிர்த்தெழுந்தன. அவன் உட்கார்ந்து அழுத தூணைப் பார்த்தான். குண்டலா ஞாபகம் வந்தது. திரிபுர சுந்தரி கோயில், மகாமாயைக்கு எடுத்த ஆரத்தி, அதை ஏற்ற பெண்ணுடன் நடந்த பேச்சில் கழிந்த இரவு......ஆகா! என்ன இன்பம், புளகம், சிரிப்பு உல்லாசம்!

புயலுடன் போட்டியிடும் அவன் வாழ்க்கையில் அந்தப் பெண்தான் ஒரு தங்குமிடமாயிருந்தாள். அவன் மனதுக்கு, மனித சமூகத்தின் சம்பந்தமே அற்று நின்ற அவனுக்கு அவள் ஒரு அமிர்தச் சொட்டுப்போல் வந்தவள்.

அருகே சுற்றும் அழிவுப் புயலிடையே, துயர் தரு எண்ணங்களில் சுடுமணற்காட்டில் கொஞ்சமாவது இன்ப எண்ணங்களின் குளுமை வேண்டும் என்றால் அவனுக்கு அவளைப்பற்றித்தான் எண்ண வேண்டியிருந்தது. அவன் கம்பாதம் சென்றபோது தேவதாசிகள் எல்லோரும் அங்கே வந்துள்ளனர் என்று கேள்விப்பட்டான். ஒரு ஆசை எழுந்து அலை அடித்தது. ஆனால் சௌளா மட்டும் வரவில்லை என்றதும் அவன் மனம் களைத்து அடங்கிவிட்டது. அதுமுதல் பிரபாசி வருவதற்கு அவன் மனம் தான் எவ்வளவு துடித்தது! முதல் கடமை மகாராஜாவைப் பார்க்கவேண்டியதுதான் என்பதற்காகவே அவன் அவரிடம் போனான்.

வழிகாட்டிய வீரன் அரசன் இருப்பிடத்தைக் காட்டி நின்றான், சாமந்தன் படியேறிச் சென்றான். எல்லாவற்றிற்கும் மேற்படியில் வீரா சாவடா உருவிய வாளுடன் நின்றான். "யார் நீ?" என்று அதட்டினான்.

"நான்தான் சாமந்தன். வீரா, மகாராஜா விழித்திருக்கிறாரா?"

"பாபூ. நீங்களா.?" வீரா ஆச்சர்யப்பட்டுக் கேட்டான்.

"ஆம். நான் கம்பாதத்திலிருந்து கப்பலில் வந்தேன். பிறகு நீந்திக் கோட்டை சேர்ந்து மகாராஜாவைப் பார்க்க வந்திருக்கிறேன். எனக்குச் சீக்கிரமே திரும்பவேண்டும்." என்று சொல்லி மேலேற ஆரம்பித்தான்.

வீரா வாளை இடையில் நீட்டி, "இல்லை பாபூ!" என்றான்.

சாமந்தன் முகம் கறுத்தது "ஏன்? நான் சொல்லுகிறேன்—விடு வழியை, கொஞ்சம் அவசியமான விஷயம் பேசவேண்டும்."

"கொஞ்சம் நில்லுங்கள் பாபூ. நான் சென்று எழுப்புகிறேன்."

"நான் சென்று எழுப்பிக்கொள்கிறேன்."

"இல்லை பாபூ. எஜமான் தனியாக இல்லை."

"பின் இந்தச் சமயம் யார் இருக்கிறார்கள் கூட?"

வீரா சிரித்தான். சாமந்தன் கவனித்தான், "யாரப்பா அப்படி?"

"சௌளா, தேவதாசி!"

சாமந்தன் காதுகள் இதைக் கேட்டதும் பிரம்மாண்டம் முழுவதும் அவன் தலையில் விழுந்து விட்டதுபோல் இருந்தது. அப்படியே படியில் உட்கார்ந்துவிட்டான்.

"வீரா, அவர் தூங்கி எவ்வளவு நேரம் ஆயிற்று?" சாமந்தன் குரல் நெருப்பில் காய்ந்து நெருப்பாய் வந்தது.

"ஐந்தாறு நாழிகைகள் ஆகியிருக்கும்."

"சரி, தூங்கட்டும் போ" என்றான் சாமந்தன். அவன் குரலில் வருத்தம் நனைந்து உலர்ந்து கொண்டிருந்தது.

[தொடரும்]



## "எனது ஹாஸ்டலில் ஞாயிற்றுக்கிழமையானது பாலுட்ரின் கிழமை........

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் 3 நாட்கள் உட்கொண்டால் மலேரியா குணமாகிவிடும். வாரம் ஒரு மாத்திரை சாப்பிட்டால் மலேரியா புதியதாக தொத்திக் கொள்ளாமல் தடுக்கலாம். இது உண்மை என்பது எங்களுக்கெல்லாம் தெரியும். ஆனால் தேகசுகம் நன்றாயிருக்கும்போது வாராவாரம் மாத்திரை சாப்பிடுவதை மறந்துவிடுவதும் இயல்பே. ஆகவே என் ஹாஸ்டலில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காலையில் எல்லோருமாகச் சேர்ந்து **பாலுட்ரின்** சாப்பிடுகிறோம்."

ஒரு நாளைக்கு ஒரு **'பாலுட்ரின்'** மாத்திரை விகிதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை விகிதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்விட்டு நேரிடும் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது **'பாலுட்ரின்'**. சிறுவர்கள், வயோதிகர்கள, கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.




# 'பாலுட்ரின்'

**மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.**

குணத்தின் ICI சின்னம்

**இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,**

கல்கத்தா பம்பாய் சென்னை கொச்சி புதுடில்லி கான்பூர்.

ICX-4 TM



இணையில்லா
வாசனை
தயாரிப்புகள்




டி.எஸ்.ஆர்
அரைக்கீரை விதை தைலம்
சந்தனாதி
தைலம்
கோகுல் ஹேர்
ஆயில்







FAS.

டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

The Cauveri Colour Press, Kumbakonam.